# ஆவணம்

## இதழ் 30

# AVANAM

## VOL - 30

சு. இராசகோபால்
பதிப்பாசிரியர்




தமிழகத் தொல்லியல் கழகம்,
தஞ்சாவூர்.

ஆவணம்: 2019
Avanam, Journal of the Archaeological Society, Thanjavur.


# தமிழகத் தொல்லியல் கழகம்

## செயற்குழு



ஆவணம் இதழுக்கு கட்டுரைகளை ஒருங்குகுறியில் (Unicode Latha)
மின்னஞ்சலில் அனுப்ப வேண்டிய முகவரி - editoraavanam@gmail.com
இணையதளம்: www.aavanam.org

The publication of this Journal has been financailly supported by the Indian Council of Historical Research. The responsibility for the facts stated or opinions expressed is entirely of the author and not of the ICHR.

- Editor

அட்டைப்படம்: பெரிய நெசலூர் கொற்றவை, எண்: 22
அமைப்பு: பெ. தாமரை

# பொருளடக்கம்

## கல்வெட்டுகள்

**தொல்லியல்**

# கல்வெட்டுகள்

## 1. தமிழ்-பிராமி கல்வெட்டுள்ள மரூர் செக்கு

**ஜான் பீட்டர், தாளவாடி, சீனிவாசன், ஓமலூர்;**
**சக்திபிரகாஷ், ஈரோடு; வே.அ. வேலுச்சாமி, சென்னை.**

**காலம்:** பொ.ஆ. 3ஆம் நூற்றாண்டு

**இடம்:** மரூர், தாளவாடி, ஈரோடு மாவட்டம்

**செய்தி:** "கோனு" என்ற ஈரெழுத்துகள் கண்ணாடி பிம்ப முறையில் 4 அடி உயர சதுரமான செக்கில் பக்கவாட்டில் தமிழ்-பிராமி எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

இப்பகுதியை ஆண்ட சிற்றரசன் கொடுத்த கொடையைக் குறிக்க 'கோன்' என்பது இப்பகுதி மொழி வழக்கிற்கேற்ப 'கோனு' என்று பொறிக்கப்பட்டுள்ளது. தமிழ் பிராமி கல்வெட்டுகளில் குன்றக்குடி கீழவளவு போன்ற இடங்களிலும் கண்ணாடி பிம்ப முறையில் கல்வெட்டுகள் உள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

இதே மாவட்டத்தைச் சார்ந்த அறச்சலூரில் கிடைத்த நான்காம் நூற்றாண்டைச் சார்ந்த இசைக்கல்வெட்டே மிகப் பழமையானதாகக் கருதப் பட்டாலும், இந்த "கோனு" என்ற செக்கு கல்வெட்டு அதற்கும் முந்தையது. கிட்டத்தட்ட 1700 ஆண்டுகள் பழமையானது என்ற சிறப்பைப் பெற்றுள்ளது.



நன்றி: புலவர் செ. இராசு, முனைவர் சு. இராஜகோபால்

# 2. வேப்பூர் செக்கடி [செக்குக்கல்வெட்டு]

ச.பாலமுருகன், மதன்மோகன்,
திருவண்ணாமலை.

**இடம்:** தண்டராம்பட்டு வட்டம், சாத்தனூர் அணை நீர்பிடிப்பு பகுதியில் உள்ள வேப்பூர் செக்கடி

**காலம்:** 10ஆம் நூற்றாண்டு

**அரசர்:** பராந்தக சோழன், யா: 23. பொ.ஆ. 930.

**செய்தி:** திருநல்லூரான் செய்து கொடுத்த செக்கு.

1. ஸ்வஸ்திஸ்ரீ மதிரைகொண்ட கோப்பரகேய்சரி
2. பன்மர்க்கு யாண்டு இருப
3. த்து மூன்றாவது [அள்ளு சக்கள்ள] மாரன் திருநல்லூரான்
4. இடுவிச்ச செக்கு



# 3. பாளையம் செக்குக் கல்வெட்டு

**ம. செல்வபாண்டியன், கீழ்பாலூர்.**
**வே.செவ்வேள், அரியலூர்.**

**இடம்:** பெரம்பலூர் மாவட்டம், பாளையம் கிராமத்தில் உள்ள கிறிஸ்தவ அருட்சகோதரிகள் இல்லம் அருகே உள்ளது.

**காலம்:** பொ.ஆ. 1860

**செய்தி:** இதன் பக்கவாட்டிலும் மேல்புறத்திலும் இரு கல்வெட்டுகள் உள்ளன. மறுபுறத்தில் சூலம் பொறிக்கப்பட்டுள்ளது. செக்கின் அளவு: நீளம் 199 செ.மீ. விட்டம் மேற்புறம் 94 செ.மீ. கீழ்புறம் 67 செ.மீ. குரும்புலியூர் (குரும்பலூர்) பஞ்சநதீஸ்வரர் - தர்மம் பரதணி அம்மன் நித்திய அபிஷேகத்திற்காக மேற்படி ஊரில் இருக்கும் ஆலம்பாடி வீரம ரெட்டியார் குமாரன் சுப்பி ரெட்டியார் என்பவர் இந்த கல் செக்கைச் செய்வித்து வழங்கினார்.

**பக்கவாட்டில் உள்ள கல்வேட்டு**

1. சுப மஸ்து ஸ்ரீ சாலிவாகன
2. சகாற்தம் 1772
3. யாற்தம் 4941
4. யிதின் மேல் செல்லா நின்
5. ற ரவுத்திரி வருடம் தைய் மாதம் 14 தேதி
6. வெள்ளி கிளமை குரும்புலியூர்
7. பஞ்சனதி யிஷ்பறர் தற்ம
8. சம்பரதனி அம்மன் நித்திய
9. மும் அபிஷேகத்துக்காக ஷை யூ
10. றில் யிருக்கும் ஆலம்பா
11. டி வீறம ரெட்டியாற் குமா
12. றன் சுப்பி ரெட்டியாற் சில
13. செக்கு செய்விச்சு செகூ
14. ? : அரைப்படி யென்னை வீ
15. தம் சற்வ தற்மம் யிதுக்கு முன்
16. நடந்து வந்த பிறகாறம்
17. யாதொரு ஆஷ்செபணையி
18. ல்லாமலும் வேறவும்
19. யிந்தப் படிக்கி தற்மத்து
20. க்லீக செய்து வச்ச உபயம்

**சேக்கின் மைல்பகுதியில் உள்ள கல்வேட்டு**

(ஸ்ரீ பஞ்சநதி) யீஷ்பறருக்கு ஆலம்பாடி வீறம ரெட்டியாற் குமாறன் சுப்பி ரெட்டியாற் உபயம் செக்கு 1க்கு அரைபடி (இ) ட்டு வறவும்.



நன்றி: உப்போடை திரு ஆ. கார்த்திகேசு, முனைவர் சு. இராசகோபால்.

# 4. சத்திரமனை செக்குக் கல்வெட்டு

**ம. செல்வபாண்டியன், கீழ்பாலூர்.**
**வே.செவ்வேள், அரியலூர்.**

**இடம்:** பெரம்பலூர் மாவட்டம், சத்திரமனை கிராமம், அரசு உயர்நிலைப்பள்ளியின் பின்புறம் இந்த கல் செக்கு உள்ளது. செக்கின் அளவு : தரைக்கு மேல் உயரம் 69 செ.மீ. : விட்டம் 100 செ.மீ.)

**காலம்:** பொ.ஆ. 1940

**குறிப்பு:** 01.05.2019 அன்று நடைபெற்ற கள ஆய்வில் உதவி புரிந்த உப்போடை திரு. ஆ. கார்த்திகேயன் அவர்களுக்கு நன்றி.

**செய்தி:** பெரம்பலூர் தாலூக்காவில் உள்ள சத்திரமனை, கிராமத்துக்கு த. செல்லம்மாள் என்பவர் கல்செக்கினை வழங்கி உள்ளார்.

1. 1940 ஆகஷ்ட்டு மாதம் 30 தேதி
2. விக்கிரமா வருடம் ஆவணி 16 தேதி
3. பெ.தா சத்திரமனை கிராம
4. த்துக்கு த. செல்லம்மாள்
5. உபயம்



# 5. ராயண்டபுரம் இராஜராஜன் கல்வெட்டுகள்

த.ம.பிரகாஷ், ச.பாலமுருகன்,
மதன்மோகன்,
திருவண்ணாமலை.

**5:1**

**இடம்:** திருவண்ணாமலை மாவட்டம் தண்டராம்பட்டு வட்டம் ராயண்டபுரம் கிராமத்தில் தென்பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ள சிவன்கோயில் அருகில் உள்ள பாறைக்கல்வெட்டு

**காலம்:** முதலாம் ராஜராஜன், யா: , பொ.ஆ.

**செய்தி:** வாணகோப்பாடிப் பெண்ணைத் தென்கரை இராஜகண்டபுரத்தில் இருந்த காந நங்கை என்ற தெய்வத்திற்கு ஒரு நந்தாவிளக்கு ஏற்ற 96 ஆடுகள் மும்முடிச்சோழ வாணகோவரையன் என்ற தொங்கல மறவன் கொடுத்த செய்தி. இவனது விருதுப்பெயரை நோக்க இவன் ராஜராஜன் காலத்தில் இப்பகுதியில் இருந்த சிற்றரசன் என்று தெரிகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராஜராஜ
2. கேசரிபந்மற்கி யாண்டு எ ஆவ-
3. து வாணகோப்பாடிப் பெ(ண்)
4. ணைத் தென்கரை இராஜகண்டபு-
5. ரத்தில் காந நங்கைய்க்கு ஸ்ரீ(மு)
6. ம்முடிச்சோழ வாணகோவரை-
7. யனாகிய தொங்கலமறவன் வை-
8. ய்த்த திருநொந்தா விளக்கு ஒன்று
9. ஒன்றிநால் ஆடு 96 இது பந்மா
10. ஹேச்₀வர ரக்ஷை



**5:2**

**இடம்:** திருவண்ணாமலை மாவட்டம் தண்டராம்பட்டு வட்டம் ராயண்டபுரம் கிராமத்தில் தென்பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ள சிவன்கோயில் அருகில் உள்ள பாறை

**காலம்:** முதலாம் ராஜராஜன், யா: 12, பொ.ஆ. 997

**செய்தி:** வாணகப்பாடிப்பெண்ணைத் தென்கரை இராஜண்டபுரத்தைச் சேர்ந்த கோசக்கர எழுநூற்றுவர் என்ற சமூகக் குழுவினர் இவ்வூர் திருக்குராங்கோயில் சிவபெருமானுக்கு இரண்டு நந்தாவில்க்கெரிக்க 192 ஆடுகள் கொடுத்த செய்தி.

1. ஸ்வஸ்திஸ்ரீ சாலைகலம-
2. றுத்த கோவிராஜராஜகேசரி பந்மற்கு யா-
3. ண்டு 12ஆவது வாணகோப்பாடிப்
4. பெண்ணைத் தென்கரை இராஜக-
5. ண்டபுரமுடைய கோசக்கர எழுநூற்று-
6. வரோம் இவ்வூர்த் திருக்குராங் கோ-
7. யில் மஹாதேவர்க்கு வய்த்தத் திரு-
8. நொந்தாவிளக்கு இரண்டு இரண்டிநால்
9. ஆடு 192 இது பந்மாஹேச்0வர ர-
10. கைஷ



**5:3**

**இடம்:** திருவண்ணாமலை மாவட்டம் தண்டராம்பட்டு வட்டம் ராயண்டபுரம் கிராமத்தில் தென்பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ள சிவன்கோயில் அருகில் உள்ள் பாறைக்கல்வெட்டு

**காலம்:** முதலாம் ராஜராஜன், யா: 7, பொ.ஆ. 992

**செய்தி:** இராசகண்டபுரத்து இ(ரு*)ந்து வாழும் மன்றாடி(இடையன்) அமத்தனின் மகன் காமன் என்பவர் இவ்வூர் இறைவன் திருக்குரால் ஆள்வார்க்கு

விளக்கெரிக்க 30 ஆடுகள் கொடுத்த செய்தி

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராச
2. [கே]சரி பந்மற்கி யாண்டு 6றாவது வாண-
3. கோப்பாடிப் பெண்ணைத் தென்கரை இரா-
4. சகண்டபுரத்து இ(ரு*)ந்து வாழும் மன்றாடி
5. அமத்தன் மகன் காமன் திருக்குராலாள்வா-
6. ர்க்கு வைத்த ஆடு(30) ப்பது
7. இவை பந்மாஹே[ச்௦வ]ரார்திகைஷ



நன்றி: முனைவர் சு. இராசகோபால், ஸ்ரீதர், சுதாகர், சேது

# 6. மரவனூர் - தலைவாய் கல்வெட்டு

**வி.ப.யதிஸ்குமார், திருச்சி**
**அ.சங்கர், தஞ்சாவூர்**

**இடம்:** மரவனூர் (பெரியபட்டி கிராமம்),

திருச்சி மாவட்டம், மணப்பாறை வட்டம், மரவனூர் (பெரியபட்டி கிராமம)

**காலம்:** பொ.ஆ : 8 ம் நூற்றாண்டு

**செய்தி:** குளத்தின் தலைவாய் மூன்று ஆண்டுகளாக பழுதடைந்த நிலையில் கிடந்ததை உடையான் சாத்தங்கிளன் பழுது நீக்கிய செய்தி.

1.... ........ய... ...... .....
2. .... .... யாவது ..... ...... .... (செரு).....
3. .......ளாநின்ற காலத்து வெ .....
4. ருர்சா. . ருளா நின்றகாலது அடியு .....
5. லகலத்து தலைவாய் கெட்டுகிடக மூவாட்டை உள்
6. கெட்டு கிடந்த தலைவாய் கண்டான்இறைய்ய-
7. னூராலங்காணிஉடையான் சாத்தங்கிளன்



# 7. பல்லவர் கால எடைக்கல்

**ஆறுமுக சீதாராமன், தஞ்சாவூர்.**

எனது சேகரிப்பில் உள்ளது "ஸ்ரீஜயமெரு" என்று பல்லவ கிரந்த எழுத்தில் பொ.ஆ. 8- ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் பொறிக்கப்பட்டுள்ளது. ஜயமேரு என்பதற்கு வெற்றிமலை என்று பொருள் கொள்ளலாம். மிகவும் பழமையான எடைக்கல் இப்பொழுதுதான் முதன்முதலாக தமிழகத்தில் கிடைத்துள்ளது. எடை: 80 கிராம், உலோகம்: வெண்கலம்.

தஞ்சை பெரியகோயில் இராஜராஜன் காலத்தில் நிறுக்கும் எடைக்கற்கள், தட்சணமேரு விடங்கர் காசுக்கல் எனவும், ஆடல்வல்லான் எனவும் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டன. அக்காலத்தில் அளக்கும் கருவிகட்கும், நிறுக்கும் கருவிகட்கும் அமைந்த பெயர்கள் கடவுளிடத்தும், அடியார்களிடத்தும், அரசர்களிடத்தும் மக்கள் கொண்ட பற்றை நமக்குக் காட்டுகின்றன. இந்த எடைக்கல் தற்போதுள்ள கணக்கின்படி பார்த்தால் பத்து பவுன் எடை உள்ள கல்லாகத் தோன்றுகிறது.



# 8. பொட்டனேரி வட்டெழுத்து கல்வெட்டு

**சி.வீரராகவன், விழுப்புரம்.**
**பொன். வெங்கடேசன, ஆறகழூர்.**

**இடம்:** சேலம் மாவட்டம் மேட்டூர் வட்டம் பொட்டனேரி என்ற கிராமத்தில் உள்ள வரதராஜபெருமாள் கோயிலில் உட்புறம் நடப்பட்டுள்ள கல்

**காலம்:** 8 அல்லது 9 ஆம் நூற்றாண்டாக கருதலாம்.

**செய்தி:** 70 செ.மீ உயரமும், 65 செ.மீ உயரமும், 10 செ.மீ தடிமனும் உள்ள கல் முன்பகுதி சிதைந்துள்ளது. மூன்று நிலங்கள் வாணன்மாரமன் கொடுத்தமை.

1. . . . .
2. . . . . நிஞ்சு
3. . . . . ம் பெருயகல்லிய கு
4. டியும் சிறிய கலணியகு
5. டியும் மூன்று நிலமு
6. குடுத்தான் வாணன் மாரமன்
7. இது காத்தான் அடிமேல்
8. லின.

---

நன்றி மேச்சேரி அன்புமணி.

நன்றி முனைவர் சு. இராசகோபால்.

# 9. ஐவர் மலை வட்டெழுத்துக் கல்வெட்டு

**சி.வீரராகவன், விழுப்புரம்**
**து.சுந்தரம், கோவை**

**இடம்:** உடுமலை அருகில் உள்ல ஐவர் மலையில், சுனைக் குளத்தின் கீழ்ப்பகுதியில் அமைந்துள்ள சமதளப் பாறைப்பரப்பு.

**காலம்:** பொ.ஆ. 8 - 9ஆம் நூ.ஆ.

**செய்தி:** பூவேரி அடிகள் என்னும் சமணத் துறவி, தவமிருந்து உயிர் நீத்த இடத்தைக் குறிக்க எழுதப்பட்ட கல்வெட்டாகலாம்.

1. . . . வடபள்ளி (வை) . . .

2. . . . (டி) . ன் கந . . .

3. . . . தர் மாணாக்கர் (அ)

4. . . . ள் (பூ)வேரி அடிகள் [நி]

5. . . . கி . . .

நன்றி: பேரா. எ. சுப்பராயலு



# 10. ஆந்திர மாநிலத்தில் புதிய தமிழ்க் கல்வெட்டுகள்

ப. த. நாகராஜன், சென்னை.

**10:1**

**இடம் :** ஆந்திர மாநிலம், சித்தூர் மாவட்டம், காளகஸ்தி மண்டலத்தில் வாகைவேடு என்னும் ஊர் வயல்

**காலம் :** 8-9ஆம் நூற்றாண்டு

**செய்தி:** ஆரளச்சநேரி அனுவாரத்தில் உள்ள ஏத என்னும் கோட்டையை பாதுகாப்பதற்காக சிந்தன் என்பவன் தன் நண்பன் பெரும் பூமீமனுடன் சேர்ந்து பகைவர்கள் பலரை கொன்றதிற்காக அவன் தம்பி சோழர் பால் உடையான் என்பவனுக்கு வாகைவேடு என்னும் ஊரை சர்வபரிசாலமாக வழங்கியதைக் குறிக்கிறது.

1. ஸ்ரீ அகளங்கரு
2. ப் பாறுடை
3. யாரளச்ச நெரிஅ
4. னு வாரத்தில் பெரும் பூ
5. பீமன்னுடன் ஏ
6. (த) கொட்டை அ-



7. மை காத்து பலர் அ

8. றிஞ்சு பட்டான் சின்த(ன்*)

9. இவன் தம்பி உழி ஒப்பவ

10. ஈ(டி வா*)கைவேடு ஸர்வ பரிசாலமா

11. க நேத்திராப்பட்டி சொழர் மால் உ

12. டையந் வைத்தெந்

13. கருப்பாறுடையென்

14. இது கெடுத்தா(ன்*)

15. பசுக் கொன்ற

16. பாவத்து படு(வான்*)

**10:2**

**இடம்:** ஆந்திர மாநிலம், நெல்லூர் மாவட்டம், பெல்லக்கூர் மண்டலம் புணபாக்கத்தில் ஏரிக்கலங்களில் வைக்கப்பட்டுள்ள பலகை கல்லில் இருப்பத்திலும் எழுதப்பட்டுள்ளது.

**காலம்:** தெலுங்கு சோழர், விஜய கண்ட கோபால தேவர், யா: 22, பொ.ஆ. 1272.

**செய்தி:** நென்பொய்கை நாட்டில் புலுக்கனூரில் உள்ள சூரிச்சுரமுடையார்க்கும் நல்லை சித்திஸ்சுரமுடையாருக்கும், சூரப்ப நாயக்கனின் பேரனும் மூப்பி நாயக்கன் மகனான சூரப்பநாயக்கன் சர்வமானியமாக நிலம் வழங்கியதை குறிப்பிடுகின்றது.



1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவணச் சக்கரவ

2. த்திகள் ஸ்ரீ விசைய கண்ட

3. கோபால தேவர்க்கு யா

4. ண்டு உயஉ (22)வது பிள்ளை

5. யார் நல்லசித்தர சாமுலி

6. களில் வண்ணமாலையி

7. ல் செங்கிய பெரயன் க

8. ற்தவராணத் தந்திரப்

9. பாலை சூரப்ப நாயக்கர் மக

10. ன் மூப்பினாயக்கன் மூப்பிநா

11. யக்கனை மகன் சூரப்ப

12. நாயக்கநென் பொய்கை

13. நாட்டுப் பலுக்கனூர் ஆ

14. டையார் நல்லை சித்தீசு

15. ரமுடையார்க்கும் சூ

16. ரி சுரமுடையார்க்கும்

17. .....

18. நிலம் அடங்கலும்யிட்டு

19. இவ்வூர் நஞ்செய் புஞ்செயில்ல

20. வற்கடமை நெற்கடமையும்

21. பொன் வரி காணிக்கை நாட்டு

22. வரிகு சுரை பரிமருந்து ஆக செ(ய்)

23. வர் காத்திகைப் பச்சை நல்வெ

24. ருது றற்பசு மற்றும் பெ(ற)

25. பட்டு வந்த பழவரி புதுவரிக்

26. களும் பணி மக்கக் பெரால் பே

27. கர்க் கடமையும் பறைய

28. ர் பெரால் தறி இறையும் உட்

29. பட ஸர்வ மானியமாக இத்

30. தேவர்களுக்கு இக்கோயிலி

31. ல் பரி . . . சூளப் பதித்தருக்கும்

32. கோயில் பக்த்தற்கும் மார

33. ய பகுத்தருக்கும் நல்லய ப

34.குத்தருக்கும் இந்த மரகெதா

35. ற்க்கு சந்திராதித்தவரை கட

36. மை குடிமை பொகக் (கடவ*)

37. தாக (வும்)....



**10:3**

**இடம்:** மேலது ஊர் வயலின் நடுவில் நடப்பட்டுள்ள வட்டத்தூணில் உள்ளது.

**காலம்:** பொ.ஆ. 13ஆம் நூற்றாண்டு

**செய்தி:** மத்திய சீயன் கேதார தேவன் என்பவனுக்கு கடுவன் சோமானத் தேவன் புணப்பாக்கத்தில் அமைந்துள்ள ஸ்ரீ நாயனார் திருக்காளத்தி உடைய நாயனார்க்கு சர்வ மாணியமாக திருநந்தவன புறமாக இடம் தானம் அளித்ததைக் குறிக்கிறது.

1. ஸ்ரீ நாயனார் திருகாளத்த உடைய நா

2. யனார்க்கு திருநன்தவனப்புறமாக

3. புனம்பாக்கத்தில் செனைப் பிரபடி

4. தாங்கல் வெள்ள கரத்தில் கடுவான்

5. சோமனாத் தெவன் தன்மம் ஆக

6. மத்திம சீயன் கேதாரதேவன் வசம்

7. கருவணாயனுக்கு வடகிழக்கு நன்து

8. வனத்துக்கு சந்திராதித்தவரை ஸர்வ

9. மானியம் ஆக செல்வதாகவும் இது

10. ஸ்ரீ மாஹேஸ்வ

11. ர ரக்ஷை.



# 11. பொற்குணம் ஏரிக்கல்வெட்டு

ச.பாலமுருகன், வே.நெடுஞ்செழியன்,
த.ம.பிரகாஷ், திருவண்ணாமலை.

**இடம்:** திருவண்ணாமலை வட்டம் பொற்குணம் கிராமத்தில் கூட்டுறவு கடை அருகில் உள்ள பலகைக் கல்.

**காலம்:** கம்ப வர்மன், யா: 25, பொ.ஆ. 894,

**செய்தி:** பொற்குணம் என்று அழைக்கப்படும் இவ்வூர் பொற்குன்றம் என்று முன்பு அழைக்கப்பட்ளது. இதனை கங்கமன்னரில் பிருதிகங்கரைசர் ஆட்சி செய்து வந்தார். புதனாட்ப்பாடியைச் சேர்ந்த பூதியூர் உடைய கோ என்பவரால் அமைக்கப்படிருந்த ஏரியின் பராமரிப்புக்காக இந்த ஏரியின் கிழக்குத் தூம்பின் பாசனத்தில் இருந்த நிலத்தைத் திருத்தி விளை நிலமாக்கிக் கல்கிலியேரிச் செறு என்று பெயரும் கொடுத்த செய்தி சொல்லப்படுகிறது.

**முன்பக்கம்**

1. ஸ்[வ*]ஸ்திஸ்ரீ கோவிசைய
2. கம்பபோத்தரைய-
3. விக்கிரம பருமற்கி யா-
4. ண்டிருபத்தைந்தாவதி ப-
5. ல்குன்றக் கோட்டத்துக் கீழ்-
6. வேணாட்டுக் காந்தளூர்க்
7. கூற்றத்துப் புதனாட்ப்[பா]-
8. டியிற் பூதியூருடைய [கோவா]-
9. ற் செய்யப்பட்டது ம-
10. ண்டையகுள நாட்டுப்
11. பொற்குன்றம் பிருதிகங்க-
12. ரையர் பிரிதியி ராச்-



**பின்பக்கம்**

13. யஞ் செய்தாள வி-
14. ப் பொற்குன்றத்-
15. தேரி கீழ்தூம்-
16. பின் பாடேய் புத்-
17. தறை திருத்திக் கல்-

18. க்கிலியேரிச் செறு-

19. வென்று பேரிட்டே

20. (இவ்வே)ரிக்குக் குடுத்தா-

21. ரிது நிறுத்தினான் கா-

**பின்பக்கம் மேல்பகுதி**

22. லென்றலை மேலி

23. ன



---

நன்றி: திருவண்ணாமலை சேது

# 12. அரவக்குறிச்சி - வட்டெழுத்துக் கல்வெட்டு

**து.சுந்தரம், கோவை**

**இடம்:** அரவக்குறிச்சி அருகில் கணக்குவேலம்பட்டி கிராமத்தில் அமைந்த மொட்டையாண்டவர் கோயிலில் உள்ள பாறை.

**காலம்:** பொ.ஆ. 9-ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** மொட்டையாண்டவர் கோயில் என வழங்கப்படும் இக்கோயில் சமணத் தடயங்களைக் கொண்டுள்ளது. பெரியதொரு பாறையின் மீது வடிக்கப்பட்ட சமணச் சிற்பத்தொகுதியும் தீர்த்தங்கரர் உருவங்களும் உள்ளன.

சிறிய அளவிலான குகைத்தளமும், சுனைக் குழிகளும், மருந்து அரைக்கும் குழிகளும் இங்கு காணப்படுகின்றன. கல்வெட்டு சிதைந்துள்ளது. எழுத்துகளே தெரியவில்லை.

1. வெக்குறி மம்
2. . . . ங் . . .
3. . . . ய் . . .



நன்றி: பேரா. எ. சுப்புராயலு, முனைவர் அர. பூங்குன்றன்

# 13. நண்டம்பட்டி பராந்தக சோழர் கல்வெட்டு

**ஆ.மணிகண்டன். மங்கனூர்,**
**கரு.ராஜேந்திரன், மேலப்பனையூர்**

**இடம்:** தஞ்சாவூர் மாவட்டம் பூதலூர் வட்டம் , புதுக்குடி ஊராட்சி நண்டம்பட்டி குடுக்கன் தரிசிற்கும் அருகில் இருக்கும் தனியாருக்கு சொந்தமா ன விவசாய நிலம் .

**காலம்:** பத்தாம் நூற்றாண்டு (பொ.ஆ. 907-955)

**செய்தி:** பராந்தக சோழரின் ஆட்சியில் மீயானஸ்யாளக்கிய மல்ல முத்தரையன் என்பார் இவ்வூரில் சிதைந்து கிடக்கும் (நண்டம்பட்டி) கற்றளியை எழுப்பியிருந்ததை வெளிப்படுத்தும் துண்டு கல்வெட்டாக கருத முடிகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மதிரை கொண்ட கோப்பர(கேசரி) . . .
2. மீயானஸ்யாளகிய மல்ல முத்தரையனினு . . .



# 14. மருதேறி பராந்தகன் கல்வெட்டு

**ராஜ் பன்னீர்செல்வம், திருவண்ணாமலை**

**இடம்:** மருதேறி கிராமம் , ஆரணி தாலுகா , திருவண்ணாமலை மாவட்டம்

**காலம்:** பராந்தக சோழன், யா: 27, பொ. ஆ. 934

**செய்தி:** சிதைந்த கல்வெட்டு 500 குழி நிலம் கொடை கொடுத்தமை.



1. ஸ்ரீ மதிரை கொண்ட
2. கொப்பரகெசரி ப
3. ன்மற்க்கி யாண்டு இ
4. ருபதெழா வது பல்
5. [குன்றக்] கொட்டத்து மெயூ
6. ர் நாட்டு . . .
7. ஐ நூற்று குழி நி
8. லம் . . . .
9. . . . . . . .
10. . . . . . . .

# 15. வடகுறும்பூர் கல்வெட்டு

**சி. வீரராகவன் , விழுப்புரம்,**
**த. ரமேஷ், விழுப்புரம்.**

**இடம்:** விழுப்புரம் மாவட்டம் ரிஷிவந்தியம் அருகே வடகுறும்பூர் சிதைந்த சிவன் கோயிலில் நடப்பட்டுள்ள பலகைக்கல் கல்வெட்டு

**காலம்:** 937 முதலாம் பராந்தகசோழன், யா: 30, பொ.ஆ. 937

**செய்தி:** முதலாம் பராந்தகனின் 30 ஆம் ஆட்சியாண்டில் வாடாஊரை உடைய காஞ்சனகம்பன் என்பவர் குறும்பியூர் நாவற்புலத்துக்கு வடக்கே உள்ள காடுமேடுகளை வெட்டி சீர்படுத்தி ஏரிப்பட்டியாக நிலம் கொடுத்ததைக் குறிக்கிறது.

1.ஸ்வஸ்திஸ்ரீ

2. மதிரை கொண்ட

3. கொப்பரகேசரி ப

4.ன்மருக்கு யாண்டு

5. 30 வாட ஊருடைய

6. காஞ்சன் கம்பன் கு

7. றும்பியூர் நாவற் பு

8. லத்தில் வடபால்

9. காடு களை

10. ந்து மேடு வெ

11. ட்டி ஏரிப்பட்டி யா

12. க செய்த நிலம்

13. அரை கால் தம்மம்

14. மாக காத்தான் அடிப்

15. பொடி என் தலைமேல்

16. இத்தன்மமிறக்கினா

17.ன் கீழ்ப்பட்ட நரகம்

18. புகுவான் :-





# 16. நெற்குணம் - முதலாம் பராந்தக சோழன் கல்வெட்டு

**ப. பூபாலன், இராணிப்பேட்டை.**
**கோ. உத்திராடம், சென்னை.**

**இடம்:** திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டம், நெற்குணம் கிராமம், செல்லியம்மன் கோயில் முன் நடப்பட்டுள்ள பலகை கல்வெட்டு.

**காலம்:** முதலாம் பராந்தக சோழன், யா: 24,பொ.ஆ. 931

**செய்தி:** சிங்கபுர நாட்டு கிழக்கு வழியில் நெற்குன்றத்தில் இருந்த ஏரி பராமரிப்புக்காக நிருபதுங்கமங்கலப் பேரரையன் என்பவரது மகன் நம்பிமல்லன் என்பவர் நிலம் கொடுத்தார். இந்நிலம் மூன்று பகுதிகளாக மூன்று பெயர்களில் இருந்தது. 1.மருதஞ்செறு 2.கொடுமாடி என்ற நிலம் 3.கழுவல் என்று நிலம். ஏரி பராமரிப்புக்காகக் கொடுக்கப்பட்ட இந்நிலங்கள் வரி இல்லாமல் கொடுக்கப்பட்டவை. நெற்குன்ற ஊரார் வரி இல்லாத நிலம் என்று ஏற்றுக்கொண்டதைக் குறிப்பிடுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோ
2. பரகேசரி வர்மக்கு
3. யாண்டு இருபத்து
4. நால்லாவது சிங்
5. கபுர நாட்டுக் கீழ்வ
6. ழி நெற்குன்றத்
7. தூ ஏரிக்கு நிருபது
8. ங்க மங்கலப் பே
9. ரரையர் மகனார் நம்
10. பிய் மல்லனார் செ
11. த ஏரிபட்டி மருதஞ்செ
12. றுவுங் கொடுமாடி
13. யும் கழுவலும்
14. இமூன்றும் எரி
15. ப்பட்டி செய்துகு
16. டுத்தேன் இது இ
17. (றங்)க ஊரோமுங்
18. குடிமை செய்(யி)
19. (தார்) ஏழாந்நகரத்து
20. கீழா நரகம்
21. புகுவானேரிபட்டி
22. இறக்குவானும் ஏழா
23. நரகத்து கீழாநரக
24. ம் புகுவான் இது
25. காத்து ஆண்டான்
26. அடி என் முடிமேலி
27. ன ஆவைத்
28. தண்டமுள்ளிட்டு
29. எப்பேற்பட்ட மன்
30. றுபாடும் ஏரிக்கு
31. குடுத்தேன் நம்பி
32. ய் ம[ல்]லனேன் இது
33. இறக்குவானும் ஏ
34. ழாநரகத்து கீழாநரக
35. ம் புகுவான் ஊரோமு-
36. ம் இது இறங்கா
37. மே செய்வோமா
38. நோ மிதுகீழாநர
39. கம்புக ககடவோம் இ
40. து காத்தாண்
41. டான் அடிஎன்
42. முடிமேலின

# 17. செஞ்சி அருகே மேல்மலையனூர் சமணப்பள்ளி கல்வெட்டு

**த.ரமேஷ், விழுப்புரம்.**

**இடம்:** செஞ்சி வட்டம், மேல்மலையனூர் பெருமாள் கோயில் பின்புறம் ஊள்ள பாறை.

**காலம்:** முதலாம் பராந்தகன், யா: 30, பொ.ஆ. 937

**செய்தி:** நான்கு பேர்கள் சமணப்பள்ளிக்கு நிலம் வழங்கியமை.

கல்வெட்டு வாசகம்

1. மதிரை கொண்ட கோப்பரகேசரி
2. பருமற்கு யாண்டு முப்பதா-
3. வது சிங்கபுரநாட்டு மீவழி மலை-
4. யனூர் நல்லூழார் கரை மாந்தன்காரி-
5. யும் நீலன்காரியு மிவன்றம்
6. பி தேருமானும் விமாச்சியும்ம-
7. ல குட்டியும் ஈந்நால்வோமும் எங்க
8. ள் பூமி மாந்தொட்டத்தின் மேலையேத்தமும்
9. பெய்த்தியொட்டைக் கழுவலும் மேலைப்
10. பள்ளி தேவர்க்கு நிசதி



---

நன்றி முனைவர் சு. இராசகோபால்.

# 18. திருநெல்வேலி மாவட்ட மடைத்தூண் கல்வெட்டுகள்

மோ.பிரசன்னா, சென்னை.
பி. பாலமுருகன்,மைசூர்.

## 18:1 ஜமீன் இலந்தைகுளம் மடைத்தூண் கல்வெட்டு

**இடம்:** சங்கரன்கோவில் வட்டம், திருநெல்வேலி மாவட்டம், ஜமீன் இலந்தைகுளம், கண்மாயில் அமைந்துள்ள நீர்மடை.

**காலம்:** வீரபாண்டியன், ஆட்சியாண்டு 17, (பொ.ஆ. 947).

**செய்தி:** ஆலவாய்சிலம்பன் பெயரால் நெச்சுற நாட்டு நீலிநல்லூர் ஏரிப்பெருமடையை ஆலவாசீலத்துக்காய் பிராமணன் மற்றும் ஆண்மர் நாட்டு தேவியம்மச் சதுர்வேதி மங்கலம் மாதேவஞ்சோலை - சிவபிராமணனும் இம்மடையயை அமைத்ததை பற்றி குறிப்பிடுகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சோழன்தலை கொண்ட கோவீரபாண்டியற்கு யாண்டு பதினஞ்சு-
2. இதனெதிர் இரண்டு இவ்வாண்டு நெச்சுற நாட்டு பிரமதேயம்
3. நீலிநல்லூர் நம்பிராட்டியார் செம்பியன் கிழானடிகள் தி-
4. ருவடிக்காய் ஊர்த(லை)*ச் செல்கின்ற அள்ளூர்க் குளக் கீழ்க்கலா-
5. வகப்பாடி ஆலவாசீலத்துக்காய் இவ்வூர் தலைச்செல்கின்(ற)*



6. சோலைதிருப்-
7. பாச்சோற்றி-
8. த்தொன் மறையோன் தெங்க-
9. லவை ஆலவாய் சிலம்ப-
10. ன் பியரால்
11. நீலிந(ல்)லூ-
12. ர் ஏரிப்பெ-
13. ருமடையைக்
14. கல்லால் நிலை அமைத்தா-
15. ன் சீர்தற அ
16. கம்வளரச்
17. செய்து
18. ஆண்மர் நா-
19. ட்டு தேவதா-
20. னப்பிர-
21. மதேயம்
22. தேவியம்ம-
23. ச்சருப்பே-
24. திமங்கல-
25. த்து ஸிவ
26. ப்4ராஹ்மண-
27. ன் மாதேவ-
28. ஞ்சோலை அ-
29. ம்பலவ-
30. னில் நிலை-
31. கால் ஆல-
32. வாய் சீல-
33. த்தின்பேரா-
34. ல் நிறுத்து-
35. விச்ச நிலை

### 18:2 மேல நீலிதநல்லூர் நடுமடை மற்றும் கடைமடைத்தூண் கல்வெட்டுகள்

**இடம்:** மேலநீலிதநல்லூர் கண்மாயில் அமைந்துள்ள நடுமடை. சங்கரன்கோவில் வட்டம், திருநெல்வேலி மாவட்டம்.

**காலம்:** கோமாறஞ்சடையன், ஆட்சியாண்டு 7. (பொ.ஆ. 10 நூ.ஆ.)

**செய்தி:** துவ்வூரை சேர்ந்த வெலிமான்-பனையந்தூணன் என்வன் இந்த மடையை செய்வித்துள்ளான்.

1. ஸ்வஸ்தி கோமாறஞ்சடையர்க்கு யாண்டு 6 இதன் எதிராமாண்டு
2. துவ்வூர்க்கூற்றதுத் துவ்வூர் வெலிமான் பனையந்-
3. தூணன் செவித்து நாட்டுவித்த கன்னிங் காலுந் தூம்பு(ம்*)



**18:3**

**இடம்:** கடைமடை.

**காலம்:** கோமாறஞ்சடையன், ஆட்சியாண்டு 4. (பொ.ஆ. 10 நூ.ஆ)

**செய்தி:** நீலிநல்லூரில், இந்த மடையை நிறுவதற்கு கொடுக்கப்பட்ட கொடை மற்றும் கொடையாளர்கள், பெயர் இடம்பெற்றுள்ளது.

1) ஸ்வஸ்திஸ்ரீ கோமாறஞ்சடையர்க்கு யாண்டு (4) இவ்வாண்டு நெச்சுறநாட்டு பிரம-
2) தேயநீலிநல்லூர் சிறுத்தூம்பு கன்(னாலெ)செய்துநாட்ட பேராலோரோகாசு இட்-
3) டு செய்வித்து நாட்டினோரை பேரெழுதியது நூற்றெண்மப் பெருந்திணை ராமஞ் சோமதே-
4) வூறன் மா(ற)ன் முத்தமாயோன் கண்டையன் அடவிச்சுடர்----யோன் நீர்மாந்தி
5) பாண்டஞ்
6) சேந்தன்
7) புல்லன்
8) சருவிலங்கன்
9) மா.தி கொற்ற
10) ன் நிகமத்து
11) நக்கன் மாறன்
12) நக்கங் காடன்
13) பெருங்காட்டூ
14) ர் பகைசுரு
15) க்கியாயின

16) சாத்தன்

17) மாறன்

18) கோன் மக்கள் சாத்தனெச்-

19) சுறவன். க்கியி . போ-

20) சன் விளக்கந்தேவன்

21) சாத்தன்மயிந்தன்

22) பேரிலிபேரன் மு-

23) டுக்கங்கோன் முத்த

24) ன் சாத்தன் காடங்கா- .

25) டன் மலையங்கொற்ற-

26) ன் தூரநிளையான்

27) இருஞ்சோழநாட்

28) டுப் பெருஞ்சாத்த-

29) னூர்ப் பால்செழி-

30) யமங்கலத்துஅ

31) கழ்கீர்த்தி

32) பாண்டிக்குடிகள்

33) காடஞ்சேந்தன் அ

34) தனருக்கழிஊரங்-

35) கொற்றன்.

## வாடிக்கோட்டை மடைத்தூண் கல்வெட்டு

**இடம்:** சங்கரன்கோவில் வட்டம், திருநெல்வேலி மாவட்டம், வாடிக்கோட்டை கண்மாயில் அமைந்துள்ள மடை.

**காலம் :** பொ.ஆ. 15

**சேய்தி:** உள்மடை அமைத்ததை குறிப்பிடுகிறது



1. நாயினா-
2. ர் பண்
3. டாரவா
4. சலில் தரிது
5. சாந்த
6. மை புர
7. வித்தி
8. யாகக் ப

9. ருத்த உ

10. ள் மடை

## மருதங்கிணறு கண்மாய் தூண் கல்வெட்டு

**இடம்:** மருதங்கிணறு கண்மாயில் அமைந்துள்ள தூண் கல்வெட்டு சங்கரன்கோவில் வட்டம், திருநெல்வேலி மாவட்டம்.

**காலம் :** சுந்தரபாண்டியன், ஆட்சி ஆண்டு 7 (பொ.ஆ. 13).

**செய்தி:** வியாகக்குடியை சேர்ந்த கணவதி பொதுவன் ஆன காராண்மை பறையன் கண்மாயின் உள்ளே நீர்அளவை கல் அமைத்ததை குறிப்பிடுகிறது.

1. சோனாடு வ-
2. ழங்கியருளிய சு-
3. ந்தரபாண்டி-
4. ய தேவற்கு யாண்டு எ வது-
5. வியாகக்கு-
6. டி ஊற்பறை-
7. யரில் கண-
8. வதி பொதுவ-
9. னான காராண்மை பறையன்
10. நாட்டின அ-
11. ணை(த்*)றி





## ஆலங்குளம் கண்மாய் கல்வெட்டு

**இடம்:** ஆலங்குளம் கண்மாயில் அமைந்துள்ள கல் திருவேங்கடம் வட்டம், திருநெல்வேலி மாவட்டம்,

**காலம்:** சுந்தரபாண்டியன், ஆட்சியாண்டு 8 (பொ.ஆ. 13)

**செய்தி:** சிதிலமடைந்துள்ளது. நெச்சுற நாட்டில் உள்ள மருதங்குளதில் நீர் தொங்க கொடுக்கப்பட்ட கொடை பற்றி குறிப்பிடுகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சோணாடு வழங்கி யருளிய ஸ்ரீ சு1ந்தர பா-
2. ண்டிய தே4வற் யாண்டு அ வது நெற்சுறனாட்டு மருதங்-
3. குளத்து நீர் தொங்கக் க .... ழவன் கொவனான முக-
4. ...... தந்மம்



# 19. பூட்டுத்தாக்கு பார்த்திவேந்திரவர்மன் கல்வெட்டு

**ம. காந்தி, வேலூர்.**
**ப.வெங்கடேசன், வாலாசாப்பேட்டை.**
**இரா.மணி, வேலூர்.**

**இடம்:** வேலூர்மாவட்டம், பூட்டுத்தாக்கு, கன்னிமாதர் கோயில் முன்பு கற்பலகையில் வெட்டப்பட்ட கல்வெட்டு.

**காலம்:** பார்த்திவேந்திரவர்மன், யா-10, பொ.ஆ - 967.

**செய்தி:** ஈழநாட்டைச் சேர்ந்த அரசனின் மனைவி பண்டாரக்குட்டி பெரியநாயன் என்பவர் 'வடவல்லந்தாள்' கோயிலுக்கு கற்களமை.

1. ஸ்வஸ்தி ஸ்ரீகோபார்த்திவேந்த்ர
2. பன்மக்குயாண்டுப் பத்தாவது வட வா
3. ல்லந்தாள் கோயில் கல்லு நிரைப்பித்
4. தேன் ஈழத்தரைசன் பண்டாரக்கு
5. ட்டி பெரிளயாநேன் இதுழிசா
6. ன்றேன் இவன் மகன் திருவனா
7. கிய கொங்கவாள் காமுண்டநேன்
8. இது ர க்ஷி . . . பாதமென்
9. என்தறலைமேல்



# 20. பெரிய நெசலூர் கொற்றவை

பொன்.வெங்கடேசன், ஆறகழூர்,
சி.வீரராகவன், விழுப்புரம்.



**இடம்:** கடலூர் மாவட்டம் வேப்பூர் வட்டம் பெரியநெசலூர் கிராமத்தில் உள்ள மங்க முத்தாயி அம்மன் கோயிலில் மேற்கு புறத்தில் உள்ளது.

**காலம்:** பொ.ஆ. 10ஆம் நூற்றாண்டு

**செய்தி:** ஒரு பலகைக்கல்லில் புடைப்பு சிற்பமாக இது வெட்டப்பட்டுள்ளது. 102 செ.மீ உயரமும் 88 செ.மீ அகலமும் உள்ள ஒரு பலகைக்கல்லில் புடைப்பு சிற்பமாக வெட்டப்பட்டுள்ளது. சமபங்க நிலையில் எருமைத்தலையின் மீது நின்ற நிலையில் உள்ளது.கரண்ட மகுடம்,காதுகளில் பனை ஓலை கழுத்தில் சவடி,சரபளி,மார்பில் சன்னவீரம்,மார்பில் பட்டையுடன் கூடிய கச்சை,பின்புறம் சூலாயுத்துடன் காணப்படுகிறார். இடது மேற்புறம் மானும் சிங்கமும் ஒரே பக்கத்தில் காணப்படுவது தமிழகத்தில் காணப்படும் கொற்றவை சிற்பங்களில் வித்தியாசமான ஒன்றாகும்.வழக்கமான ஆயுதங்களுடன் காணப்பட்டாலும் வில் காணப்படவில்லை. வலது கரத்தில் பாம்பை பற்றியிருப்பது புதுமையான ஒன்றாகும். கொற்றவையின் கீழ் பகுதியில் நவகண்டம் கொடுத்து கொள்ளும் வீரனும், வணங்கிய நிலையில் அடியாரும் காட்டப்பட்டுள்ளனர். கீழ் வலது புற கீழ்பகுதியில் 5 வரிகளில் எழுத்துக்கள் உள்ளன.

1. ஸ்ரீ - (மு)
2. க்கு
3. ல ம(லை)
4. ய மான்
5. சாதன் [ஸ்ரீ]

# 21. செல்லங்குப்பம் கல்வெட்டுகள்

**ச.பாலமுருகன், வே.நெடுஞ்செழியன்,**
**த.ம.பிரகாஷ், திருவண்ணாமலை.**

**21:1**

**இடம்:** கீழ்பென்னாத்தூர் வட்டம் செல்லங்குப்பம் கிராமத்தில் ஏரிக்கரையில் உள்ள செக்குக்கல்வெட்டு

**காலம்:** 10 நூற்றாண்டு

**செய்தி:** கூரியூரைச் சேர்ந்த பெருவன் என்ற சினபகையின் மகன் சேந்தன் இந்த செக்கை செய்து கொடுத்துள்ளார். இச்செக்கில் ஆட்டப்படும் எண்ணெயில் ஒரு ஆழாக்கு எண்ணெய் மகாதேவர் என்ற இறைவனுக்கு வழங்க முறை செய்யப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கூரியூர் பெருவ
2. னான சினபகை மகன் சேந்தந் செ-
3. க்கு மாதேவர்க் காழாக்கெண்ணை வை
4. த்தான் இது காப்பார் அடிப்பொடி என்
5. முடி (மேலின)

**21:2**

**இடம்:** சிதைந்த கோயில் அதிட்டானத்தை சேர்ந்த 10 துண்டுக் கல்வெட்டுகள்

**காலம்:** சோழர், மூன்றாம் குலோத்துங்கன், யா: 7, பொ.ஆ. 1185

**செய்தி:** கூரியர் இறைவனுக்கு விளக்கெரிக்க 1475 குழி கொடுத்தமை. கோயில் இறைவன் பெயர் இராவண ஈஸ்வரர் என்பதும் மலையமான் பெயர் வீரராக்ஷஸன் என்பதும் நோக்கத்தக்கவை.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழதேவற்கு யாண்டு ஏழாவது பெண்ணை வடகரை வாணகோப்பாடிச் செங்குன்ற நாட்டுக் கூரியூருடையார் வைசிராவணிஸ்வரமுடைய நாயனாற்கு கூரியூர் மலையமான் மலையனான வீரராக்ஷஸகச் சேதிராயனுக்கு அக்ரஹசேஸமாக விட்ட நிலம் பள்ள

2. தூம்புக்குத் தெற்குப் பழந்தேவதானமாய் வருகிற நிலத்திற் தடியிரண்டுக்குத் தெற்குத் தடியொன்று குழி யிருநூற்றைம்பதும் இதன் கிழக்குத் தடி யொன்று குழி நூறும் இதன் கிழக்குத் தடியொன்று குழி நூறும் தென்வடக்குப் பழந்தேவதானமான நெடுவாதுக்கு வடக்கு தடியிரண்டு குழி இரு(து)

3. றும் ஆக குழி அறுநூற்றைம்பதினால் அளவின்படி குழி நானூற்றெண்பத்தேழரையும் பழந்தேவதானந் தடிபலவினாற் குழி ஆயிரத்தைம்பதினால் அளவின்படி குழியெழுநூற்றெண்பத்தேழரையும் திருத்துக் குழியிருநூறும் ஆகக் குழி ஆயிரத்து நானூற்றெழுபத்தைஞ்சினால் நிலம்

4. அரையெ நாலு மாமுக்காணியுஞ் செங்குன்றநாட்டளவினால் வந்த மாக்கலங் கார்பசான முட்பட நெல்லுத் திருமஞ்சனப்புறமாகச் சிவபிராமணருழுகிற

ஏரிதென் தொண்டி யிரண்டுமே பாத்தற பிடாரி கோயில் கிழக்கு வழிக்கு மேற்குக் கொல்லையும் கூரி

5. யூர்ப் பிடாரி கோயில் முன்னிற் கொல்லை ஒன்றும் விளாங்கேணி கீட்கொல்லை ஒன்றும் ஆகக் கொல்லை ஐஞ்சினால் கடமை உபையம் இரண்டு விளக்கெரிப்புதாகவும் இப்படிக்க இந்நிலமுங்கொல்லையும் விட்(டேன்).

**21:3**

**இடம்:** சிதைந்த கோயில் கோமுகத்தில் உள்ளது.

**காலம்:** பொ.ஆ. 13ம் நூ. ஆ.

**செய்தி:** வியாபாரி தண்டலங்கிழான் கோமுகம் செய்து கொடுத்தமை.

1. ஸ்வஸ்திஶ்ரீ லோகமாதேவி
2. புரத்து வியாபாரி தண்டலங்
3. கிழாந் சூரியந் பெருமாளாந சமை
4. ய சேநாபதி தந்மம் இக் கோமு
5. கை



**21:4**

இடம்: சிதைந்த சிவன் கோயிலில் கிடக்கும் கல்

காலம்: பொ.ஆ. 17ஆம் நூ. ஆ.

செய்தி: கோயில் திருப்பணி செய்தவர் பெயர்

1. கூரியூராண்ட
2. [க்கு] திருப்பணி முத[லி]
3. தாண்டவன்
4. சதா சேர்வை

---

நன்றி முனைவர் சு. இராசகோபால். சிதறிக்கிடந்த துண்டுக் கல்வெட்டுகள் பெருமுயற்சியில் சேகரிக்கப்பட்டு அடுக்கப்பட்டு படிக்கப்பட்டன.

நன்றி: திருவண்ணாமலை சேது

# 22. பெரியநெசலூர் கல்வெட்டு

**சி.வீரராகவன், விழுப்புரம்.**
**பொன்.வெங்கடேசன், ஆறகழூர்.**

**இடம்:** கடலூர் மாவட்டம் வேப்பூர் வட்டம் பெரியநெசலூர் என்ற கிராமத்தில் ஏரிக்கரையின் கீழ் அழிந்து போன கோயில் இருந்த இடத்தில் கிடக்கும் துண்டுக்கல்

**காலம்:** திரிபுவனசக்கரவத்திகள் குலோத்துங்க சோழதேவர்

**செய்தி:** மன்னரின் மெய்க்கீர்த்தி மட்டும் மூன்று வரிகளில் உள்ளது

**22:1**

1. திரிபுவன சக்கரவத்திகள் மது . . .
2. கருவூரும் பாண்டியன் முடித்தலையும் . . .
3. குலொத்துங்க சொழ தெவற்க்கு . . .



**22:2**

இடம்: பெரியநெசலூர் மங்க முத்தாயி அம்மன் கோயில் வெளியே கிடக்கும் தூணில்

காலம்: விக்கிரம பாண்டியன், பொ.ஆ. 13 ஆம் நூற்றாண்டு

செய்தி : விக்கிரம பாண்டியத்தேவர் என்பவர் தானமாக விட்ட திருநாமத்துக்காணியை முதலாகக் கொண்டு இராசாக்கள் நாயந்திருமண்டபம் என்ற மண்டபம் கட்டப்பட்டுள்ளது.



1. சுபமஸ்து
2. விக்ரம பாண்
3. டிய தேவர்
4. விட்ட
5. திருநாமத்து
6. (இரட்டைமீன் நடுவே செண்டு) புடைப்பு சிற்பம்)
7. க் காணியு
8. டல் கொண்
9. டு செய்த
10. இராசாக்கள்
11. நாயந் திரு
12. மண்டபம்

# 23. திருக்கோவிலூர் அருகே ஏரி கல்வெட்டு

**த.ரங்கநாதன், விழுப்புரம்.**

**இடம் :** விழுப்புரம் மாவட்டம், திருக்கோவிலூர் வட்டம், சந்தப்பேட்டை, பஞ்சனார்பாறை என்னும் குன்றின் மேல், மேற்குபுறத்தில் காணப்படும் கல்வெட்டு.

**காலம் :** முதலாம் குலோத்துங்கன், யா: 18, பொ.இ.1088

**செய்தி:** திருக்கோவலூர் திருவிடைக்கழி எம்பெருமான் (ஊலகளந்த பெருமாள் கோயில்) கோயிலுக்கு சொந்தமான நிலத்திற்கு, நீர்ப்பாய்ச்சுவதற்காக ஏரியும் அமைத்து, தூம்பும் செய்வித்தமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்
2. கரவத்திகள் ஸ்ரீகுலோத்து
3. ங்க சோழ தேவர்க்கு யாண்டு
4. பதினெட்டாவது திருக்கோவ
5. லூர் திருவிடைகழி எம்பெருமான்
6. திருவிடையாட்டத்துக்கு நீர்பா
7. ய ஈவ்வெரியும் வெட்டித் தூம்பு
8. ம் ஈடுவித்தான் திருவரங்கம் பெரிய
9. கோயிற் பெரிய திருமாளிகை செய்த
10. உலகமுண்ட பெருமாளான அகளங்
11. கப் பிரம்மாராயன்



# 24. திருவையாறு தென் கைலாயம், வட கைலாயம் கல்வெட்டுகள்

**இரா. அகிலா, கு.கண்ணகி,**
**இல. தியாகராஜன், அரியலூர்**

**இடம் :** திருவையாறு ஐயாறப்பர் கோயில் - தென் கயிலாயம் கிழக்குச் சுவர் பீடம், பட்டிகை விருத்த குமுதம், ஜகதி, கண்டம் ஆகிய பகுதிகளில் உள்ளது

**காலம் :** பரகேசரி வர்மனான முதலாம் இராஜேந்திரன் , யா.31, பொ.ஆ .1043, க.ஆ.அ.எண் : 148/1918

**செய்தி:** கல்வெட்டு ஆண்டறிக்கையில் மன்னரின் ஆட்சியாண்டு எதுவும் குறிப்பிடப்படவில்லை ஆனால் கல்வெட்டின் உள்பகுதியில் ஆட்சியாண்டு 31 என குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் தென் கைலாயமுடையார் கோயிலை கற்றளியாக இராஜேந்திர சோழரின் தேவியார் பஞ்சவன்மாதேவி கட்டினார் என்ற வாசகமும் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கோயிலுக்கு பல்வேறு பரிகலன்களையும் ஆபரணங்களையும் இவ்வரசியார் வழங்கியுள்ளார். இக்கோயிலில் பணியாற்றிய ஆடற் கலைவல்ல பெண்கள் பற்றிய குறிப்புகளும் தலைகோலிகள் பெயர்களும் உள்ளன.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னி வளர -----------
2. வயும் சீர்தனிச்செல்வியும் ------------ நெடிது
3. யர் ஊழியுள் இடைது --------------- வநவாசியு
4. ம் சுள்ளிச்சூழ் -------------- முரண்
5. மண்ணைக்கடக்கமும் ---------- தேவியர்
6. ஓங்கெழில் முடியும் ---------------- முடியும்
7. இந்திர நாரமுன்தெண்டிரை ----------- கேரளன்
8. முறைமை -----------
9. சங்கதிர் -------------
10. --------- சாந்திமற்றது ------------------
11. ண் கருதி இருத்திய செம்பொன் ----- முதுகிட்
12. டொளித்த -------------
13. திண்டிறல்

14-19 . . .

20. ------- காவலம் புரிசை
21. இராஜேந்த்ர சோழதேவர்க்கு யாண்டு முப்பத்தொன்றாவதுவடகரை ராசேந்த்ர சிங்க

22. வளநாட்டு பொய்கை நாட்டு திருவையாற்று நம்பிராட்டியார் பஞ்சவன்மாதேவி

23. (யார்) திருவையாற்று நாம் எடுப்பிச்சருளுகின்ற திருக்கற்றளி தென்கயிலாயமுடையார் கோயில்

24. -------- உள்ளிட்ட பரிகல பரிசே

25. -------------

26. ணுரந் சீருடைக் கழலும் தளியிலாரில் நக்கன்

27. ம் நக்கன் நீறணிஞ்சாளான ஜனநாதத் தலைக்கோலியும் நக்கன் மஞ்சரியான சோழ உத்தம தலைக்கோலியும்

28. -------------

29. -------------

30. -------------

31. சுற்று முப்பதிந் கழஞ்சே முக்காலேய் இரண்டு மஞ்சாடியும் குன்றி மேற்படிதிரு அபிஷேகம் ஒன்று ------

32. -------------

33. -------------

34. -------------

35. பொன் இருபத்து முக்கழஞ்சே முக்காலே மஞ்சாடியும் ------------ ஒன்றில் கோத்த தாலி ஒன்றும் அசத்து விள

36. க்கில் ------------- கொண்டும் போகிற நாற்கழஞ்சே ஒன்பது மஞ்சாடியும் இரண்டு மாவே ------------- இரண்டினால் பொன் பதின் முக்கழஞ்சரையே

**24:2**

**இடம்** : திருவையாறு ஐயாறப்பர் கோயில் - தென் கயிலாயம் மேற்குச் சுவர் பீடம்

**காலம் :** இரண்டாம் குலோத்துங்கன் (1133 - 1150), யா.6, பொ.ஆ. 1139

**செய்தி:** தென் கைலாயம் உடையார் கோயிலில் நந்தா விளக்கெரிப்பதற்கு 20 காசுகளை வடசாத்தமங்கலம் ஊரைச்சேர்ந்தஅம்மங்கை நாச்சியான புவன முழுதுடையாள் என்ற பெண்மணி கொடையாக வழங்கியாமை. க.ஆ.அ.எண் : 150/1918.

1. ஸ்வஸ்திஸ்ரீ பூமேவு வளர் திருப்பொந்மாது புண(ர) நாமேவு கலைமகள் நலம் பெரிது சிறப்ப விசைய மாமகள் வெல்புயத் திருப்ப இசையும் செல்வியும் எண்டிசை வி(ள)ங்க நிருபர் வந்திறைஞ்ச நீணில மடந்தையைத் திருமணம் புணர்ந்து சீர்வளர் திருமணி முடி கவித்தென அணிமுடி சூடி மல்லை ஞாலத்தும் பல்லுயிர் ----------------- ல்லையி(லி)ன்பம் இயல் பினா(தீ)லய்த்த வெண்குடை நி(ழ)ற்ற

செங்கோலோச்சி வாழி பல்(லூ)

2. (லூ)ழி நடப்ப செம்பொந் விரஸிம்ஹாஸனத்து புவன முழுதுடையாளொடும் விற்றிருந்தருளிய கோராஜகேஸரிபந்மரான திருபுவன சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு ஆறாவது திருபுவநமுழுதுடைவளநாட்டு பொய்கை நாட்டு திருவையாற்று உடையார் தென் கயிலாயம் உடையார் --------------- ட்டு ------------------க் கூற்றத்து வட சாத்தமங்கலத்து வடசாத்த மங்கல உடையாந் உத்தம

3. ன் அம்மங்கைச்சியாந புவன முழுதுடையாள் வைத்த திருநுந்தா விளக்கு ஒந்றுக்கு உபையமாக இக்கோயில் காணி உடைய சிவப்பிராமணரில் ஆத்திரையந் தென் கயிலா உடையாந் ஆடவல்(லா)நாந தெந்நவன் சிகாமணி ப்பரம ----- ரையாந் தில்லைநமச்சிவாய தேவனும் இவ்வனைவோம் நாங்கள் ---- சாமுதாயமும் ------

4. இத்திருவிளக்கு ஒந்றும் சந்திராதித்தவல் செலுத்தக் கடவோமாக இ அம்மங்கை நாச்சியாந திருபுவன முழுதுடையாள் பக்கல் கொண்ட காசு இருபதும் இக்காசு இருபதும் கொண்டு இக்காசால் வந்த பலிசைக்கு (நித்தம் உழக்கெண்ணை) கொண்டு இத்திருநந்தா விளக்கு ஒந்றும் சந்திராதி(த்)தவத் நாங்(க)ளு(ம்) எங்களுடைய வம்சத்தோமும் இத்(ந்)மம் செலுத்தக் கடவோமாகவும் இத்திருநுந்தாவிளக்கு

5. ---------- கொண்டு இத்திருநுந்தா விளக்கு எரிக்க கடவோமாக ஸம்மதித்து கல்வெட்டிவித்தோம் இவ்வனைவோம். //-

**24:3**

**இடம் :** திருவையாறு ஐயாறப்பர் கோயில் - தென் கயிலாயம் அர்த்தமண்டப மேற்குச் சுவர் பட்டிகை

**காலம் :** இரண்டாம் இராஜராஜன் 1146 - 1166, யா. 6, பொ.ஆ. 1152.

**செய்தி:** தென் கைலாயமுடையார் கோயிலில் கங்கா நாச்சி என்பவர் ஒரு விளக்கெரிக்க 20 காசுகள் கொடையாக வழங்கியாமை. இதனை இக்கோயில் சிவப்பிராமணர்கள் பெற்றுக்கொண்டு விளக்கெரிக்க ஒப்புக்கொண்டனர். க.ஆ.அ.எண் : 151/1918

1. தும் புகழ்மாதும் நய --------- துந்தழைப்ப வருமுறை உரிமை மணிமுடி சூடித் திங்கள் வெண்குடைத் திசை --------------- வளர்த்தும் ---------- வில்லவர் மீனவர் ---------

2. காஸநத்துப் புவந முழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய கோபரகேசரி பற்மராந திருபுவநச் சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜதேவர்க்குயாண்டு ஆறாவது இஷப நாயிற்று ------ முழுதுடை வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருவையாறு உடையார் தெந்கயிலாய குலந்ருவ

3. யாஙம் இவந்தம்பி ராந்தம ஆழ்விய ------ சவேதவப் பட்டநும் ஆத்திரயந்

தெங்கயிலாயமுடையாந் ஆடவல்லாநாந தே -------- புவந முழுதுடையார் (கங்கா) நாச்சி விருதுராஜபயங்கர வளநாட்டு ---------

4. ---------

5. வைத்த திருவிளக்கு ஒன்றுக்கு ------ காசு இருபதும் கொண்டோம் இவ்வனைவோம்.

**24:4**

**இடம் :** திருவையாறு ஐயாறப்பர் கோயில் - தென் கயிலாயம் கிழக்குச் சுவர் பீடப்பகுதி - பட்டிகை

**காலம் :** பொ.ஆ.. 11 - 13ஆம் நூற்றாண்டு எழுத்தமைதி

**செய்தி:** இக்கோயிலில் பஞ்சநதி வாணன், அஞ்சலை, ஆகிய இறைத் திருமேனிகளை வானவன் மாராயன் என்பவர் எழுந்தருளிவித்தமை. க.ஆ.அ.எண்: 149/1918

1. ஸ்வஸ்திஸ்ரீ பஞ்சநதிவாணன் திருஉருவும் பாற்த்தான் அஞ்சலை உமையுருவும் ஐயாற்றே செஞ்செ வே வாசத்தார் வானவன் மாராயன் வெளிப்படுத்தா

2. ன் தேசத்தார் ஏத்தச் சிறந்து

**24:5**

**இடம் :** வட கைலாய அர்த்த மண்டப தென்புறச் சுவர் பட்டிகை

**காலம் :** முதலாம் இராஜேந்திர சோழன், யா. ---- பொ.ஆ. 11 நூ.ஆ.

**செய்தி:** திருவையாற்று லோகமாதேவி ஈஸ்வரமுடையார் கோயிலுக்கு ஓலோகமாதேவியர் வெண்கல மண்டை, விளக்குகள் ஆகியவவை கொடுத்தமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமன்றி வளர -------- (மெய்க்கீர்த்திப் பகுதி)

3. இருந்திய செம்பொன் திருத்தகுமுடியும் - பெருமலைகளும் மாப்பெருந்தண்டார் கொண்ட கோப்பரகேசரி வர்மரான ஸ்ரீ ராஜேந்தர சோழ தேவர்க்கு ய --------- வது வடகரை ராஜேந்திர சிம்ஹ வளநாட்டு

4. பொய்கை நாட்டு தேவதாநம் திருவையாற்று உலோகமாதேவி (ஈஸ்வரமுடைய) யார்க்கு உடையார் ஸ்ரீராஜராஜதேவர் நம்பிராட்டியார் தந்தி சத்தி விடங்கியாரான ஓலோகமாதேவியார் யாண்டு... ஆவது குடுத்த வெண்கலமண்டை ஒன்று நிறை குடிநை கல்லால் பதின் கழஞ்சு ஒரு பலம் ஆ கோலால் ஆயிரவன் கோலோடொக்கு ---------

5. ------------ கருவும் இருப்படி நாராசமும் உள்பட ------------- சாண் உசரத்து ஐஞ்சாணே மூவிரல் அரை பாதச் சுற்றுற்றி மேற்படி கோலால் விளக்கு ஒன்று நிறை முன்னூற்று பலமும் தரா ஈழவிளக்கு ஒன்று மேற்படி விரலால் நாற்சான் உசரத்து

ஐஞ்சாண் பாத சுற்றில் மேற்படி உள்க்கருவும் இருப்பு நாராயமும்

6. ----------------- உள்பட மேற்படி கோலால் விளக் ------------- விளக்கு க மேற்படி விரலா நாற்சாணேய் நால் விரல் உசரத்து நாற்சாணேய் மூவிரல் அரைய் பாத சுற்று உளக்கருவும் இருப்பு நாராயமும் உள்பட மேற்படி கோலால் விளக்கு க நிறை.... மேற்படி தார விளக்கு க மேற்படி விரலால் நாற்சாணேய் மூவிரல் உசரத்து ஐஞ்சாணேய் ஒரு விரலரை பாத சுற்று ----------------------

(மீதி சிதைந்துவிட்டது)

# 25. காவேரிப்பாக்கம் முதல் இராஜாதிராஜன் கல்வெட்டு

**ப. வெங்கடேசன், வாலாஜாப்பேட்டை.**

**இடம்:** காவேரிப்பாக்கம், மாரியம்மன் என்கிற மூலத்துவாழியம்மன் கோயில் கருவறையின் கிழக்கு மற்றும் மேற்குப்புறச் சுவற்றில் பதிக்கப்பட்ட இரண்டு கற்பலகைத் துண்டுக் கல்வெட்டுகள்.

**காலம்:** இராஜாதிராஜன், யா - 26, பொ.ஆண்டு 1044.

**செய்தி:** இராஜாதிராஜனின் "திங்களேர் தருதன் தொங்கல்வெண் குடைக்கீழ்" என்ற மெய்க்கீர்த்தியுடன் தொடங்கும் இக்கல்வெட்டு, நான்கு கற்களில் இருந்திருக்க வேண்டும். இரண்டு மட்டுமே கருவறையின் இரண்டு பக்கங்களில் பதிக்கப்பட்டுள்ளன. மற்ற இரண்டு காணப்படவில்லை. இதில் இராஜாதிராஜனின் அரசு அலுவலரான ஜயசிங்ககுல கால பிரம்ம மாராயனின் மகன் தலைகுலகால பிரம்ம மாராயன் பன்றீசுவரர் கோயிலில் நந்தா விளக்கு எரிக்கவும், பிடாரி கோயிலில் வழிபாடு நடத்தவும் நிலக்கொடை அளித்த செய்தி.

## துண்டுக் கல்வெட்டு - 1

1. ஸ்வஸ்திஸ்ரீ திங்களேர் தருத . . .
2. மகள் மானாபரணன் ஸீ . . .
3. மு காந்த;ர்சாலை கலமறு . . .
4. வீற்றிருந்த ஜயங்கொ . . .



5. யங்கொண்ட சோழமண்ட . . .
6. முட்டாமை எரிக்க காலியூர் ...
7. மாறர் சிறும் மங்கை ...
8. டான் இத்தேவர் பண்டா . . .
9. தென்பாற்கெல்லை உப ...
10. லன்வேலி ஒன்றரையே ...



## துண்டுக் கல்வெட்டு - 2

1. செங்கோலோச்சிக் கருங்கலி கடிந்துமன்நு பல்லூழியுன் தென்னவர்கு குல
2. ச்செணாட்டொதுக்கி மேவுபுகழிராமகுட மூவர்கெட முனிந்து வேலைகெழு . . .
3. பதி வில்லவர் மீனவர் வேல்குலச் சளுக்கியர் வல்லவர் முதலென வண . .
4. ஶ்ரீராஜாதிராஜ தேவர்க்கு யாண்டு 29ஆவது நாள் நூற்றுமுப்பத்தொன்று ஐ ...
5. திருப்பன்றீஸ்வரமுடைய மஹாதேவற்கு திருநந்தா விளக்கு ஒன்று சந்த்ராதித்தவரை . . .
6. நான ஜய சிங்ககுல கால பிரம்ம மாராயன் மகன் தலெகுலகால பிரம்ம மாராயன் . . .
7. நிலத்தில் இரு வேலி நிலங்கொண்டு இன் நிலத்துக்க விலையுந் திருத்து வீசமுமாகக பன்நிரு . . .
8. பிடாரி கோயிலுக்கும் காட்டுள்ளே வடக்கு நோக்கிப் பாய்ந்த நிரோடு வாய்க்காலுக்கு . . .
9. கெல்லை சாத்தன் எழுவன் நிலத்து . . .

# 26. ஜவ்வாது மலைக்கல்வெட்டு

**வே. நெடுஞ்செழியன்,**

**இடம்:** சவ்வாதுமலை வீரப்பனூர் சாலையில் உள்ள நடுகல்.

**காலம்:** விக்கிரம சோழன், யா: 11, பொ.ஆ. 1129

**குறிப்பு:** ஆநிரைகளை கவர்ந்த போது இறந்த வீரனின் நினைவாக வைக்கப்பட்டுள்ள நடுகல். வீரனின் உருவம் சிற்பமாக இல்லை

1. ஸ்ரீ விக்கிரம (சோழ) தே(வர்க்குயா)
2. ண்டு பத்(தொன்றா)வது ஒ
3. ல்லார்வர்குளநாட்டுத் தொறு
4. க் கொள்ளில் பட்டான் (ப)
5. ட்டாரர் மகன் சாத்தன்



நன்றி: ஜெய்சங்கர்

# 27. திருக்களர் துண்டுக் கல்வெட்டுகள்

மா.பவானி,தஞ்சாவூர்.
அ. ஜெயபாரதி, தஞ்சாவூர்.

**27:1**

**இடம்:** திருவாரூர் மாவட்டம் மன்னார்குடி வட்டம் திருக்களர் பாரிஜாதவனேஸ்வரர் கோயில் அம்மன் சன்னதியின் வடக்குப் புறச்சுவரில் உள்ளக் கல்வெட்டுகள்

**காலம்:** 11-12 ஆம்நூற்றாண்டு

**செய்தி:** முதலாம் குலோத்துங்க சோழனின்? காலத்தைச் சேர்ந்தது. திருக்களர் மகாதேவரக்கு சிவபிராமமணர்கள் மூவர் சேர்ந்து சனித் தோறும் இறைவனுக்கு அபிஷேகம் செய்வதற்கு ஆழாக்கு திருஎண்ணை மற்றும் நெய் நானாழியும் கறியமுது 5பலமும் இலை எட்டும், உப்பும் தானமாக வழங்கிமை.



1. ஸ்வஸ்திஸ்ரீ கொலொத்துங்கசோழ(தெ)வற்கு . . .
2. . . . லெனதிருக்களருடைய மஹா தேவற்குச
3. லிலசிவபிராமணர்உய்யக்கொண்ட . . .
4. னும் மூவாயிரசோகியும் அரவாபரணபட் . . .
5. வருமேய் சனிதொறும் ஆழாக்கு திருவெண்(ணை) . . .
6. நானாழியும் கறியமுது ஐம்பலமும் நெய்ய . . .
7. (லு)ம் இலை எட்டும் உப்பும் சந்திரதித்தவற் . . .



**27:2**

**காலம்:** 11-12 ஆம்நூற்றாண்டு

**செய்தி:** பூஜை பிரதிஷ்டைப்பற்றிகுறிப்பிடுகின்றது.

1. கொண்டுள(ர்/)ராயனால இராசே {ந்திர} . . .
2. {சதுர்(வே)}திமங்கலத்துப் பெருங்குறி(ப்) . . .
3. நாயனார் கோயிலில் தானத . . .
4. ந்தருளிவித்த உடையார்கு . . .
5. ஸர்வ பிரதிஷ்டமாக பூஜைகொ . . .



**27:3**

**காலம்:** 11-12 ஆம்நூற்றாண்டு

1. க்கரவர்த்திகுலொ . . .
2. நாட்டு அஷ்டதெஸ செ . . .
3. யித்துகிற கூட்டப்பெ . . .
4. ரர்கோயிலில் கருணகர . . .
5. ணஷ்யற்கு 4லாவது பூ . . .

**27:4**

**காலம்:** 11-12 ஆம்நூற்றாண்டு

**செய்தி:** குடிமைப்பணம், ஊணோபாதிபோன்றவரிகள்குறித்துபேசுகிறது.

1. ப் இப்படி மு . . .
2. (யு)ம்பற்றாத (பற்றாக) நிலத்துக்கு . . . கஞ்.
3. ப் புள்ளி பாத்த நிலத்துக்கு த்தெ . . .
4. புரகள குடிமைப் பணம்கு. . . .
5. ஊணோபாதிபட கிடந்ததி . . .
6. ழி வரையில் புணைக்கொள்ள . . .
7. து திருவுடைமருதுடையான் பட்ட. . .
8. சைபடியும் மதிப்படியும்கண . . .



# 28. மழவங்கரணை - விக்கிரமசோழன் கல்வெட்டு

ப. பூபாலன், இராணிப்பேட்டை;
கோ. உத்திராடம், சென்னை.

**இடம்:** திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசி வட்டம் மழவன்கரணை கிராமத்தில் உள்ள சிவன் கோயில் முப்பட்டை குமுதம்.

**காலம்:** விக்கிரமசோழன், யா: 15, பொ.ஆ.1133

**செய்தி:** வெண்குன்றக் கோட்டத்தில் உள்ள வாதவூர் நாட்டு பிரமதேயமான ஓசூர் மகாசபையார் நிலவிலை ஆவணம் செய்தமை. இந்நிலங்கள் 16 சாண் கோலால் அளக்கப்படடு நிலத்தின் மொத்த பரப்பு 7000 குழிகள் ஆகும். விற்கப்பட்ட நிலமும் அதன் விவரமும் எல்லைகளும் குறிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டு தொடர்ச்சியாக அறியக் கிடைக்கவில்லை.

1. ஸ்வஸ்திஸ்ரீ பூமாது புணரப் புவிமாது வளர நாமாது விளங்கச் செயமாது விரும்பத் தன்னிரு பதமலர் மன்னவர் சூட மன்னிய உரிமையில் மணிமுடி சூடிச் செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப வெங்கலி நீங்கி மெய்யறன் தழைப்பக் கலிங்கம் இரியக் கடல்மலை நடாத்தி வலங்கொ ளாழி வரையூழி திரிய இருசுடரளவும் ஒருகுடை நிழற்கீழ் முக்கோக் கிழான் அடிக ளோடும் செம்பொன் வீரசிம்மா சனத்து வீற்றிருந் தருளிய கோப்பர கேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் உடையார் ஸ்ரீவிக்கிரம சோழ தேவர்க்கு யாண்டு 15 ஜயங்

2. கொண்ட சோழமண்டலத்து வெண்குன்றக் கோட்டத்து வாதவூர் நாட்டு பிரமதேயம் ஓசூர் மகாசபையோம் நிலவிலையாவண கையெழுத்து எங்களூர் வடக்கில் பெரியேரித்திரவாய பாப்பனியெத்தமகப்பட விழல் நிலமுங் கொல்லை நிலமும் விற்பதற்கு மேற்பாற்கெல்லை மழவன்காராணையான பளவன்குறிச்சி கீழெல்லைக்குக் கிழக்கு எங்கள் பாப்பனியெத்தது மேல் வரம்புக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை பாப்பனியெத்ததுக்கு வடக்கில் மேட்டுக்குண்டில் வடவரம்புக்கு

3. த்தெற்கும் இதன் கிழக்கு கற்குடத்துக்குத் தெற்கும் கீழ்பாற்கெல்லை கற்குட்டத்துக் கிழக்கிற் பெரிய இறலிச்செவ்வை தெற்கு நோக்கி தெற்கில் இறலிக்கு மேற்கு விழல் நிலம் பதினாறு சாண்கோலாற் குழி முவாயிரமும் இன்நிலத்தினுட்பட்ட மொட்டைக் கிணறுகளும் இதன் தெற்கு மழவன்காராணைக் கீழ்க்கெல்லைப் பறையன் கொல்லைக்கும் கீழ் வேலிக்கு கிழக்கு பதினாறுசாண் கோலால் உட்களர் நீக்கிக் கொல்லை நிலங் குழி இரண்டாயிரமும் இதன் தெற்கு பிச்சன் கேணிக்கிழகண . . .

4. . . . பிச்சன்கேணிக்கு தென்கிழக்கிற் கொல்லைக்கு வடக்கு விழல் நிலம் பதினாறு சாண் கோலால் குழி இரண்டாயிமுங் கீழ்பாற்கெல்லை வடக்கில் விழிகல்லி . . . தெற்குநோக்கி தெற்கில் களருக்கு மேற்கும் இன்நாற்பாற் கெல்லைக்குமுட்ப்பட்ட நிலம் பதினாறு சாண் கோலால் கொல்லையகப்பட்ட குழி ஏழாயிரமும் நாங்கள் விற்றுக்(காசு) கொள்வீருளரோவென்று . . . பழற் கூற்றுஞ்..

# 29. விருத்தாசலம் கல்வெட்டு

அ. வசுமதி, கு. கண்ணகி,
இல. தியாகராஜன், அரியலூர்.

**இடம்:** கடலூர் மாவட்டம், விருத்தாசலம் விருத்தகிரீஸ்வரர் கோயில் முன் மண்டப வடக்கு, தெற்கு, கிழக்குச் சுவர்

**காலம்:** இரண்டாம் இராசராசன் (1146 - 1166), யா. 6, பொ.ஆ..1152

**க.ஆ.அ.எண்:** 52/1918

**செய்தி:** இக்கல்வெட்டு மேற்கா நாட்டு பிரம்மதேயம் எறும்பூரான சோழ பாண்டியச் சதுர்வேதிமங்கலத்துக் காணியுடைய ஆளப்பிறந்தான் ஏழிசை மோகனான குலோத்துங்க சோழ காடவராயர் என்பவர் இக்கோயிலில் எழுந்தருளிவித்த முருகன், நாச்சிமார்களுக்கும் மாசி, வைகாசி, ஆவணி, மாதங்களில் நடைபெறும் 10 நாள் திருவிழாவிலும் பிள்ளையார் திருவிழா, திருகாப்பு நாள் திருவிழா என 2 நாள் விழா உள்பட 12 நாள் விழாக்களில் 562 பந்த விளக்குகள் பிடிப்பதற்கு விளக்கு ஒன்றிற்கு மூன்று உழக்கு எண்ணை வீதம் 27 நாழி எண்ணைக்காக விளக்கு ஒன்றிற்கு ஐந்து காசு வீதம் 2910 காசுகளை முதலீடாக வைத்துள்ளார்.

இக்காசுகளை பெண்ணாகடமான முடிகொண்ட சோழ சதுர்வேதி மங்கலத்து வடபிடாகை ஊர்களில் இருந்த சபையார்களும் இருங்கோளப்பாடி நாட்டு தேவதான ஊர்களில் இருந்த சபையார்களும் முதலீடாகப் பெற்றுக் கொண்டு குறிப்பிட்ட எண்ணிக்கையுடைய விளக்குகளை எரிப்பதற்கு வட்டியாக எண்ணை வழங்கி பந்தவிளக்குகள் எரிக்க ஒப்புக்கொண்டனர். இக்கல்வெட்டிலிருந்து 80க்கும் மேற்பட்ட ஊர்கள் இக்கோயில் விழாவோடு இணைக்கப்பட்டு பங்காற்றியதை அறியமுடிகிறது. ஊர்ச்சபை உறுப்பினர்கள் வேளாண்குடிப் பெருமக்களாக, நாட்டார்களாக இருந்ததையும் அவர்களில் பலர் எழுத்தறிவு உடையவரகளாகவும் சிலர் எழுத்தறிவு அற்றவர்களாக இருந்ததையும் அவர்களுக்கு பதிலாக எழுத்தறிவுடையவர்கள் சாட்சிகளாக கையொப்பம் இட்டதையும் அறியமுடிகிறது.

ஊர்ச்சபை உறுப்பினர்கள் மற்றும் சாட்சிகள் ஆகியோர் தங்கள் பெயரோடு. ஊருடைய, காணியுடைய, நாடுடைய எனும் பட்டங்களைக் கொண்டுள்ளனர். இவை அவர்களின் காணியாட்சி உரிமையை உணர்த்துகின்றன. இதுவே காலப்போக்கில் இப்பகுதிகளில் வாழும் வெள்ளாளர் குடும்பங்களிடையே ஊர்களை அடிப்படையாகக் கொண்டும் பெயர்களை அடிப்படையாகக் கொண்டும் காணியாட்சி மற்றும் கோத்திரமுறைகள் தோன்றுவதற்கு அடிப்படைக் காரணமாக இருந்தது என்பதையும் அறியமுடிகிறது.

கல்வெட்டு குறிப்பிடும் ஊர்ப் பெயர்கள் எவ்வாறு மருவி வழங்கியது என்பதை இன்றைய ஊர்ப் பெயர்களோடு ஒப்பிட்டு அறியமுடிகிறது. கோயில் விழாக்களோடு பல்வேறு ஊர்கள் இணைக்கப்பட்டு செயல்பட்டதன் மூலம் இப்பகுதியில் நிலவிய சமய சமூக தொடர்புகளை அறியமுடிகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ பூமருவிய பொழிலேழும் பொருப்பேழும் புனை நித்திலத்தாம நெடுங்குடை பொழிந்த வரி 13, முடிய (மெய்க்கீர்த்தி)

14. திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜ தேவற்கு யாண்டு 6-வது

யாண்டாறாவது வடகரை விருதராஜ பயங்கர வளநாட்டு மேற்கா நாட்டு ப்ரஹ்மதேஸம் எறும்பூரான சோழ பாண்டியச் சதுர்வேதி மங்கலத்துக் காணியுடைய

15. ஆளப்பிறந்தான் ஏழிசை மோகனான குலோத்துங்க சோழக் காடவராயர் இன்னாட்டுப் பருவூர் கூற்றத்துத் திருமுதுகுன்றத்து உடையார் திருமுதுகுன்றமுடைய நாயனார் கோயிலில் எழுந்தருளிவித்த குன்றப் பெருமாளுக்கும் நாச்சிமார்களுக்கும் எழுந்தருளுந் திருமாசித் திருநாள் ஒன்றுந் திருவைகாசித் திருநாள் ஒன்றுந் திருஆவணித் திருநாள் ஒன்றும் ஆகத் திருநாள் மூன்றில் திருநாள் ஒன்றுக்குத் திருக்கார் கொள்ளித் திருநாள் முதல் பத்தர்கள் விழா அறுதியாகத் திருநாள் பத்தும் இன்னாள்களில்

16. இரட்டிக்க எழுந்தருளும் பிள்ளையார் திருவிழா ஒன்றுந் திருக்காப்பு நாள் விழா ஒன்றும் ஆக விழாப் பன்னிரண்டாக ஆண்டு ஒன்றுக்கு எழுந்தருளுந் திருநாள் மூன்றுக்கு நாள் முப்பதுக்கு விழா முப்பத்தாறுக்கு திருவிழா ஒன்றுக்கு எண்ணையும் ---------------------------- இந்த விளக்கு ஐஞ்ஞாற்றறு பத்திரண்டுக்கு விளக்கு ஒன்றுக்கு எண்ணை மூவுழக்காக விழா முப்பத்தாறுக்கு எண்ணை இருபதேழு நாழிக்கு விளக்கு ஒன்றுக்கு உபையங் காசு ஐஞ்சாக குலோத்துங்க சோழக் காடவராயர் இன்

17. னாயநார் கோயில் ஆதி சண்டேஸ்வரதேவர் ஸ்ரீஹஸ்தத்தில் நீர்வார்த்து ஸ்ரீபண்டாரத்து ஒடுக்கின காசாய் இன்நாட்டுப் பெண்ணாகடமான முடிகொண்ட சோழச் சதுர்வேதிமங்கலத்து வட பிடாகை ஊர்களிலோமும் இருங்கோளப்பாடி (நாட்டுத்) தேவதானமான ஊர்களிலோமும் உபையமாக கைக் கொண்ட காசு உசதாளய - இக்காசு இரண்டாயிரத் தொண்ணூற்றொருபதுக்குக் காசு கொண்டு பொலியூட்டுக்கு திருநாள்கள் தோறும் நித்தற்படி எரிக்கக் கடவோமான பந்த விளக்கு ருறா

18. சாயஉ - இந்த விளக்கு ஐய்நூற்றறுப்பத்திரண்டுக்கும் ஆறாவதின் எதிராமாண்டைத் திரு ஆவணித் திருநாள் முதல் சந்திராதித்தவல் செலுத்தக் கடவோமாக நாங்கள் உபையத் தீட்டுக் குடுத்து இத்தேவர் கோயிலில் கல்வெட்டுவித்தபடி ---------------------------- (சாற்றுக்கூ)ட லான விக்கிரமசோழ நல்லூர் ஊரோம் நாங்கள் உபைய விளக்குச் செலுத்தக் கடவோமாக கைக் கொண்ட காசு உளரு - இக்காசு இருநூற்றைஞ்சுக்குத் திருநாளிகளில் நித்தப்படி எரிக்கக் கடவோமான பந்த விளக்கு சயக - இவ்விளக்கு நாற்

19. பத்தொன்றுக்கும் இவ்வூற்க்குச் சமைந்து இப்படிக்கு இவை சாற்றுக் கூடலுடையான் கோன் திருவாய்க்குலமுடையானான தேவாசிரிய வேளான் எழுத்து சாற்றுக் கூடல் உடையான் குடியந் தேவனான இருங்கோளப்பாடி வேளான் எழுத்து சாற்றுக் கூட ---------------------------- மூத்து வங்கார முடையான் வராக நம்பகனான விக்கிரம சோழத் துண்ட நாட்டு வேளான் எழுத்து இளமங்கலமான அனபாய மங்கலத்து ஊரோம் நாங்கள் உபைய விளக்குச் செலுத்தக் கடவோமாக கைக் கொண்ட காசு முப்பதைஞ்சுக்குத் திருநாள்களில் நித்தற்ப

20. டி எரிக்கக்கடவோமான பந்த விளக்கு ஏழுக்கும் இவ்வூற்குச் சமைந்து இப்படிக்கு இவை இளமங்கலமுடையான் கமன்மலையான் விக்கிரமசோழ பருவூர் நாட்டு வேளான் எழுத்து கொள்திட்டையா ---------------------------- டையானான

# 66. புரவேரி நாதர் கோயிலுக்கு வாத்தியம் வாசிக்க நிலக்கொடை

ராம.இராமசுந்தரம், சென்னை.

**இடம்:** திருநெல்வேலி மாவட்டம் வீரவநல்லூர் அடுத்துள்ள கொட்டாரக் குறிச்சியில் ஏரி அருகில் சாலையோரம் நடப்பட்டுள்ள கல்

**காலம்:** சுமார் 18 ஆம் நூற்றாண்டு

**செய்தி:** பலகைக் கல்லின் ஒரு புறம் 11 வரிகளில் கல்வெட்டு அமைந்துள்ளது. இறுதி வரி தெளிவாக இல்லை. மயிலேறும் நாத பிள்ளை என்பவரின் மகன் பாண்டவப் பெருமாள் என்பவர் புரவேரி நாதர் கோவிலில் வாத்தியம் வாசிக்கும் செலவுகளுக்காக 100 குழி நிலம் செம்மைப்படுத்திக் கொடுத்துள்ளார். பாசன ஏரியையும் புதுப்பித்துக் கொடுத்துள்ளார். நிலம், குழி ஆகிய சொற்கள் குறியீடுகளாக உள்ளன.



1, மயிலேறும் ணாத

2. பிள்ளை புத்திரன்

3. பாண்டவப் பெரு

4, மாள் புரவேரி னாதர்

5, வாத்தியம் நடக்கும்

6. படிக்கு வெட்டித் தி

7. ருத்திவிட்டார். **நி**,100

8. **கு.** தவராம நடக்கு

9. ம்படிக்கு ஏரி தி

10, ருத்திவிட்டார்

11, ................ந........................

# 67. கருக்கல்வாடி தாரமங்கலம் துண்டுக் கல்வெட்டுகள்

சி.வீரராகவன்,விழுப்புரம்.
பொன்.வெங்கடேசன,ஆறகழூர்.

**67:1**

**இடம்:** சேலம் மாவட்டம் ஓமலூர் வட்டம் கருக்கல்வாடி ஊராட்சி கார்கீசர் கோயில் அருகே விளைநிலத்தில் கிடக்கும் துண்டுக்கல்



**காலம்:** 18 ஆம் நூ.ஆ.

**செய்தி:** கருக்கல்வாடி என அழைக்கப்படும் இந்த ஊர் முன்பு கல்பாடி என அழைக்கப்பட்டதை இந்த கல்வெட்டு மூலம் அறிய முடிகிறது. கார்கீசர் என அழைக்கப்படும் கோயில் முன்பு காகதீஸ்வரமுடையார் என அழைக்கப்பட்டுள்ளது.

1. கல்
2. பாடி
3. யில்
4. காக
5. தீஸ்வ
6. ரமு
7. டையாரு
8. .ம் . . .

**67:2**

**இடம்:** சேலம் மாவட்டம் ஓமலூர் வட்டம் தாரமங்கலத்தில் உள்ள கைலாசநாதர் கோயில் நிலவறைச்சுவர்

**காலம்:** 18ஆம் நூ.ஆ.

**செய்தி:** முழுதாக பொருள் விளங்கவில்லை. தாரமங்கலம் பூவாணிய நாட்டில் இருந்ததை இங்குள்ள மற்ற கல்வெட்டுகள் மூலம் யூகிக்க முடிகிறது.காட்டுச்சேரி என்ற இடத்தில் பலர் கூடி விவாதித்ததாக தெரிகிறது.

1. லியார் பூவாணிய நாட் . . . .
2. மி கயிலாசநாதர் தம்பி . .
3. - - - தம்பினாற்கு அமுது
4. காட்டுச்சேரியில் பலரும்

5. நாபபத்தாறு தேசத்தில் பலரும்

6. வாதிக்கட்டி . . மாறும்



**67:3**

**இடம்:** மேலது. நிலவறையில் அடுத்த அறையில்

**காலம்:** 18ஆம் நூ.ஆ.

**செய்தி:** வடபூவாணிய நாடு, தாரமங்கலம்,நல்லுடையார் என்பதை மட்டும் யூகிக்க முடிகிறது.

1. - - லத்தில் வட பூ . .

2. - ள்ளாழன் ந . .

3. மரை மன்னர் உ . .

4. மரா நல்லுடை . .

5. யார் தாரமங்க . .



# 68. ஏர்வாடியில் எல்லை நடுகல்

**உ.விஜயராமு. கீழக்கரை.**

**இடம்:** இராமநாதபுரம் மாவட்டம் ஏர்வாடி அருகில் கிழக்கு கடற்கரை சாலையில் இதம்பாடல் செல்லும் வழியில் 3 கி.மீ. தூரத்தில் இந்நடுகல் உள்ளது.

**காலம்:** 18ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** மண்ணிற்கு மேல் மூன்றேகால் அடிஉயரமும் ஒன்றேகால் அடி அகலமும் உள்ளது. இராமநாதபுரம் பகுதியில் பாண்டிய மன்னர்கள் விவசாயத்திற்காக ஏராளமான ஏரி, கண்மாய்களை தோற்றுவித்தனர். அதனை தொடர்ந்து சேதுபதிமன்னர்களும் இப்பணியை செய்துள்ளனர். அவ்வாறு ஏற்படுத்தப்பட்ட கண்மாய்களுள் ஏர்வாடி கண்மாயும் ஒன்று. இக்கண்மாய்க்கு அவர்கள் மேற்குப்பக்கம் புதிதாக ஒருகரையை அமைத்துள்ளனர். மேலும் எல்லை பிரச்சனை வரக்கூடாது என்பதற்ரகாக எல்கை கல்லை நட்டு எழுதியும் வைத்துள்ளனர். மிகவும் புகழ்பெற்ற பாதுஷாநாயகம் தர்ஹா உள்ள இவ்வூர் தற்போது ஏர்வாடி என்று அழைக்கப்படுகிறது. முன்பு இவ்வூர் ஏறுபடி என்றே அழைக்கப்பட்டுள்ளது. இதை இக்கல்வெட்டின் மூலம் நாம் அறிய முடிகிறது.

1. உயேறு
2. படிக்கிரா
3. மம் கண்மா
4. ய் மேல்
5. கடக்கோ
6. டி புது
7. கரைக்
8. கு யெ
9. ல்கை
10. க்கல்



# 69. சின்ன நெகமம் கல்வெட்டு

**தமிழ்மறவான் இராமேசு**
**பூங்குன்றன், ஜெகதீசன்,**
**கோவை**

**இடம்:** திருப்பூர் மாவட்டம், சின்ன நெகமம், ஸ்ரீ செல்வ செங்கல்வராயப்பெருமாள் கோயில்

**காலம்:** பொ.ஆ. 19ஆம் நூ.ஆ.

**செய்தி:** நிகமம் பாளையக்காரர் மனைவியார் அவர்களது உத்தரவின்படி பூமிநாதபிள்ளை சென்றாயப் பெருமாள் கோயிலில் திருப்பணிகள் செய்தமை.

**1.**

1.? சார்வரி வருசம் ஆவினி , மாசம் 11க் தேதி பெரிய னிகமத்திலிருக்குங் காணியாழருடைய செற்குல வமுச

2. த்தில் குமாரசாமி பிள்ளையவர்கள் பூத்திரர்களில் பூமினத பிள்ளையெங்கிரவர் னிகம பாழயகாறாகிய முத்

3.துவல்லக்கொண்டம தேவயனாயக்கருடைய யிசமானி வெள்ளையம்மனவர்கள் உத்திரவுப்பிரகாரத்துச் சின்ன

4. னிகம ஸ்ரீ சென்னறாயப்பெருமாளுக்கு அஷத்தகிரி கலங்கல்சய கொப்பகிரி மகாமணடபந் துழசி மண்டபம் தீர்த்ததொ

5. ட்டி தீர்த்தகிணரு கலக்கெருடகம்பம் பொஙகமடப்பள்ளி தூங்க மஞ்சத்தொட்டி னகரு சுத்து மதள்யிதிலடங்கலான வெலை

6. களையும் மெப்படி யிசமானி வெள்ளையம்மனவர் ளுத்தரவுப்பிரகாரத்துக்யிருந்து வேலைகளை முடித்து வைத்துக்

7. கொடையுபயம் . .

# 70. கொத்தமங்கலம் கல்வெட்டு

வள்ளி சொக்கலிங்கம், காரைக்குடி.

**இடம்:** சிவகங்கை மாவட்டம் கொத்தமங்கலம் - கொத்தமங்கலத்திலிருந்து கொ. லெட்சுமிபுரம் செல்லும் பாதையில் உள்ள பலகைக் கல்வெட்டு

**காலம்:** 30 - 06 - 1858.

**செய்தி:** கொத்தமங்கலத்தைச் சேர;ந்த மு. சின்னாஞ் செட்டியாகிய வடுக நாதன் செட்டியார் பாலம் அமைத்தமை.

1. உ சிவமயம்
2. கொத்த மங்க
3. லம் வயிறவ
4. ங் கோவில் மு.
5. சின்னாஞ் செட்டி
6. யார் சித்தூரணி
7. கால்வாய்க்கி
8. பெரிய கண்மாயி கா
9. ல்வாயிலிருந்து
10. தண்ணீற் வருகி
11. ற பாலம்



# 71. வாழப்பாடி கல்வெட்டு

**சி.வீரராகவன், பொன்.வெங்கடேசன்,**
**சி.பொன்னம்பலம், பெரியார் மன்னன்,**
**ஜீவநாராயணன், சேலம்.**

**இடம்:** வாழப்பாடி சென்றாயப்பெருமாள் கோயில் வாயிலின் முன் நடப்பட்டுள்ள தனிக்கல்

**காலம்:** பொ.ஆ. 1870,

**செய்தி:** தொப்பளவன்னியன் மனைவி அலர்மேலு மற்றும் மகன் அங்கமுத்து வன்னியன் செய்த தர்மம் பற்றியது. திருப்பதியிலிருந்து சென்றாயப் பெருமாள் மற்றும் தேவியைக் கொண்டுவந்து பிரதிஷ்டை செய்தும் வழிப்பாட்டிற்காக நிலங்கள் கொடுத்தும் தேரினைப் புதுப்பித்து ரதஉற்சவம் நடத்த கடை வருமானத்தில் 500 ரூபாய்க்கு வழி வகை செய்தும் கொடுத்ததைக் குறிப்பிடுகிறது.

1. கலியுகம் 4971 சாலிவாகனம்

2. (1792)பிரமோதூதம் வைகாசி மீ13

3. வாழப்பாடி அக்ரகாரதில் திருக்கோயில்க் கொ



# 72. வளையமாதேவி குடமுழுக்குக் கல்வெட்டுகள்

சா. பாலமுருகன், மைசூரு

இடம்:கடலூர்மாவட்டம், சிதம்பரம்வட்டம், வளையமாதேவி, ஸ்ரீ வேதநாராயணப்பெருமாள் கோயில் மண்டபம்.

காலம்: பொ.ஆ. 1882

செய்தி: வளையமாதேவி சோழப்பேரரசன் முதல் ராஜராஜன் காலத்தில் வளவன்மாதேவிச் சதுர்வேதிமங்கலம் என்ற பெயரில் ஒரு தனியூர் பிரமதேயமாக இருந்தது. இவ்வூரில் உள்ள வேதநாராயணப் பெருமாள் கோயில் 1882-லும் 1965-லும் புதுப்பிக்கப்பட்டு குடமுழுக்கு (சம்புரோக்ஷணம்) செய்யப்பட்டது. குறிப்பிடத்தக்க செய்தி ஒரே குடும்பத்தினர் பரம்பரை அறங்காவலராக இருந்து சொந்தப் பொறுப்பில் இதைச் செய்துவந்தனர் என்பது. 1882இல் துரிஞ்சிக்கொல்லை திருமுருகப்பிள்ளை அவர்களும் 1965இல் அவர் மகன் பிச்சப்பிள்ளை மற்றும் பேரன் சுந்தரலிங்கம் ஆகியோரும் இப்பணியைச் செய்தனர். இப்போதைய அறங்காவலர் அதே குடும்பத்தைச் சேர்ந்த திரு முத்துக்குமரன் ஆவார்.

1. உஸ்ரீராமஜெயம்

2. ஸ்வஸ்திஸ்ரீ சித்திரபானு வருஷம்ஆவணி? 6 ?(20.8.1882) பானுவாரம்சுவாதி நக்ஷத்திரம், சித்தயோகம் கூடிய சுபதினத்தில்,

3. சிதம்பரம் தாலுக்கா, வளையமாதேவி ஸ்ரீ கமலவல்லி ஸமேத ஸ்ரீ வேதநாராயணப்பெருமாள் ஸந்நிதியின், ஆதீனபரம்பரை அறங்காவலர் துரிஞ்சிகொல்லை, வளதரிய

4. உயர்திருவாளர். முருகப்பிள்ளை அவர்களால் மேற்படி ஸநநிதியின் விமான, மண்டப, கோபுர, பிராகாரங்கள், முதலியவைகளின் அரும்பெரும் திருப்பணிகள் மேற்படியாரின் சொந்த சொத்துக்களைக் கொண்டு செய்யப்பட்டு மஹாசம்புரோக்ஷணமும் நடத்தி வைக்கப்பட்டது.

5. சித்திரபானு ஆவணி மாதம் 6 தேதி ?(20.8.1882)

# 73. மயிலம்பட்டி அம்மன் கோயில் கல்வெட்டுகள்

**சி.வீரராகவன், விழுப்புரம்**

**து.சுந்தரம், கோவை**

**73:1**

**இடம்:** கோவை-மயிலம்பட்டி அம்மன் கோயில் தூண்.

**காலம்:** கலியுக ஆண்டு 4968; அக்சய பொ.ஆ. 1867

**செய்தி:** மயிலம்பட்டி அம்மனுக்குத் தூண் கொடை அளித்துள்ளதமை.

**தூணின் தேற்கு முகம்**

1. சாலிய
2. வாகன ச
3. காப்த்த
4. ம் 17..
5. .. க
6. லியுக சகா
7. ற்த்தம்
8. 49
9. 68 மே
10. ல் செல்லா
11. னின்று அ
12. ச்செய வரு.
13. மாசி மீ 15
14. தைதி சு
15. க்கிரவாற
16. மும் திசமியு
17. ம் பூராட ந
18. ச்செத்திற
19. மும் கூடின
20. சுபதினத்தி
21. ல் பொன் கு
22. லுக்கினுக்
23. குஞ்..
24. 
25. 



## தூணின் கிழக்கு முகம்.

1. சின்ன
2. த்தம்பிக்

3. கவுண்ட
4. ன் மகன்
5. றாமே கவு
6. ண்டன்
7. மகன் பள
8. னிக் கவு
9. ண்டன்
10. மகன்
11. கோவிந்
12. த கவுண்
13. டன் மயி
14. லம்பட்டி
15. மாரி அம்
16. மனுக்
17. கு கரி தூ
18. ண் உபை
19. யம் உ



**73:2**

**இடம்:** மயிலம்பட்டி அம்மன் கோயில் கருட கம்ப மண்டப நெற்றி.
**காலம்:** கலியுக ஆண்டு 4918 ; பொ.ஆ. 1817.

**செய்தி:** கருடகம்ப மண்டப அமைத்தமை

1. கலியுக சகார்த்தம் 4918 சாலியவாகன
2. இதன்மேல
3. . . . மாசி . . .
4. . . . கார்த்திகை நக்ஷத்தரமுங்கூடிய . . .
5. . . . கோத்திரம் அய்யம்பெரு
6. . . .



# 74. கோயில் மணிகளில் பொறிக்கப்பட்ட எழுத்துகள்

**கோ.அர்ச்சுனன்**
**கோ.உத்திராடம், சென்னை.**

**74:1**

**இடம்:** ஈரோடு ஆருத்ரா கபாலீசுவரர் கோயில் இராஜகோபுரம் அருகிலுள்ள மணி.

**காலம்:** பொ.ஆ.1898.

1. 1898
2. சிவமயம்
3. விளம்பி வருஷம் (இ) வைகாசி மீ
4. ஈரோடு தொண்டீஸ்பரர்
5. அள.அருகம்பெனி

**74:1**

**இடம்:** வேலூர் மாவட்டம் கூவம் திரிபுரந்தாகசுவாமி கோயில் மணி.

**காலம்:** பொ.ஆ.1921

1. 11.1.1921 ஸ்ரீதிருபுராந்தக
2. சுவமியார்





# 75. நாட்டரசன் கோட்டைக் கல்வெட்டு

**வள்ளி சொக்கலிங்கம், காரைக்குடி.**

**இடம்:** சிவகங்கை மாவட்டம் - நாட்டரசன் கோட்டை வெங்கிடாசலப் பெருமாள் கோயிலின் முன்மண்டபத் தூண்களில் உள்ள கல்வெட்டுகள்.

**காலம்:** கலி 5001, விளம்பி வருடம் தை மாதம் 14உ. 27-01-1899

**செய்தி:** நாட்டரசன் கோட்டையைச் சேர்ந்த சுப்பிரமணியன் செட்டியார் மகன் ராமனாதன் செட்டியார் என்பவர் வெங்கிடாசலப் பெருமாள் கோவில் முன்பாக இருக்கிற கருடாழ்வார் கோயிலையும் பதினெட்டுத் தூண்கள் உள்ள மண்டபத்தையும் கட்டிக் கொடுத்த செய்தி முதல் கல்வெட்டில் சுருக்கமாகவும் இரண்டாவது கல்வெட்டில் விரிவாகவும் சொல்லப்பட்டுள்ளது.

**75:1**

1. உ
2. ஸ்ரீ ராமசெயம்
3. சுப.ராம.
4. சாலிய வாகன
5. சகாற்த்தம் 18
6. 99 வருடம் சினவ
7. ரி மாதம் 27உ விள
8. ம்பி வருடம் தையி மாதம்
9. 14உ வெங்கிடாச
10. ல பெருமாள் கோயி
11. ல் முன்ம்பாக யிருக்
12. குற கெருட ஆள்வாற்
13. கோவிலும் மாத்தூ
14. றில் மனல்லூருடை
15. யான் சுப்பிறமணிய
16. ன் செட்டியாற் மகன்
17. ராமனாதன் உபயம்

**75:2**

1. ஸ்ரீ ராம ஜெயம். சுப.ராம

2. சாலிவாகன சகாப்தம் இங்கி
3. லிஷ் மகாராணியாரவர்கள்
4. காலத்தில் 1899 வருடம் ஜன
5. வரி மாதம் 27உ வர்த்தமான கலி
6. யுகாதி 5001 விளம்பி வருடம் தை மாதம்
7. 14உ வெங்கிடாசல பெருமாள் கோவி
8. ல் முன்பாகயிருக்கிர கெருடாழ்வார்
9. கோவிலும் அணியொட்டி கால்
10. சித்திரம் மட்டக்கால் 18 உள்ள மண்ட
11. பமும் கட்டினது நாட்டரசன் கோட்டை
12. யிலிருக்கும் மாத்தூரில் மணலூடையா
13. ன் சுப்பிரமணியன் செட்டி ராமநாதன் உபயம்.

# 76. நூத்தப்பூர் கல்வெட்டு

**பொன்.வெங்கடேசன், ஆறகழூர்**

**இடம்:** பெரம்பலூர் மாவட்டம் வேப்பந்தட்டை வட்டம் நூத்தப்பூர் என்ற கிராமத்தில் உள்ள சிவன் கோயிலில் சண்டிகேசுவரர் சன்னதியில் நுழைவு வாயில்

**காலம்:** 19 ஆம் நூற்றாண்டு, புரட்டாசி 18

**செய்தி:** நூத்தப்பூரில் உள்ள பழனிமுத்து உடையார் மகன் ராமசாமி உடையார் தன்ம தேவர்க்கு உபானம் செய்து கொடுத்தமை.

1. ராஸத வருஷம் புரட்டாசி மாசம் 18தெ

2. தி நூத்தப்பூரில் இருக்கும் ந.பழனிமு

3. த்துடையார் குமாரர் ராமசாமி உடையா

4. ர் ன் மதேவர்ருக்கு செய்து வத்த உபாநம்



# 77. சென்னை இராயப்பேட்டை சுந்தரேஸ்வரர் கோயில் கல்வெட்டுகள்

**ச.கிருஷ்ணமூர்த்தி, சென்னை.**

**77:1**

**இடம்:** சென்னை, இராயபேட்டை, சுந்தரேஸ்வரர் கோயில் நவக்கிரக சன்னதியருகில் சிவலிங்கமும் நந்தியும் புடைப்புச் சிற்பமாக உள்ளன.

**காலம்:** பொ.ஆ. 19ஆம் நூ.ஆ.

செய்தி: வீடுகளின் வாடகை வருமானம் கொண்டு சென்னை, திருவண்ணாமலை, திருப்போரூர், திருத்தனி கோயில்களில் வழிபாடு தீபம் ஏற்றுதல் சுமைதாங்கி கற்கள் பராமரித்தல் முதலிய் அறப்பணிகள் நடத்துதல் குறித்து.

1. சென்னை இராயப்பேட்டை அம்மையப்ப முதலி
2. தெரு 32 வது நெ. வீட்டிலிருக்கும் வேளாளர் குலம் சிவ மதம்
3. ரிஷி ரிஷியார் கோத்திரம் குத்தம்பாக்கம் முத்துசாமி முதலி
4. யார்குமரர் கு. கந்தசாமி முதலியாராகிய நான் மேற்படி இ
5. ராயப்பேட்டை முத்து முதலி தெரு 14வது நெம்பரில் ஸ்தாபித்திருக்கும்
6. சித்திபுத்தி விநாயகர் -ஸ்ரீசுந்தரேஸ்வரர் தேவஸ்தானத்திற்காகவும் கீழ்க்கண்ட 4 வீடு
7. மனையும் தானமாகக் கொடுத்துச்
8. சிலாசாஸனம் செய்தேன்.
9. தர்மம் நடத்த வேண்டிய விதம்
10. (1) வீடுகளுக்கு வரி, ரிப்பேர் முதலானவைகள் கொடுத்தும் செய்தும் வர
11. வேண்டியது (2) சித்திபுத்தி விநாயகர் ஸ்ரீசுந்தரேஸ்வரர் தேவஸ்தான குருக்
12. கள், சுயம்பாகி, மாலைகட்டி, நாவிதன் தேசாந்திரி 2 ஆக நபர் 6 பேருக்கும்
13. 11/2 படி பிரசாதம் செய்து சுவாமிக்கு ஆராதித்து சமமாக பாகித்து கொ
14. டுக்க வேண்டியது. (3) தேவஸ்தானத்திற்கு வருஷவாரியில் ரூ12க்குக் கு
15. றையாமல் வெள்ளை அடிக்க வேண்டியது (4) தேவஸ்தானத்திற்குப் பிரதி
16. தினம் தீபம் வைக்க வருஷ வாரியில் ரூ 24 க்குக் குறையாமல் எண்ணெய்
17. வாங்க வேண்டியது (5) இராயப்பேட்டை புதுப்பாக்கம் மவுண்ட்ரோட்டு
18. நுங்கம்பாக்கம் இந்த நான்கு இடத்தில் என்னால் கட்டி வைக்கப்பட்டிருக்கும்
19. சுமைதாங்கிக்கு வருஷவாரியில் ரூ 6க்குக் குறையாமல் வெள்ளை அடிக்கவேண்
20. டியது (6) ஷெ முத்துமுதலி தெருவிலிருக்கும் ஸ்ரீனிவாசபெருமாள் ஆலயத்தி
21. ற்குப் பிரதிதினம் தீபம் வைக்க வருஷவாரியில் ரூ 24 சித்திபுத்தி விநாயகர்

ஸ்ரீசுந்தரே

22. ஸ்வரர் தேவஸ்தானத்தாரிடம் பெற்று பெருமாள் ஆலயதர் மகர்த்தாக்கள் தீபம்வைக்

23. க வேண்டியது (7) திருவண்ணாமலை திருப்போரூர் திருத்தணி இம்மூன்று க்ஷேத்திரத்

24. தினரும் இனத்தாரால் கட்டப்பட்டிருக்கும் சத்திரங்களுக்குப் பிரதிதினம் தீபம்வைக்

25. கச் சத்திரம் 1க்கு ரூ 1 விழுக்காடு வருஷத்தில் ஏற்படும்ரூ36ம் சித்திபுத்தி விநாய

26. கர் ஸ்ரீசுந்தரேஸ்வரர் தேவஸ்தானத்தாரிடம் பெற்று சத்திர காரியதரிசிகள் தீபம்

27. வைக்கவேண்டியது சொத்துவிபரம்

28. சென்னை இராயப்பேட்டை பஜார் ரோட்டு கீழண்டைவாடி கலைக்கட்டர் ச

29. ர்டிபிகேட் நெ.1125 பழய சர்வே நெ.3697 முனிசிபல் கதவு

30. நெ 34 (2) ஷெயூர் மேற்படிவாடை கலைக்ட்டர் சர்டிபிகேட் நெ 1742 பழய

31. சர்வே நெ 3096 முனிசிபல் நெ 38 (3) ஷெயூர் ஷெரோட்டு

32. மேலண்டை வாடை கலைக்கட்டர் சர்வே நெ 1738 பழயசர்வே நெ 3462

33. புதுசர்வே நெ.141 முனிசிபல் கதவு நெ 51 (4) சென்னை புதுப்பாக்கம் த

34. லையாரித் தெரு மேலண்டை வாடை பழய சர்வே நெ 598 புது சர்வே நெ 1246 மு

35. னிசிபல் கதவு நெ 18 வரும் படியைச் சித்திபுத்தி விநாயகர்

36. ஸ்ரீசுந்தரேஸ்வரர் தற்காலதர் மகர்த்தாவாகமா. குருசா

37. மி முதலிதர் மகர்த்தர்களும் மற்

38. . கணக்கு வகையராக்கள்

39. . கவனித்து.

40. தய . . .கு. கந்தசாமி முதலியார்

**77:2**

**இடம்:** திருச்சுற்றுமதிலின் வெளிப்புறம் (முத்துதெருவில்) நுழைவாயிலுக்கு வடக்கில் வைத்துக் கட்டப்பட்ட செவ்வக வடிவக்கல்

**காலம்:** பொ.ஆ. 1900

**செய்தி:** சிவலிங்கம் நந்தியின் சிற்பமும் கீழே திருச்சிற்றம்பலம் என்று தொடங்கி வெட்டப்பட்ட சாசனம்.

1. . . .

2. . . .

3. ன் .வேனல் சாலி
4. வாகன சகாப்தம் 1822க்கு
5. விகாரி வருஷம் கார்த்திகை மீ 23 உ. திருமயிலை
6. வடக்கு இராயப்பேட்டை ஐரோட் 6வது நெ. வீட்டிலி
7. (ரு)க்கும் குருவடியார் கோத்திரம் சுப்பிறாய முதலியார் குமாரரா
8. னாதம் எழுதியது ஷெபேட்டை ஐரோடு 6ல் 34
9. வதுசர்வை நெ சுயாச்சித விருட்சங்களாக வந்த தென்னந்தோப்பு 1 தேனாம்பேட்டை...
10. ஹைரோட்டில் 3172, 3173, 3174வது
11. தென்னந்தோப்பு 1 இவற்றின் வரும்படியில்
12. முல்லைவாயில் ஸ்ரீமாசிலாமணி ஈஸ்வரருக்கு
13. நெய்வேத்தியம் செய்த அன்னத்தை தேசாந்திரிகளுக்குக்
14. கு உபயோகத்திற்கு மீ1க்கு ரூபா3 மிகுதியை இராயப்
15. பேட்டை ஸ்ரீசுவர்ணாம்பிகை சமேதசுந்தரேஸ்வரசு
16. வாமியாருக்கு நித்திய நைவேத்தியம் செ(ய்வதற்கும்)
17. . . . தைதேசாந்திரிகளுக்கு உபயோகம் செய்யவும்
18. 4வது சர்வே நெ.3643வது சர்ட்டிபிகேட் .
19. .ண் குடியிருப்பு கட்டுகோப்பு வீடு என் மனைவி (அண்)
20. ணம்மாள் முத்தியாமுதலி (தெரு) மாசிலாமணி ..மா ....
21. ம்மாள் இன்னால் வருக்கும் பின்பு மீலே...
22. லமலேமேற்படி சுந்தரேஸ்வரருக்கே சேர்ந்த
23. (த)ர்மகர்த்தர்கள். வாரிட்டோர் பூசை புஷ்ப்பம் ..
24. ய அன்னம் நடத்தி தேசாந்திரிகளுக்கு குடு(க்க..)
25. யரினால்யா வரும் சட்டபிரகாரம் கேட்டு நான்
26. வேண்டிக் கொள்ளுகிறேன் இந்த படி என்மனப்
27. பூர்த்தியாய் தானம் செய்த சொத்து.
28. சிலாசாசனம்1899

ரா.சுமன் ..

(இக்கல்வெட்டு அருகே பழங்கால பீரங்கி ஒன்றும் உள்ளது.)

**77:3**

**இடம்:** கோயில் வளாகத்தில் ஐயப்பன் சன்னதியருகே தனிக்கல்

காலம்: 1920

செய்தி: ரூ. 1250க்கான வட்டி வருவாயில், நால்வர் திருநட்சத்திரங்களில் வழிபாடு நிகழ்த்துதல்

1. சென்னை இராயப்பேட்டை

2. சுந்தரேச்வரர் ஆலயதர்ம
3. கர்த்தமா. குருசாமி முதலி
4. யாரிடம் நான் கொடுத்து மெ
5. ன் 1250 ரூபாயில் வட்டியை
6. எனக்குப் பிறகு மேற்படி ஆலய
7. நந்தவனத்திற்கும் நால்வர்
8. வருஷத் திருநக்ஷத்திரங்க
9. ளுக்கும் மார்கழி 9-ம் நாள்
10. மாணிக்கவாசகர் உற்ச
11. வத்திற்கும் பயன்பட வேண்
12. டும் மரியாதை என் மரபினருக்கு
13. விபரம்
14. 1912-722ல் ரூ600
15. 1913-11ல் ரூ100
16. 1920-21ல் ரூ300
17. 1924-2ல் 10 ரூ250
18. 1924-2ல் 10 ரூ704
19. 1 - 5 ரூ2500
20. 3 - ரூ250

இப்படிக்கு

பு.சி. சபாபதி முதலியார்

**77:4**

இடம்: கோயில் கொடி மரம் உள்ள சாசனம் (நவீனக் கல்வெட்டுகள்)

காலம்: 1900

சிவமயம் இராயப்பேட்டை பஜார்ரோட் 65நெ. வீட்டிலிருக்கும் கீ செந்தாமரை முதலியார் பாரியாள் அன்னம்மாள் குமாரத்தி சௌபாக்கியம்மாள் கைங்கரியம் ராக்ஷச வருஷம் தை மீ25 தேதி 'மங்கத்தம்மாள், சின்னம்மாள், ஜெகனாதா முதலியார் கைங்கரியம்'

# 78. வெள்ளலூர் ஆனைமலையம்மன் கோயில் கல்வெட்டுகள்

**சி.வீரராகவன், விழுப்புரம்**
**து.சுந்தரம், கோவை**

**78:1**

**இடம்:** கோவை-வெள்ளலூர் ஆனைமலையம்மன் கோயிலில் உள்ள தனிக்கல்.

**காலம்:** சித்தார்த்தி தை மாதம் 13-ஆம் தேதி - பொ.ஆ. 1919 ஆகலாம்.

செய்தி : முத்துகுமரசாமி என்பவரின் மனைவி மருதக்காள் என்பவரும், இளையதாரமான வள்ளியக்காள் என்பவரும் ஆனைமலையம்மன் கோயிலில் கினறு வெட்டிக்கல்லுப் பண்ணையும் (தொட்டி) அமைத்துக் கொடுத்தமை.

1. தேவக்கோ
2. னார் மகன்
3. சிதற்த்திரி வரு
4. தை மாசம் 13
5. தேதி முத்துகு
6. மரசாமி (சம்)சாரம்
7. மருதக்காள்
8. இளையதா
9. ரம் வள்ளி
10. யக்காள் ஆ
11. னைமலையம்
12. மன் கோவில்
13. தருமத்துக்கு கி
14. ணர் வெட்டி க
15. ல்லுப்பண்ணை
16. யும் போட்டி
17. ருக்கிறார்கள்
18. தெண்டாயு
19. த பாணி து
20. ணை லட்சி
21. க்கவும்



**78:2**

**இடம்:** ஆனைமலையம்மன் கோயில் நுழைவாயில் அருகில் உள்ள சுமைதாங்கிக் கல்.

**காலம்:** கலியுக ஆண்டு 4997; துன்முகி , பொ.ஆ. 1896

**செய்தி:** வெள்ளலூரில் இருக்கும் கருமக் கோன் என்பவரது மகன் மசக்கோன் என்பவர் செய்து கொடுத்த சுமைதாங்கிக் கல்.

1. கலியுகம் 4997 தும்மிகி வரு. தைய் மாதம் 2 தேதி வெழ்
2. ழலூரில் யிருக்கும் கருமகோன் மகன் மசக்கோன்

# 79. மேல்மங்கலம் கல்வெட்டு

அ.உமர்பாரூக், கம்பம்

**இடம்:** தேனி மாவட்டம் பெரியகுளம் வட்டம் மேல்மங்கலம். பள்ளி கொண்ட பொருமாள் கோயில் கருவறைச் சுவர்.

**காலம்:** பொ.ஆ. 1924

**செய்தி:** கோயில் புதுப்பிக்கப்பட்டமை.

1. உ
2. ஒ ம்
3. சாலிவாகன சகாப்த்தம்
4. 1847க்கு ர க்தாஷி வருடம்
5. ஆவணிமீ 31 தேதி, மேல்மங்
6. கலம் மகாஜனங்கள், வகை
7. யறா கிராமத்தார்களால், ஜீ
8. ரணோத்தாரணம் செய்யப்ப
9. ட்டது
10. 15.9.1924



# 80. சிறுமலை கல்வெட்டு

**அ.உமர்பாரூக், கம்பம்**

**இடம்:** திண்டுக்கல் மாவட்டம் சிறுமலை. வெள்ளிமலைமுருகன் கோயில் நுழைவாயில் அருகேயுள்ள கல்வெட்டு.

**காலம் :** பொ.ஆ. 1925

**செய்தி:** கோயிலின் இறைவர் பெயர் - வெள்ளிமலையாண்டி. 1925 ஆம் வருடம் ஏப்ரல் 21 ஆம் தேதி தமிழ் குரோதன வருடம் புதுப்பிக்கப்பட்ட செய்தி.



1. உ
2. வெள்ளி
3. மலையாண்
4. டிக்கி உப
5. யோகம் 19
6. 25 வருஏப்
7. பிறல் மீ 21 . .
8. . க்கிதமிள் கு
9. றோதி(னாம)வரு
10. சித்திரை மாதம்
11. மேவீடு
12. திருமுகறிந்
13. நாயடு கட்டம்
14. செய்து முடி
15. த்துவயித்தது

# 81. ஜம்புலிபுத்தூர் கல்வெட்டு

அ.உமர்பாரூக், கம்பம்

**இடம்:** தேனி மாவட்டம் ஆண்டிபட்டி வட்டம் ஜம்புலிபுத்தூர். கதலிநரசிங்கப் பெருமாள் கோயிலில் கிணறு அருகில்

**காலம்:** பொ.ஆ.1937

**செய்தி:** கோயிலின் கிணறு மற்றும் முன் மண்டபம் புதுப்பித்துக் கட்டப்பட்டமை.

1. ஸ்ரீ ராமஜெயம் 1937 வருடம்
2. ஸ்ரீ தாது வருடம் தை மீ 12 கதலி
3. ஸ்ரீ நரசிங்கப்பெருமாள் கோவில்
4. யாகசாலை கிணர் முன்மண்டபம்
5. கம்மவார் அ பெருமாள்னாயக்கர்வகையறாஉபயம்

# 82. பெள்ளாதி தர்கா - கல்வெட்டு

து.சுந்தரம், கோவை.

**இடம் :** கோவை மாவட்டம் காரமடை அருகே பெள்ளாதி கிராமத்துப் பள்ளிவாசல்

**காலம் :** ஹிஜிரி1190 பொ.ஆ. 10-10-1940

**செய்தி:** ஷாபிஷா காதிரி அவுலியா என்னும் இசுலாமியத் துறவிக்கு எழுப்பப்பட்ட கல்லறை. "ஷாபிஷா" என்னும் பெயரை, வடமொழி எழுத்துகளை நீக்கி "சாவிசா" என எழுதியுள்ளனர்.

786

1 சா வி

2 சா கா

3 தி றி அ

4 வு லி யா

5 பெ ள்

6 ளா தி

7 ஹி ஜி ரி

8 1190



# 83. கீழ் ஓரத்தூர் துண்டு கல்வெட்டு

**பொன்.வெங்கடேசன், ஆறகழூர்.**

**இடம்:** கடலூர் மாவட்டம் வேப்பூர் வட்டம் கீழ் உறத்தூர் என்ற ஊரில் உள்ள அரசினர் நடுநிலைப்பள்ளிக்கு எதிரே உள்ள ஒத்தையடிப்பாதையில் தங்கமணி என்பவர் நிலம் அருகே சாலை ஓரத்தில் நடப்பட்டுள்ள துண்டுக்கல்

**காலம்:** - - -

**செய்தி:** 24 செ.மீ உயரம்,13 செ.மீ அகலம்,7 செ.மீ தடிமனும் உள்ள கல் வீரசிங்கபன்மனில் வேளைக்காரன் தலைவனோடு உயிர் துறக்க சூளுறைத்தமை.

1. னக்க ஒலிக்கும் ஆழி
2. ஆளி வீரசிங்க பன்
3. மன் வேளைக்காரன்
4. சோமன் சூரிய தேவ
5. பிச்சனேன் இவர்க்கு
6. பின்பு இருப்பான் த
7. ன். தன் மினாட்டி
8. குடுப்பான்



## 84. ஜேஷ்டா சிற்பமும் பின்புறமுள்ள கல்வெட்டும்

**கோ. தில்லை கோவிந்தராஜன், தஞ்சாவூர்.**

**இடம்:** தஞ்சை மாவட்டம், பாபநாசம் வட்டம், அன்னப்பன்பேட்டை வயலில் இருந்து தற்போது அம்மன் கோயில் வளாகத்தில் வைக்கப்பட்டுள்ளது.

**செய்தி:** இக்கல்வெட்டு வாசகம் இவ்வூரில் உள்ள சிவன் கோயில் மண்டபம் கட்டியதை குறிப்பதாக இருக்கலாம். இவ்வூர் சிவன் கோயில் பழுதுபட்டதும் இச்சிற்பம் இடம் பெயர்ந்து இருக்க வேண்டும்.

1. ஸ்வதஸ்ரீ இத்திரும
2. [ண்]டபம் சிறு
3. நல்லூரு வை
4. யாசிய்ப் பிள்ளை
5. செய்தார்





# 85. புதுக்கோட்டை மாவட்டக் கல்வெட்டுகள்

கரு. இராஜேந்திரன், மேலப்பனையூர்.

**85:1**

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம், அறந்தாங்கி வட்டம், தேடாக்கிக் கிராமம் கோட்டைமனை இடிந்தசிவன் கோவில் அர்த்தமண்டபத்து தென்புறச் சுவர்

**காலம்:** பொ.ஆ. 12ஆம் நூற்றாண்டு

**செய்தி:** அருள்மொழித் தேவவளநாட்டுபுலியூர் நாட்டுசிகாருடையான் அரையன் ஆதித்ததேவரானகுருகுலராயர் கோவில் கட்டியமை.

1. ஸ்வ ஸ்தி ஸ்ரீ இத்திருமலைதிருக்கற்றளி
2. சாத்தினார் அருள்மொழிதேவவளநாட்டு
3. ப்புலியூர் நாட்டுச் சிகாருடையான் அ
4. ரையன் ஆதித்ததேவரான குருகுலராயர்

**85:2**

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம் அறந்தாங்கி வட்டம் தேடாக்கி கிராமம் கோட்டை மனை சிவன் கோவிலில் கிடங்கும் ஒரு பலகைக் கல்லில்

**காலம்:** பொ.ஆ. 10ஆம் நூற்றாண்டு

**செய்தி:** கல்வெட்டு சிதைந்துள்ளதால் கல்வெட்டின் பாடம் சரியாக இல்லை. கோவில் பணியாளர்களுக்கு கொடுக்கப்பட்ட நெல் அளவு அதற்குரிய நிலம் அளவு தவிர வேறு செய்தியை அறிவதற்கு இயலவில்லை.

1) ஒருநாழியும் திருவி(ளக்குக்)
2) குநெய் நானாழிக்கு...
3) (நெ) ல்லுஒரு தூணியுமுந் (நாழி)
4) யும் செவ்வாரியம் (ஒருவ)
5) ருக்குப் பேரால் ஒருவனு(க்)
6) கு ஆட்டைவட்டம் நெல்
7) .ன்னிருகலம் ஒருவர்க்குநெல்லு
8) ஒருபத்துநால்க்கலம் கணக்கயன்
9) .டிக்குஆட்டைவட்டம் நெல்லு
10) ப்பன்னிருகலமும் திருவ. ம்து
11) க்குநெல்லுநாற்பதின் கலமும் சாக்
12) கைகளுக்குநெல்லுஅஞ்கலமும்
13) திருப்பரிசட்டத்துக்கும் நமனி
14) கைக்கும் கலனெமுக்குறுணிமுன்னா
15) ழியும் ஆக நெல்லுநானூற்றுக்கு
16) லம் உடையார்ஸ்ரீ ராஜராஜ தெவ
17) ர் சிறுதனத்துப் பணிமகன் சாத்தனா
18) தித்தபிடாரன் இத்தேவர்க்குதிருநொ

19) ந்தாவிளக்கு இரண்டுக்கு இறைஇலி

20) சந்திராதித்தவல் வைச்சநிலம்மாவ

21) து வேளான் சக்கரபாணிவைச்ச (விளக்)

22) குப்புறத்துக்குக் கிழக்குப் பொது

23) நிலமூன்றுமா

24) நித....... நி .ம் மூலவித்

25) யார;க்கு ..... முன வ. ர்.

26) அரிசிநானா.......... அரிசிகுறுணி

27) க்குஅஞ்சிர .......... டைநெல் முக்குறு

28) ணிநாழியு ............புவனஸந்த

29) கிமத்திய ...........க்குதிருவமு..

30) அரிசிநானாழி ............ல் குறுணி இரு

31) நாழியும் ............ ரிக்குஅரிசி இ

32) ரு நாழிக்குநெல் ............ ழிகறியமு

33) துக்குநெல் ............ னாழிநெய்ய

34) முதுமூன்று ............... திக்குநெய்

35) ஆழாக்குவெ .............. ன்னாழியும்

36) தையிரமு ........... க்குநெல் ...

37) முன்னாழியும் ......... க்குப் பமுது

38) க்குபொது ..........க்காகநெல்

39) முன்னாழியு........

**85:3**

**இடம்:** புதுக்கோட்டைமாவட்டம், குளத்தூர் வட்டம், களமாவூர் கம்பக்குறிச்சி வயல் புஞ்சைக் காட்டிற்குள் உள்ள சமணக் கோவிலில் நடப்பட்டுள்ள தூண்

**காலம்:** கி.பி. 12ஆம் நூற்றாண்டு

**செய்தி:** நல்லூர் மூன்று கூற்றுப் பெரும்பள்ளி என்ற சமணக் கோவிலுக்கு கோனாட்டு நாட்டார் பாதுகாப்புத்தந்தமை.

1. ஸ்வ ஸ்தி ஸ்ரீ
2. நல்லூர்மூன்
3. று கூற்றுப் ஸீ
4. பெரும் பள்ளிகீ
5. ழ் கோநாட்டு
6. நாட்டாரர்
7. ரக்ஷை நன்றாக

**85:4**

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், குளமங்கலம் சிவன் கோவில் மகாமண்டபம் வாசற்படிக்கு தென்புறம் சுவரில்

**காலம்:** பொ.ஆ. 16ஆம் நூற்றாண்டு

**செய்தி:** முதற்காற் படையை குளமங்கலம் மறவரில் பரியேறுசேவகன் செய்தமைக்கானது.

1. இந்த முதற் காற்படை ஒருபடையும் திருநிலை
2. காலுக்கு தெற்கு கோடிக்கு வடக்கு இவ்வூர் மறவரில்
3. பிள்ளான் பரியேறுசேவகன் தன்மம்

**85:5**

**இடம்:** புதுக்கோட்டைமாவட்டம்,திருமயம் வட்டம்,குளமங்கலம் பசுபதீசுவரர் கோவில் திருநாள் மண்டம் நடுப்பத்தி கூரை 5வது பாவுகல் ஒன்றில்

**காலம்:** கி.பி. 17ஆம் நூற்றாண்டு

3) **செய்தி:** பனையூர் குளமங்கலத்திலிருக்கும் மறவர் வீரமுடிதிருவாண்டான் பாவுகல் கொடுத்தமை.

1. பனையூர் குளமங்கலத்தி
2. லிருக்கும் மறவரில் வீர
3. முடி நாயகன் திருவா
4. ண்டான் சதாசேர்வை

**85:6**

**இடம்:** புதுக்கோட்டைமாவட்டம், திருமயம் வட்டம், குளமங்கலம் பசுபதீசுவரர் கோவில் திருஞானமண்டம் நட்டுப்பபத்தி பாவுகல்

**காலம்:** பொ.ஆ. 17ஆம் நூற்றாண்டு

**செய்தி:** வீரமுடிதீருவாண்டான் பாவுகல் கொடுத்தமைக்கானது.

1. வீரமுடிதிரு
2. வாண்டான்
3. சதாசேர்வை
4. .உ

**85:7**

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், குளமங்கலம் பசுபதீசுவரர் கோவில் முன் மண்டப பாவுகல்

**காலம்:** பொ.ஆ 17ஆம் நூற்றாண்டு

**செய்தி:** பனையூர் குளமங்கலத்திலிருந்த வண்ணாரில் அறியவண்ணார் செய்தபாவுகல் கொடுத்தமைக்கானது.

1) இந்தபாக்கல்லுபனையூர்
2) குளமங்கலத்தில் இருக்கும்
3) வண்ணாரில் அறியவண்ணான்

---

கோட்டைமனை சிவன் கோவில் கல்வெட்டுகள் பற்றி தகவல் தந்த சின்னக்குரும்பி க. சேதுபதிக்கு நன்றி.

# 86. இராயப்பேட்டை பெரியபாளையத்தம்மன் கோயில் கல்வெட்டுகள்

**ச.கிருஷ்ணமூர்த்தி, சென்னை,**

**இடம்:** சென்னை இராயப்பேட்டை பெரியபாளையத்தம்மன் (மூலவர்) கோயிலில் அம்மன் சிலையின் பீடம்.

**காலம்:** பொ.ஆ. 1896

**86:1**

1. ஆயிறம் விளக்கு றங்
2. கப்பகுமாரன் ... சாமிநாயக்கன்
3. கயிங்கரியம்
4. கறவருஷம ட [மா]சிமாசம் 1896.

**86:2**

**இடம்:** பாவை விளக்கு

**காலம்:** பொ.ஆ. 1868

1. றாயப்பேட்டை
2. தருமறாய முதலியார்
3. தரும கைங்கிறயம்
4. 1868 ஆகஷ்ட்
5. மாசம் 9 உ
6. யிந்தச் சொத்தையாரும்
7. விக்கிறையம் செய்ய
8. கூடாது



---

நன்றி: எஸ்.இராமச்சந்திரன், ஆனந்த்

# 87. இராமநாதபுரம் கல்வெட்டு

சொ. சாந்தலிங்கம், மதுரை.

**இடம்:** இராமநாதபுரம் நகர் மற்றும் சு/மி. கோதண்ட இராமசுவாமி கோயில். கருவறை தென்சுவர்.

**காலம்:** பொது ஆண்டு 1903.

**செய்தி:** பாஸ்கர சேதுபதி அவர்கள் கோயிலை புதுப்பித்துக்கட்டிய செய்தி கூறப்படுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1825க்கு சோபகிருது வருசம்
2. இராமநாதபுரம் சமஸ்தானம் ஸ்ரீ ஆதி ஜெகநாதப்பெருமாள் கோயிலின் அபிமான
3. ஸ்தலமாகிய மேல்படி இராமநாதபுரம் ஸ்ரீ கோதண்ட ராமஸ்வாமி கோயில் இந்த
4. கெற்பகிரகம் அர்த்தமண்டபம் செங்கல் கட்டிடமாகவும்
5. ஜீர்ணமாகவும் இருந்ததைப் பிரிந்து கல் திருப்பணியாக இராமநாதபுரம்
6. சமஸ்தான மகாராஜ சேதுபதி ஸ்ரீ மது ஹிரண்ய கெர்ப்பயாஜி ரவிகுல முத்து விஜய
7. ரெகுநாத மஹாராஜா ஸ்ரீ ராஜா பாஸ்கர சேதுபதி மஹாராஜா அவர்கள் சொந்த
8. பொருளுதவியால் செய்யப் பெற்றது.

# 88. வேட்டுவ குல புலிக்குத்தி நடுகற்கள்

ப .ஆனந்த குமார், தும்மங்குறிச்சி.

**88:1**

**இடம்:** ஈரோடு மாவட்டம், பெருந்துறை வாய்ப்பாடி ஊர்

**காலம்:** பொ.ஆ. 16ஆம் நூ.ஆ., குரோதி

**செய்தி:** சிற்பத்தின் மேல், இடது மற்றும் கீழ் பகுதிகளில் எழுத்துக்கள் பொறிக்கபட்டுள்ளன. வீரன் தன் வலது கையால் நீண்ட வாளைப் புலியின் குரல்வளையில் பாய்ச்சிய நிலையில் வாள் புலியின் உடலின் மறுபுறம் வெளிவந்த தோற்றமும், வீரன் தன் இடது கையால் நீண்ட வாளை புலியின் வயிறு பகுதில் குத்தி வாள் உடலின் மறுபுறம் வெளிவந்த தோற்றமும் காணப்படுகிறது. மனிதர்கள் மற்றும் ஆடு, மாடுகளை உண்பதற்கு ஊருக்கும் புகுந்த புலியோடு வெள்ளை வேட்டுவ குடியை சேர்ந்த பெரமாண்டன் என்பவன் சண்டையிட்டு இறந்தற்காக எடுக்க பட்ட நடுகல்.



1. குரோதி வருஷம் ஆடி மாதம் 15
2. வாய்ப் பா
3. டி காணி
4. யாளன்
5. கருமன்
6. மகன்
7. பெரமா
8. ண்ட
9. ன்
10. வெள்ளை வே
11. ட்டுவன்

**88:2**

**இடம்:**ஈரோடு மாவட்டம், கவுந்தப்பாடி, பெருந்தலைவூர் பொன்னாச்சி அம்மன் கோயில் .

**காலம்:** பொ.ஆ. 16ஆம் நூ.ஆ., துந்துபி

**செய்தி:** சிற்பத்தின் மேல், இடது மற்றும் கீழ் பகுதிகளில் எழுத்துக்கள் பொறிக்கபட்டுள்ளன.வீரனின் தலையில் தலைபாகை, கழுத்தில் அணிகள், கைகளில் தோல்வளை காணப்படுகிறது . வீரனின் இடைப்பகுதியில் இடைக்கச்சி,

இடைக்கச்சியில் குறுவாள் காணப்படுகிறது. வீரன் தன் வலது கையால் நீண்ட வாளைப் புலியின் நடுமார்பில் பாய்ச்சிய நிலையில் வாள் புலியின் மார்பை குத்தி மார்பின் மறுபுறம் வெளிவந்த தோற்றம் காணப்படுகிறது. வீரன் புலியுடன் சண்டை யிட்டு இறந்த பிறகு அவ்வீரனின் மனைவியும் இறந்ததால் அவ்வீரனுக்கு அருகில் அவனுடைய மனைவியின் சிற்பமும் செதுக்க பட்டுள்ளது. மனிதர்கள் மற்றும் ஆடு, மாடுகளை உண்பதற்கு ஊருக்குள் புகுந்த புலியோடு பாண்டி வேட்டுவ குடியை சேர்ந்த திம்மயன் என்பவன் சண்டையிட்டு இறந்தற்காக எடுக்க பட்ட நடுகல்.

1. துந்துமி வருஷம் பங்(குனி ) மாதம் 3
2. ணண தபிவ மன் கலத்தில்
3. தாண்ட சீமான்
4. திம்மயன்
5. புலியை னாத கொன்ற
6. பாண்டி வே
7. ட்டுவன்



# 89. புதுக்கோட்டை மாவட்ட குமிழிக் கல்வெட்டுகள்

**வீ. முத்துக்குமார், தஞ்சாவூர்**

**89:1**

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் பசுமலைப்பட்டி ஊரின் மேற்கே, புதுக்கோட்டையிலிருந்து திருச்சிராப்பள்ளி செல்லும் நெடுஞ்சாலையை ஒட்டி மேற்புறமாக அமைந்துள்ள பசுமலைக்குளத்தின் பெரியமடையிலுள்ள மடைத்தூண்.



**காலம்:** பொ.ஆ. 7ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** வட்டெழுத்துக் கல்வெட்டு. ஸ்ரீ முரிகொல்லன் என்பவன் இந்த குமிழியை செய்வித்தது பற்றியும், அதனைச் செய்த தச்சன் கட்டனரையனுக்கு நிலம் கொடுத்தது பற்றியும் தெரிவிக்கிறது.

1. ஸ்ரீ முரிகொல்லன்
2. சேவித்த
3. குமிழி
4. இதுசேதத
5. ச்சன்கட்டனரை
6. யனுக்கு (கு)டுபிதசெ
7. ய்(ஓ)ருமாவரை.

**89:2**

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் மேலூருக்கு அருகிலுள்ள அம்மன்பேட்டை பெரியகுளத்தின் பெரியமடையிலுள்ள குமிழியில் உடைந்து கிடக்கும் இடதுபுற கற்கால்.



**காலம்:** பொ.ஆ. 8ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** தமிழ் எழுத்துக்கல்வெட்டு. பெரும்பொயில் என்ற ஊரைச் சேர்ந்த குடிதாங்கி செய்வித்த குமிழி.

1. ஸ்ரீபெரும் பொயி
2. ல் குடிதாங்கி கு
3. மிழி.

**89:3**

**இடம்:** புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் கிள்ளுக்கோட்டைக்கு அருகிலுள்ள நாச்சியார்புரம் பெரியகுளத்தின் நடுமடை கற்கால் வெளிப்புறம்.

**காலம்:** பொ.ஆ. 17-18ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** குமிழி கட்டியமை.



1. விசைய
2. வருஷம்
3. சித்திரை
4. மீ 15 உ
5. மங்கநன்
6. தென்கொ
7. ண்டா
8. ன்கட்டி
9. வித்தகு
10. மூமி.

## ९०. திட்டச்சேரி கல்வெட்டு

**ஆ. துளசேந்திரன்**
**மா. பவானி, தஞ்சாவூர்**

**இடம்:** திருவாரூர் மாவட்டம், மன்னார்குடி வட்டம், வடபாதிமங்கலத்தின் அருகில் திட்டச்சேரி அமைந்துள்ளது.

**காலம்:** பொ.ஆ. 10 -11 -ஆம் நூற்றாண்டு

**செய்தி:** கல்வெட்டின் மேற்பகுதியில் தொழிற்கருவிகளும் நாயும் காக்கையும் புடைப்புச் சிற்பங்களாக உள்ளன.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. உடையார் ஸ்ரீ
3. ராஜராஜேஸ்வர உடை
4. யார்க்கு திரு(நந்தவன)மும்
5. குளமும் மத்தமண்டபமும்
6. மலைதகத்த கண்ணன்
7. தண்மம்



# 91. மேல சீதேவிமங்கலம் துண்டுக் கல்வெட்டுகள்

**சொ. சாந்தலிங்கம், மதுரை.**

**இடம்:** மேலசீதேவிமங்கலம். மண்ணச்சநல்லூர் வட்டம். திருச்சி மாவட்டம். குடியானவர் தெரு. ஸ்ரீ லட்சுமி நாராயணப் பெருமாள் கோயில்

**காலம்:** பொது ஆண்டு 13ஆம் நூ.ஆ.

**செய்தி:** மூன்று துண்டுக்கல்வெட்டுகள். சிலவரிகள் கூறப்பட்டுள்ளன.

**அ**

1. ..... புன்பயிர் சாத்தி....
2. ....ரை நீராணி ஆனைச்ச.....
3. .... வீடடுத்தேவை நா....
4. ... லக்கை நாட்டுவினியொ....

**ஆ**

1. .... சுட.... ல ஸ்ந்திவிக்ரஹப் பேறு வாசல் பேறு
2. .... இலாஞ்சினைப்பேறு தறி இறை தட்-
3. டொலிபாட்டம் சு...ம்...புன் செய்இடை
4. வரி இவைரி பொன்வரி சிற்றி...
5. லக்கை உள்ளிட்டன...

**இ**

1. ....ற் செவ்வைக்குத் தெற்கும்
2. ....மேற்கு இவ்வாற்றுக்கும் பட.....
3. ...யிறுசெய்யுங் குடிமக்கள்....
4. ...வ இவை பண்டுடையார்

# 92. கூடலூர் கல்வெட்டுகள்

**92:1** **சொ. சாந்தலிங்கம், மதுரை.**

**இடம்:** கூடலூர். தஞ்சாவூர் வட்டம், தஞ்சாவூர் மாவட்டம், மீனாட்சி சொக்கநாதர் கோயில் மேற்கு பார்த்த நுழைவாயில் நிலைக்கல்

**காலம்:** பொது ஆண்டு 18ஆம் நூ.ஆ.

**செய்தி:** இரண்டு மா நிலம் கொடையளிக்கப்பட்டமை.

1. பவ வருசம் ஆ
2. னி மாதம் (5) தேதி
3. கூடலூர்
4. சொக்க நா
5. த சுவாமி
6. மீநாகழி
7. அம்மானுக்கு ச
8. றுவமானி
9. யம் பன்னீர
10. டி கோலா
11. நிலம் 2 மா
12. இதுக்கு விகி
13. தம் பண்ணினா
14. ர் காராம் பசு
15. கொண்ண
16. தோசந்திலே
17. போவார்கள்

**92:2**

இதே ஊர். இதே கோயில். தனித்தூண் கல்வெட்டு.

1. ......
2. .. பன்க்க....
3. ....ல....
4. டதிலாக
5. நடத்தி
6. வரவும்
7. இத்தம்ம
8. த்துக்கு
9. அகுதம்
10. பண்ணினால்
11. கெங்கை
12. தீர்த்த
13. த்தில்காரா
14. ம் பசுவை
15. கொன்ன
16. தோசக்தில்
17. போவாராகவும்

# 93. ஆப்பனூர் கல்வெட்டு

**சொ. சாந்தலிங்கம், மதுரை.**

**இடம்:** ஆப்பனூர். கடலாடி வட்டம் - இராமநாதபுரம் மாவட்டம், அரியநாயகி அம்மன் திருக்கோயில். தனிக்கல்.

**செய்தி:** பாண்டாரங்களுக்கு கொடுக்கப்பட்ட நிலங்களைப் மூவர்க்குப் பங்கீடு செய்து குடுத்தமை.

**முதலாம் கல்துண்டு**

1. சீ சகாத்த
2. தம் 15
3. 1553 ன்
4. மேல் செல்
5. லா நின்ற சு
6. பானு வருசம்
7. தை மாதம்
8. யஉ(12) ஆப்ப
9. னூர் நா
10. ட்டார் பே
11. ரிலே த
12. ழவாய் சே
13. துபதிகா
14. த்த தே
15. வர் வந்
16. திறங்கி நா
17. ட்டாரை
18. யிடுக்கம்
19. பண்ணின
20. படியினா
21. லேயும்
22. மேற்படி
23. யூர் சுந்
24. தர பண்
25. டாரத்துக்
26. குமாய் கே
27. ட்டுவந்து
28. கோவிலு
29. ம் குளம ச
30. டைய பண்
31. டாரம் பொ
32. ண் சாதி சு
33. ந்தப் பண்டா
34. ர மகள் சு
35. ந்தாயி பட
36. ளையை த
37. ழவாய் சே
38. துபதி பே
39. ரு காண்பிச்
40. சதுக்கு சுந்
41. த பண்டாரத்
42. துக்கு

**2ம் கல்துண்டு**

43. விட்டுச் ச
44. ந்திர கா
45. வி ஆலவ
46. ட்டமும்
47. பண்டார
48. த்துக்கு

49. கட்டளை
50. யிட்டார்
51. பெரிய பி
52. ள்ளை
53. க்கு சுந்
54. தரபண்
55. டாரம்
56. நிலமை
57. யிலே மூ
58. ன்றில்லொ
59. ரு பங்கு

**3ம் துண்டு கல்**

60. ம் பண்டா
61. ரம் வி
62. ட்டுக்கு
63. டுத்தார்

# 94. ஏழு கிணறு கல்வெட்டு - சென்னை

**ஆர்.ஆர்.சீனிவாசன், சென்னை.**
**வேலுதரன் ,சென்னை.**

**இடம்: சென்னை ஏழுகிணறு தெரு**

**காலம்:** பொ.ஆ.1852

**செய்தி :** இது பொ.ஆ1852 , தமிழ் வருடம் பரிதாபி, ஐப்பசி மாதம் 11ஆம் தேதி திங்கள் கிழமை வைக்கப்பட்ட கல்வெட்டாகும். கல்வெட்டுள்ள வீடு காஞ்சிபுரம் பகுதி பிலாப்பூர், கொண்டைகட்டி வேளார் மரபைச் சேர்ந்த ஐயா முதலியார் பேரனும் எல்லப்ப முதலியார் மகனுமான கந்தப்ப முதலியாருடையதாகும்இவ்வீடு சென்னை பெத்த நாயக்கன்பேட்டை வீராசாமி பிள்ளைத் தெருவில் (2)169 என்ற கதவு(கேட்டு) எண்ணுடையது.இவ்வீட்டின் குடிக்கூலியை (வாடகை) அவருக்குப் பிறகு அவரது மருமகள் பூஞ்சோலை அம்மை பெற்று அனுபவிக்கவும் அந்த அம்மையார்க்குப் பிறகு அக்குடிக்கூலி திருவண்ணாமலை அருணாசலேச்வரர் கோயிலில் விளக்கேற்றவும் நந்தவனம் பராமரிக்கவும் பயன்படுத்தப்பட வேண்டும் என்றும் இவ்வீட்டை யாரும் உரிமை கொண்டாடவோ விற்கவோ இயலாது என்றும் அவர் உயில் எழுதி வைத்துள்ளமை இக்கல்வெட்டு மூலம் சொல்லப்பட்டுள்ளது.

உ
சிவமயம்
1 சொஸ்திஸ்ரீ வி(ஜ)யாயற்புத க(லி)-
2 யுகாப்த வருடம் 4953 சா-
3 லிவாகன சகாப்த வருடம் 1774
4 இதற்கு மேல் செல்லுகின்ற ப(ரி)-
5 தாபி வருடம் ஐப்பசி மாதம் 11 தேதி பூர்வ (ப)-
6 ட்சம் சோமவாரம் திறையோ(தசி)
7 உத்திரட்டாதி வியாகரதம் கவுகரண(ம்)
8 தெனத்தில் தொண்டை மண்ட(ல)-
9 ம் காஞ்சி நாட்டில் பிலாப்பூர் கொண்-
10 டை கட்டி வேளாளர் மரபில் இரும-
11 டையார் கோத்திரம் ஐயா முதலியார் பௌ-
12 த்திரரும் எல்லப்ப முதலியார் புத்திரரு-
13 மாகிய கந்தப்ப முதலியார் சுதந்திர கா(ண)-
14 த்தோடு எழுதிவிக்குஞ் சிலாசாதனம்
15 சென்னநகரில் பெத்துனாயக்கன் பே-
16 ட்டையுள் வீராசாமி பிள்ளைத் தெ-
17 ருவில் கீழண்டை வாடையில் குப்(ப)-
18 ன முதலியார் மனைக்கும் வரதப்ப செ-
19 ட்டியார் வீட்டிற்கும் மத்தியில்..
20 றட்டைபை கேட்டு நெம்பர் 2169
21 வது பெற்றிருக்கிற யென் சுதந்தி

22 (ர) சம்பாதனை வீட்டில் எனக்குப் பிற்
23 காலம் என் மருமகளாகிய பூஞ்சோலை
24 யம்மை என் போலச் சுதந்திரத்துடன்
25 அதில் வருங் குடிக்கூலி வரும்படி
26 யைத் தான் பெற்றுக் கொண்டி(ரு)
27 ந்து அநுபவிக்க வேண்டுவது அத(ற்)
28 குப் பிற்காலத்தில் மேற்படி வீட்டில் வ
29 ருங் குடிக்கூலி வரும்படியான பெ
30 றுவார் ஸ்ரீ அகிலாண்ட கோடி பிற
31 மாண்ட நாயகறாகிய திருவண்ணா
32 மலை அருணாசலேசுரர் சந்நதித் தெரு விள
33 க்குத் திருப்பணிக்கும் நந்தவனத் திரு
34 ப்பணிக்கும் நானெழுதிய வுயிலில்
35 ஏர்படுத்தப்பட்டவர் எந்தவிதத்தி
36 லும் எவ்வளவுந் தடைபடாமல் உ
37 ண்மையுடன் உபயோகப்படுத்
38 திடும்(படி)யாக நடத்துவிக்க வேண்டு-
39 னி இந்த வீட்டைக் குறித்து என்புத்திர(ன்)
40 (சு)ற்றத்தார் முதலிய்யாவரும் விக்கினர
41 (யா)தி செய்வதற்கும் அநுபவிப்பதற்கும்
42 எவ்வளவேனுஞ் சுதந்திரமில்லை (இ)
43 ப்படி என் புத்தி பூர்வரிச்சயமாக எழுதி
44 வைத்த சிலாசாதன தற்மம் இதை யாதா
45 யொருவர் விக்கினம் பண்ணுவாறாகி
46 (ல்) அவர்கள் காசியிலே கெங்
47 கைகரையில் காறாம்பசு
48 வைக்கொன்ற பாவத்திலே போ
49 கக் கடவர்களாகவும் ?

# 95. குருந்தம்பட்டு கண்மாய் கல்வெட்டு

கரு.இராசேந்திரன், மேலப்பனையூர்.
ப. வேலாயுதராஜா, திருப்புத்தூர்.

**இடம்:** சிவகங்கை மாவட்டம், கல்லல் வட்டம், விளாரிப்பட்டி அருகில் உள்ள குருந்தம்பட்டு பனையடிக் கண்மாயில் உள்ள துணி துவைக்கும் கல். வெட்டப்பட்டுள்ள எழுத்து.

**காலம்:** 17ஆம் நூற்றாண்டு

**செய்தி:** கல்லின் நீளம் 60 செ.மீ . அகலம் 40செ.மீ. இரண்டு துண்டுகளாக உடைக்கப்பட்ட இக்கல்வெட்டின் பிற்பகுதி மட்டுமே கிடைத்துள்ளது.

இப்பகுதியை ஆண்ட மன்னன் பிரம்மதேயமாக ஊரைக் கொடுத்து அந்தந்த ஊர்களில் கண்மாய் வெட்டச் சொல்லிக் கொடுத்த தர்மம் இது என இக்கல்வெட்டு தெரிவிக்கின்றது.

1. ......
2. ......
3. பிரம்மதாயம் மானியம்
4. மடப்பிரம் சகல சமுதா...
5. லு ஊரவர்கள் வெட்டு அ.
6. ந் தந்த ஊருள் வெட்டு
7. அந்த அந்த கண்மாயில்
8. வெட்டச் சொல்லி ராச.
9. வைய்யனவர்களு ஊ
10. ரவர்களும் ...
11. சிலாசாதனம் பண்ணிவிச்
12. சோம் இந்த தற்ம . கல்
13. லு காவேரியும் புல்லு பூமி
14. யும் சந்திராதித்தவரைக்கு ந
15. டப்பிக்கவு (ம்) இந்த தர்ம
16. த்து க்கு அகிதம் ப
17. ண்ணினவன் கெங்கை
18. கரையில் காராம் ...
19. ......



# 96. கோட்டவயல் மடைக்கல்வெட்டு

**கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.**
**ப. வேலாயுதராஜா, திருப்புத்தூர்.**

**இடம்:** சிவகங்கை மாவட்டம், தேவகோட்டை வட்டம், கோட்டவயல் சிவன் கோயில் எதிரில் உள்ள கண்மாய் மடைத்தூண்

**காலம்:** ரெகுநாத சேதுபதி, சகம் 1594 பொ.ஆ 1672

**செய்தி:** திருமலை சேதுபதி காத்த ரெகுநாத சேதுபதியின் தர்மமாக உடைச்சி சேர்வை என்பவர் அமைத்தமடை

1. சகாத்தம்
2. 1594
3. ன் மேல்
4. ச் செல்லா
5. நின்ற பரிதா
6. பி வருஷம் ப
7. ங்கூனி மா
8. தம் 11ஆம் தேதி
9. ஸ்ரீ மது தி
10. ருமலைச் சே
11. துபதி காத்த
12. ரெகுநாத தே
13. வரவர்க
14. ள் கிருபையினாலே
15. சுபஸ்ரீ சாத்த
16. மத உடைச்
17. சி சேருவை
18. காரனவர்
19. கள் புண்ணி
20. யம் உ



# 97. திருத்தணி துளுவ வேளாளர் சத்திரம் -கல்வெட்டு

ச. கிருஷ்ணமூர்த்தி, சென்னை.

இடம்: திருத்தணி துளுவ வேளாளர் சத்திரம்

காலம்: பொ.ஆ. 1863

செய்தி: வேலூர்மாவட்டம் வ ாலாஜா வட்டத்தில் உள்ள நாகவேடு கிராமத்தைச் துளுவ வேளாள முதலியார் குடும்பம் ஒன்று திருத்தணிகையில் சத்திரம் ஒன்று ஏற்படுத்தி அதை நிருவகிப்பதற்காகக் காஞ்சிபுரம் அடிசன்பேட்டை மற்றும் சேக்குப்பேட்டையில உள்ள ஐந்து கடைகளைக் கொடையாகக் கொடுத்துள்ளது. சக ஆண்டுடன் ஆங்கில ஆண்டும் இடம் பெறுகிறது. இக்கல்வெட்டில் சில ஆங்கிலம் மற்றும் தெலுங்குச் சொற்களும் இடம் பெற்றுள்ளன.

முருகன் துணை

1. சுவஸ்திஸ்ரீவிஜயார்ப்புதயசாலிவாகனவரு
2. ஷம் 1806 க்குசரியான இங்கிலிஷ் 1863இல் நிகழு
3. ம் சுபானு வருஷம் ஆவணி மாதம் 30 வாலாஜா
4. தாலுக்கா நாகவேடு கிராமத்திலிருக்கும் பூவை
5. யராகிய துளுவவேளாளர் மரபில் வந்ததிருக்கு
6. மாரர்ஸ்ரீபெருமாள் முதலியார் குமாரர்களாகிய
7. குப்பாத்தை முதலியார் சின்னய்யா முதலியார்
8. கோவிந்த முதலியார் ஆகிய மூவரும் எழுதிவை
9. த்தசிலாசாதனம்
10. திருத்தணிகையின் மடங்கிராமத்
11. தில் ஆட்சேபமடத்திற்குக் கிழக்கு வீரபத்திரசுவா
12. மி கோயிலுக்கு மேற்கு சிவில்ரோட்டுக்குத் தெற்கு
13. சிவசுப்பிரமணியசுவாமி சந்நிதி வீதிக்கு வடக்கு
14. இருநாற்பாங்கு எல்லைக்கு உட்பட்ட முன்கட்டு
15. கிழக்குமேற்குஅடி 42வடக்குமேற்குஅடி 41 – 2
16. 3 வது கட்டு வடக்கு தெற்கு அடி 12 கிழக்கு மேற்கு
17. அடி இந்நிலத்தை எங்களுடைய கஷ்டார்ச
18. த்தைக் கொண்டு விலைக்கு வாங்கி மூன்று கட்டுகள்
19. க ... இச்சத்திரத்தை முருகக்கடவுளை தரிசனம் செய்ய வ
20. ரும் புண்ணியவான்களுக்கும் பாட்டைசாரிகளும் தங்கும் ப
21. டியாகக்கட்டி இச்சத்திரத்தின் நித்திய தீபத்திற்கு
22. சுத்தி செய்வதற்கும் பழுதுபார்ப்பதற்கும் காஞ்

23. சிபுரம் ஆடிசன்பேட்டை அரங்கசாணி குளத்தண்டையின்
24. 266வது 230வது 234வது 235வது நெம்பர்களையுடைய
25. கடைகள் நான்கையும் சேக்குப்பேட்டை பெரிய தெருவின்
26. 25வது நெம்பரையுடையகடை ஒன்றையும் விலைக்குவா
27. ங்கி அவைகளின் வருமானத்தைச் சாசுவதமானபண்
28. டாக ஏற்படுத்தி இந்தச் சத்திரத்தையும் இதற்காக ஏற்
29. படுத்தியிருக்கும் பண்டையும் எங்கள் சொந்த பிரயோச
30. னத்திற்கு உபயோகப்படுத்தாமல் நடத்திக்கொண்டு
31. வருவது போல எங்கள் பரம்பரை யாரும் நடத்தி
32. கொண்டு வருவதேயல்லாமல்தன்ரொணங்களை
33. குறித்து இவைகளைக் கொதுவை வைக்கவும் விற்க
34. வும் எங்களுக்கும் எங்கள் பரம்பரை யாருக்கும்
35. பாத்தியதை உண்டென்பதை எதிர்பாராமல் நீடுழிகாலம்
36. நடத்திக் கொண்டு வரவேண்டுமென்பதற்கு இத்திருத்
37. தணிகை முருகக்கடவுளே துணையாயிருக்க வேண்டும்

இப்படிக்கு

குப்பாத்தைமுதலியார்

நாகவேடுசின்னய்யாமுதலியார்

கோவிந்தமுதலியார்

# 98. ஏற்காடு நார்த்தஞ்சேடு செப்பேடு

**சி.வீரராகவன் விழுப்புரம்,**
**பொன்.வெங்கடேசன், ஆறகழூர்,**
**சி.பொன்னம்பலம், கோ.பெருமாள், பேளூர்,**
**ஜீவநாராயணன், பெத்தநாயக்கன் பாளையம.**

**இடம்:** சேலம் மாவட்டம் ஏற்காடு வட்டம் மோகநாட்டில் உள்ள நார்த்தஞ்சேடு என்ற கிராமத்தில் உள்ள பொன்னாச்சியம்மன் கோயில்

**காலம்:** பொ.யு 19 ஆம் நூற்றாண்டு

**செய்தி:** நார்த்தாஞ்சேடு கிராமத்தில் கண்டறியப்பட்ட செப்புபட்டயங்கள் தெலுங்கு மொழியில் உள்ளது. காஞ்சிபுரம் பேராசிரியர் முனைவர் சங்கரநாராயணன் அவர்கள் மூலம் இவை படிக்கப்பட்டு பொருள் அறியப்பட்டது.இங்கு இரண்டு செப்பேடுகள் உள்ளன.

## முதல் செப்புபட்டயம்

ஸ்ரீ மதே ராமானுஜாய நம என செப்புபட்டயத்தில் எழுத்து துவங்குகிறது. தெலுங்கு மொழியில் 24 வரிகளில் செப்புபட்டயம் எழுதப்பட்டுள்ளது. 130 ஆண்டுகளுக்கு முன்பு சர்வஜித் வருடம் ஆடி மாதம் 31 ஆம் தேதி திங்கட்கிழமை எழுதப்பட்டுள்ளது. சேலம் மாவட்டம் சேர்வராயன்மலை நார்த்தஞ்சேடு கிராமத்தில் உள்ள மலையாளி இன மக்களான செங்காந்த கவுண்டர், நாட்நாடகவுண்டர், ஆடகாரகவுண்டர்,சின்னாகவுண்டர் மற்றும் இவர்களின் வம்சாவளியினர் பெயர்கள் குறிப்பிடப்பட்டு இவர்கள் அனைவரும் திருப்பதிக்கு சென்று திருப்பதி திருமலை வகையறாவை சேர்ந்த முதல் ஆச்சாரியார் வேங்கட கிருஷ்ணாசாரியின் மகன் வேதாந்தசாரியனிடம் சங்கு சக்கர முத்திரையை செய்து கொண்டு அதை உடலில்



முத்திரையாக குத்திக்கொண்டனர். அதற்கு கட்டணமாக 5ரூபாய் காசாக கொடுத்துள்ளனர். இப்படி இவர்கள் பரம்பரையினர் முத்திரை போட்டுக்கொள்வதை யாரும் தடுக்க கூடாது என பட்டயத்தில் எழுதப்பட்டுள்ளது. முத்யால ஆசாரி என்பவர் இந்த பட்டயத்தை எழுதியுள்ளார். இராமானுஜர் காலத்தில் இருந்து இப்படி சங்கு சக்கர முத்திரையை உடலில் போட்டுக்கொள்ளும் வழக்கம் இருந்து வந்திருக்கிறது.

## இரண்டாவது பட்டயம்

1890 ஆம் ஆண்டு இந்த செப்பு பட்டயம் 9 வரிகளில் தெலுங்கு மொழியில் எழுதப்பட்டுள்ளது. சேலத்தில் நார்த்தஞ்சேடு மோகநாட்டில் உள்ள மலையாளி இன மக்களான ஆடகார கவுண்டர், பெரிய கவுண்டர், சின்ன கவுண்டர், வெண்ணகவுண்டர் என்கிற நால்வரும் திருப்பதிக்கு சென்று வெங்கடேஸ்வரர், பத்மாவதி, ராமசாமி, சீதை விக்கிரகங்களை செய்து கொண்டு வந்து இந்த கோயிலில் வைத்து வழிபட்டுள்ளனர். எனவே இக்கோயிலில் பூசை செய்யும் உரிமை இந்த நால்வரின் வாரிசுகளுக்கே உரியது என பட்டயத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது



திருமலை திருப்பதி வகையறாவைச் சேர்ந்த தேவஸ்தானத்தின் முதல் ஆசார்யரான பருஷரானி தோமல கொமாரமொளிப்பாசார்யரான வேங்கடகிருஷ்ணாசார்யரின் மகனான வேதாந்தாசார்யரினிடத்தில் கீழ்த்திருப்பதியில் சக்ரமுத்திரை செய்து கொண்டு ஐந்து ரூபாய்கள் காசாகக் கொடுத்தார்கள். கந்தராளி வுந்தே என்னும் பெயருடைய சேலம் ஜில்லா சேர்வராயன் மலை

செங்காந்த கவுண்டர்,

நாட் நாட கவுண்டர்,

நாரதன் சேரிலிருக்கும் மலையாள ஜாதியைச் சேர்ந்த வேங்கட்ராம ஸ்வாமி

நாரதன்சேரிலிருக்கும் ஆடகாரகவுண்டர்

சின்னா கவுண்டர்

இவர் தகப்பர் ராமா கவுண்டர்

சின்னா கவுண்டர் மகன் கவுண்டர் கவுண்டர்

பொன்னா கவுண்டர்
பொன்னா கவுண்டர் மகன் சின்னா பொன்னா கவுண்டர்
மகன் கவுண்டர்
எருது பிடிக்கறவர் பெரிய கவுண்டர்
மகன் சின்னா கவுண்டர்
சின்னா கவுண்டர் மகன் மேககவுண்டர்
ஆண்டவொன்னர் மகன் சின்னாகவுண்டர்
சின்னா கவுண்டர்
பொன்னா கவுண்டர் மகன் தென்கலை த்ராஸூ கவுண்டர்
மகன் சின்னா கவுண்டர்
பிள்ளையா கவுண்டர்
மகன் குஞ்சா கவுண்டர்
மாரியம்மா கோவில் பூஜாரி வரஹால

ஸர்வஜித் வருடம் ஆடிமாஸம் 31 ஆம் தேதி திங்கட்கிழமை திருபதிக்கு வந்து சங்க சக்ர முத்ரைகளைப் போட்டுக் கொண்டார்கள். குமார தோளப்பாசார்யரான மெக்கட க்ருஷ்ணமாசார்யர் குமார வேதாந்தசார்யரிடமோ அல்லது வேங்கடராம ஸ்வாமியினிடமோ மேலே முத்திரைபோட்டுக் கொள்வதை எவரும் தடுக்கக் கூடாது.

பொருள்

1890 ஆமாண்டு மார்ச்சு முதல் தேதி சேலத்தில் நார்த்தஞ்சேடு மொகநாட்டில் ஆடுகாரி கவுந்த - ஆடகார கவுண்டர்
பெரிய கவுந்த - பெரிய கவுண்டர்
சின்னா கவுந்த - சின்ன கவுண்டர்
வின்னா கவுந்த - வெண்ண கவுண்டர்
இவர்கள் திருப்பதியில் செய்த விக்ரஹங்கள்

1. வெங்கடேச்வரர் -1
2. அம்மவாரு -1
3. ராமஸ்வாமி -1
4. அம்மவாரு -1

இந்த வடிவங்களைக் கொண்டுவந்து இந்தக் கோயிலில் வைத்தோம். அதனால் நால்வரும் புத்ர பௌத்ர பரம்பரையாக பூஜை செய்யக் கடவோமானோம்

---

நன்றி : சங்கர நாராயணன் பேராசிரியர், காஞ்சி சங்கராச்சாரியார் பல்கலைகழகம்

# 99. முசிறி சிவன் கோயில் செப்பேடு

**வி. பரந்தாமன், புதுதில்லி.**

**இடம்:** திருச்சி மாவட்டம், முசிறி வட்டம், முசிறியில் உள்ள சந்திரமௌலீஸ்வரர் சமேத கற்பூரவல்லி அம்பாள் கோயிலில் உள்ள நான்கு செப்புப் பட்டையங்கல் இது ஒன்று.

**காலம்:** மதுரை நாயக்கர்கள், விசையரங்க கிஷ்ட்டண முத்துவீர சொக்கநாத நாயக்கர் சகம்:1631, (பொ.ஆ.1709)

**செய்தி:** ஸ்ரீ சோழமண்டலம் திருச்சிராப்பள்ளி உறையூர் மெலைச்சாவடிக்குச் செல்லும் மெய்கொட்டுனாடு ஆதனூர்ப் பத்துக்குழித்தண்டலைச் செட்டிகளில் காவக்காரசெட்டி தம்பி செட்டிகளில் செட்டி காத்திசெடி அண்ணனும் செட்டியிவர்கள் முதலான பெருமகளடி உண்ணின தன்மம் குழிக்குண்டலையில் சேர்ந்த சுங்கம் எட்டுத்துரைக்கு ஏர்பெர்பட்ட பொதிக்கும் கிடைப்பொதிக்கும் பொதி ஒன்றுக்கு அரைவிசம் விதம் சோழிசுரமுடையார் கற்பூரவல்லியம்மன் அர்த்தசாமம் பல்லக்குச் சேவை கட்டளைக்கும் தானங்களை ரங்க கிஷ்ட்டண முத்துவீர சொக்கநாத நாயக்கர் செப்பேட்டில் ரங்க கிஷ்ட்டண முத்துவீர சொக்கநாத நாயக்கர் காலத்தில் நயினாப்பமுதலியார் மகன் தாண்டவராய முதலியார் அயிலூர்ச் சீமையில் உள்ள காவல் தான நிலத்தை முசிறி சோழீஸ்வரமுடையார் கற்பூரவல்லியம்மன் .

**முன் பக்கம்**

1.சுபமஸ்து ஸ்ரீ மகாமண்டலேசுரன் அரியவிபாடன்
2.பாஷைக்குத் தப்புவராய கண்டன் கொண்டனாடு கொண்டு கொ
3.ண்டனாடு குடாதான் புறுவ தெடசண்பச்சிம உத்தர சத்தசமு
4.த்திராதிபதி ஈளமுதலாய எம்மண்டலமுந்திரை கொண்டரு
5.ளிய ராசாதிராசன் ராச பரமேசுரன் ராசமார்த்தாண்டனாசி வெ
6.சியர் புசங்கன் மெதினிமெ சூர கண்டன் கட்டாரச்சாலுவன்
7.பரராசதிமிர் சூரியன் கெடியங்கவிமன் துலுக்கதளவிபாடன்
8.துலுக்கர் மொகந்த விளத்தான் ஒட்டிய களவிபாடன் ஒ
9.ட்டியர் மொகந்த விளத்தான் ஈளமுத்திரை கொண்டு
10.ராட பாணாயன் பட்டணமுமளித்து சமனொளியுந் த்ருக்கொ
11.ணமலையுங் கொண்டருளிய அசுபதிகெசபதி நரபதி நவகொ
12.டி நாராயணன் சொழமண்டலப் பிரதிஷ்ட்டாபனாசாரி
13.யன் பாண்டிமண்டலப் பிரதிஷ்ட்டாபனாசாரியன் கொ
14.ண்டபாதிசுரன் இரவி நாராயணன் உரிகுலசுரத்தானத்துட்
15.டாயகண்டன் தெவமகாராயர் புசபிலராயர் வீர வசந்திராயர்
16.விருபாட்சிராயர் மல்லிகார்சுனராயர் விரநரசிக்கராயர் கொண்
17.டு திகதம்பமும் எட்டு திக்கும் விசையம் பண்ணிய ஸ்ரீ வீரகிஷ்ட்ட

18.ண தெவமகாராயர் அச்சுதெவ மகாராயர் சதாசிவ தெவ மகாராயர்

19.யர் விபுதிருத்தி ராட்சகன் கவச்சிராங்க தெ மகாராயர் கிஷ்ட்ட

20.ண தெவமகாராயர் ராமதெவ மகாராயர் வெங்கிடபதிராயர் ம

21.காராயர் பெரிய வெங்கிடபதிராயர் மகாராயர் பிரதிபுராச்சிய

22.ம் பண்ணி அருளா நின்ற நின்ற சகாத்தம் சூசுளஙயக (1631) யிதன் மெல்

23.செல்லா நின்ற விகுறுதி வருடம் ஆவணி மாதம் 4 சுக்கிர வாரமும் திருவொ

24.ண நட்செத்திரமும் பஞ்சமியும் பெற்ற நாள் அசுபதினத்தில் ஸ்ரீ மகா

25.மண்டலெசுர விசுவனாதனாயக்கர் திருமலை நாயக்கர் முத்துவீரப்

26.ப்னாயக்கர் சொக்கநாத நாயக்கர் ரங்ககிஷ்ட்டண முத்து வீரப்பனாய

27.க்கர் விசைய ரங்க கிஷ்ட்டண முத்துவீர சொக்கநாத நாயக்கரய்

28.யனவர்கள் புண்ணியமாக ஸ்ரீ துப்பாக்குலு ராம கிருஷ்ட்டணப்

29.ப நாயக்கரய்யனவர்கள் நாளையிலெ நனாத்தை முதலியாரவர்க



30. ள் குமாரன் தாண்டவராய முதலியாரவர்கள் புண்ணியமாகக் க
31.ட்டளையிட்ட தன்மம் திருச்சிலம்பள்ளிக்கு வடகரை ராசவளநாடு
32.பாச்சில்க் கூற்றத்தில் திருவெள்ளரை மெற் படாகையில் ஆமூர்
33.நாடு முசுரியான மும்முடிசொழபெடை சொழிசுரமுடைய
34.ர் சன்னதிக்கு அதிபதியான தண்டெசுர சுவாமியாரவர்களுக்கு
35.ஸ்ரீ சொழமண்டலம் திருச்சிராப்பள்ளி உறையூர் மெலைச்சாவடி
36.க்குச் செல்லும் மெய்கொட்டுனாடுனாடு ஆதனூர்ப் பத்துக்குழித்தண்ட
37.லைச் செட்டிகளில் காவக்கார செட்டிதம்பி செட்டிகளில்ச் செட்டி காத்தி
38.செடி அண்ணனும் செட்டியிவர்கள் முதலான பெருமகளடி உண்ணி
39.ன தன்மம் குழிக்குண்டலையில்ச் செந்த சுங்கம் எட்டுத்துரைக்கு ஏர்பெர்
40.பட்ட பொதிக்கும் கிடைப்பொதிக்கும் பொதி ஓன்றுக்கு அரைவிசம் வித
41.ம் சொழிசுரமுடையார் கற்பூரவல்லியம்மன் அர்த்தசாமம் பல்லக்கு
42.ச் செவை கட்டளைக்கு குடுத்து வருவொமாகவும் இந்தப்படிக்கு இந்த த
43.ர்மம் புத்திர கொத்திர பரம்பரையாய் நடத்திவிப்பொமாக
44.வும் இந்தத் தர்மத்தை யாதாமொருவர் பரிபாலன் பண்ணி நட



45.த்தி விச்ச பேர்களுக்கு ஆயிர ரொக்கியமும் ஆயிசுவர்க்களையும் அஷ்ட்

46.ட லட்சுமிகாமும் சந்தான லட்சுமியும் சகலபாக்கியமும் மென்

**பின்பக்கம்:**

47.மேலும் முண்டாவதாகவும் யிந்த தர்மத்துக்கு யாதாமொருவார் அகுத

48.ம் பண்ணின பெருண்டாகில் நவர்கள் கெங்கை கரையிலெ ப

49.ண்ணிய தலங்களிலெ காராம்பசுவைத் தன்கையினாலெ கொ

50.ண்ண பாவத்திலெ பொவாராகவும் அசுவதி விரமத்தசிசுவத்திர

51.சத்தி யிது முதலான பண்ணின தொஷத்திலெ பொக கடவார்கலும்

52.கர்புரவல்லியம்மன் துணை உ இப்படிக்கு எங்கள் கை எளு

53.த்து கவத்தார் செட்டி தம்பி செட்டி கலிச்சி செட்டி காத்திசெட்டி அ

54.ண்ணனும் செட்டியென யிவர்கள் தன்மம் உ.

# 100. நாட்டரசன்கோட்டைச் செப்புப் பட்டயம்

**செந்தீ நடராசன், நாகர்கோயில்.**

**இடம்:** காரைக்குடி ஸ்தபதி குடும்ப பொறியாளர் இனிய. உமாமகேஸ்வரன் வழி

**காலம்:** மன்மத வருடம் மாசி 20, பொ.ஆ. 1720 மார்ச் முன்பாதி ஆகலாம் - கன்று மேய்க்கி உடையார் தேவர் என்பார் திருவிடையாத் தேவர்(எ) விசயரெகுநாத சேதுபதி (1711 - 1725) ஆக இருக்கலாம்.

**செய்தி:** அக்கால நில உடமையாளர்களுக்கும் உழுகுடிகளுக்கும் இடையே நிகழ்ந்த பிரச்னையும், அதை அக்கால சமூகப்பிரிவினர்கள் எவ்வாறு எதிர்கொண்டு தீர்த்து வைத்தனர் என்பதையும் விரிவாக விவரிக்கிறது. இச்செப்பேட்டு பிரதி பாதிக்கப்பட்ட சமூகத்தினரிடம் இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

## முதல் பக்கம்

(சூலாயுதப்படத்தின் கீழ் ஸ்ரீராமஜெயம் என்ற கிரந்த எழுத்து)

1. மன்மத வருடம் மாசி மாதம் 20ந்தேதி கண்ணுமேக்கி உடை
2. யர் தேவற் விசையரெகுநாதத் தேவன் றாச்சியத்தில் தா
3. ண்டறாயபிள்ளை பிறதானிக்க நாளையில் ஆனக்கன்
4. சேனைவளநாடு செகறம் சேவளத்தூற் முத்தண -
5. தேவற் வீட்டில் வெள்ளையனும் மல்லற வெட்டியும் நத்
6. தானும் வீமனும் மன்னமுடி தேவற் வீட்டிலும் மேல்படி முத்
7. தண தேவற் வீட்டிலும் துற்சனவேலை செயிதும் மாட்
8. டை கானாமல் பிடித்தும் யிப்படி செயிதபடியால் கண்டு பி
9. டித்து உண்ணிகூடத்தில் அடைத்து வையித்து மொள
10. காயை புகைத்து தொந்தறவு செயிது காணிகறை யில்
11. லை யென்று சொன்னாற்கள் அதற்கு உள்ளுற் பரிதி
12. கோனா' கள் அப்படி சொல்லுவது சறியில்லை
13. காணிபூமி குடுக்கவேணுமென்று சொன்னாற்கள்
14. யிண்னைக்கி வெள்ளிகிளமை அய்யனாற்கோவி
15. லுக்கு நாள் வைக்கப்போறோம் தப்புசொம்பு செ
16. டுத்துச் சேவிக்க சொல்லுங்கள் யென்று சொ
17. ன்னாற்கள் அதுக்கு நத்தைபுறக்கி குடும்பனையும் சே
18. வளறத்தூற் யிருளக்குடும்பனையும் சிலம்பக்குடும்பனையும்
19. மானம் பாத்திக்குடும்பனையும் நாலு பேறையும் நெதையி
20. ல்வைத்த அவதாறத்தை யேத்துக்கொள்ள சொன்னாற
21. கள் அதுபோல யேத்துக்கொண்டான் மேல்படி பறை
22. யங்கள் யிப்போது தொட்ட தப்பு கெடையாதுயென்
23. று சொன்னான் அதற்க்கு ஊறாற் பள்ளணை மோள
24. ங்குடுக்கச் சொன்னாற்கள் யென்னிடதில் மணமோள

25. ந்தானிருக்குது யென்று சொன்னாற்கள் மேல்படி மே
26. ளம் உடைந்து போனால் போன மோளம் தாரேன்
27. யென்று பறையங்கள் சொன்னாங்கள் அதற்க்
28. கு கோவிலுக்கு போயிட்டு வரும்போது மளை பெயிந்து
29. மோளம் உடைஞ்சு போச்சுது உடைஞ்சுபோன சே
30. தி கேட்டு பள்ளன் மோளம் கொண்டுவா வென்று சொ
31. ன்னான் சாயந்திறம் தாறோமென்றான் அதுக்கு சாமி
32. ன் கேட்டான் சக்கிலிய சோனை யேத்துக்கொண்டா‘
33. ன் அண்ணை ராத்திறியில் புறப்பட்டு காட்டு ஊறணி
34. கி ஓடிப்போயிட்டான் தடத்தைப் பத்திப்பிடித்து வள



35. க்கு செட்டி தண்டணிக்கி கூட்டிபோயி வளக்கு கேட்டாற்க
36. ள் முத்துக் கிஷ்ட்டணன் செட்டி வகையறா பேற்களும்
37. கூடி கேள்க்கும்போது ஊறாற் தீத்தது சறியென்று'
38. சொன்னாற்கள் யினிமேல் பேசியபடிகித் தருவான்
39. யென்று சொன்னாற்கள் ஊறாற் அவதாறம்

**இரண்டாம் பக்கம்**

40. போட்ட முப்பதுப் பொன் யின்னும் தறவில்லையென்
41. றான் தேசத்தாற் நாளை கேட்டுத்தாறோமென்று சொன்
42. னாற்கள் தீருப்பு நகுலை பள்ளன் வாங்கிக்கொண்டா'
43. ன் பறையன் ராத்திறியில்ப் புறப்பட்டு சாத்தறசன் கோ'
44. ட்டைக்கி ஓடிப்போயிட்டான் தடத்து வளியேபோயி
45. கண்டு பிடித்து சாத்தரசன் தேத்தரசன் மூவரசனிடத்தி
46. ல் கூட்டிக்கொண்டு நாயம் கேட்டாற்கள் முன் தீற்ப்
47. பு சறியென்று சொன்னாற்கள் அதுக்குச் சம்மதியா'
48. மல் மேலேறிய நாட்டாற் சம்பத்துக்குப் போனான் அங்
49. கே கண்டுபிடித்து நாட்டிலே கொண்டு போயி ஞாயம்
50. சொல்லும்போது நகுலு யிருக்குதா யென்று கேட்டாற்
51. கள் பரையன் யில்லை யென்றான் பள்ளன் குடுத்தான்
52. மேல்படி நகுலை பாற்க்கும் போது பறையன் செயிதது தப்பித
53. மென்று மோளத்துக்கு வேலைக்காய் போன அவதாறம்
54. 10 பொன் ஆக பொன் எளுவதும் குடுக்க சொன்னாற்க
55. ள் யிந்த தீற்ப்பு கனக செட்டி தேவனும் நாட்டரச
56. தேவனும் கறியான் குடியானும் சிணக்க றாயானும்
57. ம் வடகறைவேளுவ நாட்டாற்காளைபட்டாற் சன்மு
58. க நாறாயணன் பிள்ளையும் பேயி வெட்டிகாளையும் வலை
59. அரசனும் கோவிளு வயிறாவி தேசத்து காமாட்சி செ'
60. ட்டியாற் முத்துபணிக்கன் பூஆண்டி யேகாளி அ
61. ளகன் பரிசாரி நெவாளி அஞ்சுவகை தொள்ளாளி
62. கத்தா பட்டு சொடலை யிவளவு பேரும் கூடி மேல்படி நாட்ட
63. ரசமுதலி மேல்படி பொன் 100' குடுக்கச் சொன்னாற்கள் நா'
64. ன் குடுத்தால் யெனக்கு பறையன் யென்ன உபகா
65. றம் (செ)யிவான் யென்று கேட்டான் நீ சொல்லுறபடி
66. கேள்க்கச் சொல்லுவோமென்றுசொன்னாற்கள்
67. யெ'னக்கு தோட்டாறக் காற்க்க வேனுமென்று சொன்னா
68. ற்கள் அதுக்கு யென்ன சம்பளம் குடுக்குறதென்று கே
69. ட்டான் ஒரு சட்டி கஞ்சியும் ஒரு வேட்டியும் நாதரக்காலு நா
70. லுகாலும் சிருகுடல் அஞ்சிலே ஒரு பங்கும் தங்குல உ
71. லைக்கி நன்மை தின்மை ஒரு பணமும் ஒரு பானை சாதம் நா
72. ன்மைதின்மைக்கி தப்பு கொட்டாவும் யிஷ்பரன்கோவில்
73. தேற் அடிவிட்டுயிருக்குது நாணுனக்கு காணியில் அறைபங்
74. கும் தருகிறேன் ஆவுடையானனுக்கு அறைபங்கு விட்டு முன்பொ'

75. ன்னும் தந்துயிருக்குறேன் யென் மனம்போலே வேலை
76. பாற்க்காத போனால் மேல்படி பொன் குடுத்து விட்ட காணியும்இளந்து
77. போகவேணுமென்று சொன்னான் அந்தபடிக்கி சரி யென்று ஒ
78. ப்புகொண்டான் முன்மாலை முன்சந்தணம் முதலி நாட்டறசன் வா
79. ங்கி பொறகு பளி காண சின்னான் வாங்கிறது அப்பால் அவறவற்
80. சேற்ந்த பேற்கள் வாங்கிகொள்கிறது
81. இந்த கிறல் - வெள்ளையன்
82. இந்த கிறல் - மல்லற வெட்டி
83. இந்த - நத்தான்
84. இந்த - வீமன் இந்தபடிக்கி கல்லு காவேரி புல்லு பூமி சந்திறாள்
85. சூரியாள் உள்ள வரைக்கி ஆண்டு அனுபவித்துகொள்வாறாகவும்
86. இந்த பட்டையம் எளுதினது சிதம்பறம் ஆசாறி

நன்றி: என். நாகராஜன்

# 101. சிவகங்கை - தர்மர் கோயில் செப்பேடு

வள்ளி சொக்கலிங்கம், காரைக்குடி.

**இடம்:** சிவகங்கை தமிழாசிரியர் புலவர் இராம. அருச்சனிடம் உள்ளது.

**காலம் :** கலியுகம் 4839, சாலிவாகன சகாப்தம் 1661, சித்தார்த்தி வருடம் பங்குனி மாதம் 7ஆம் தேதி, பொ.ஆ. 1730.

**செய்தி:** திருவாரூரில் இருக்கும் வெள;ளாளரில் சவரிராசப் பெருமாள் பிள்ளையின் மகன், சிவகங்கையில் தர்மர் கோயில் கட்டிக்கொடுத்து திருவேங்கிடம் பூசாரிக்கு பட்டயமும் கொடுத்துள்ளார் சசிவர்ண பெரிய உடையாத் தேவர். மேலும், சிவகங்கை இராச்சியத்திலுள்ள பலசாதியினரும் முததிரைப் படியினால் இரண்டுபடி நெல் வரியாகக் கொடுத்து வர வேண்டும் என்றும். அந்த வருமானத்தைக் கொண்டு நித்திய பூசையும், அக்கினித் திருநாளும் நடத்தி வரவேண்டும் என்றும் இராமநாதபுரம் தர்மர் கோயிலில் நடப்பது போலவே இங்கும் அக்கினித் திருநாள் நடைபெற்று வருதல் வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது.

**முன்பக்கம்**

1. உ சுப ஸ்ரீ மன்மகா மண்டலேசுபரன் அரியரா
2. யிர தளவிபாடன் பாசைக்குத் தப்புவ ரயிர
3. கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதான்
4. பாண்டி மண்டலப் பிறதானாசாரியன் சோள மண்டல
5. ப் பிறதிஷ்டாபனாசாரியன் தொண்ட மண்டலச் சண்டப்பிற
6. சண்டன். ஈழமும் கொங்கு யா;ப்பாண பட்டணமும்
7. எம்மண்
8. டலப் பட்டணமும் மளித்துக் கெசவேட்டைக் கண்டருளி
9. ய ராசாதிராஜன் ராசபரமேசுபரன் ராசமார்த்தாண்டன்
10. ராசகுல திலகன் அரசுராவண ராமன் அந்தப் பிறசண்ட
11. ன் தாலிக்கு வேலி தரியலர்கள் சிங்கம் வடகரைப்புலி
12. வைய்கை வளனாடன் தேவைநகராதிபன் தனுக்கோடிக் காவ
13. லன் தொண்டித்துரை காவலன் சேதுகாவலன் சேதுமு
14. ர ரட்ச துரந்தரன் ராமனாதசுவாமி காரிய துரந்தரன்
15. சேமத்தலை விளங்குமி ருதாளினான் செங்காவிக் கொடியா
16. ன் செங்காவிச் சிவிகையான் அனுமக்கொடி கெருடக்
17. கொடி புலிக் கொடி சிங்ககொடி வுடையான் இவ்வடி பா
18. வடி மிதித்தேருவார் கண்டன் முல்லை மாலிகையான் இர

19. வி குலசேந்தன் பஞ்சகாவல் பயங்கரன் பரதேசி கா
20. வலன் செம்பிவளநாடன் காக நகராதீபன் அரிபூசைசி
21. வபூசை ஆறவம்பூசை மயேசுரபூசை மறவாத வங்கிஷம்
22. அசுபதி கெசபதி நரபதி யிறனிய கெற்பராசன் ரெகுனாதச் சே
23. துபதியவர்கள்ப் பிறிதிராட்சிய பரிபாலினம் பண்ணி
24. அருளா நின்ற கலியுக சகாற்த்தம் 1661 இ
25. தின் மேல் செல்லா நின்ற சித்திராவுத்தி
26. வருசம் பைங்கூனி மாதம் 7உ சோமவாரனாள் சத்தமியும்
27. உத்திர நட்
28. செத்திரமும் வாளி கரணமும் வாயனாமயோகமுங் கூடின சு
29. ப தினத்தில் பாண்டி தேசத்தில்ப் பொதிகைமாமலையான் வைய்
30. கை வளனாடன் வைய்கையாறுடையான் புனப்பிறளைய
31. னாடன் குளந்தை நகராதிபன் முல்லைமாலிகையான் பஞ்சகெ
32. தியினிலினியன் மும்மதயானையான் திக்கெங்கு யாணை செ
33. லுத்திய சிங்கம் அனுமக்கொடி கெருடக்கொடி புலிக்கொடி
34. சிங்கக்கொடி யுடையான் மும்முரசதிரும் முன்றிலான் மேனா
35. ட்டுப் புலி தாலிக்குவேலி தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் தாச்சி
36. னியத்துக்கு தற்மரைப் போலவும் பரிக்கு நகுலனைப் போலவும்
37. வில்லுக்கு விசையனைப் போலவும் சொல்லுக்கு அரிச்சந்திரனைப்
38. போலவும் வாக்குத் தவ[றா]த கண்டன் ஆற்றுப்பாச்சிவார் சீமையாகா
39. ண அரசுநிலையிட்ட விசையரெகுநாத பெரிய உடையாத் தேவரவ
40. ர்கள் புத்திரன் அரசு நிலையிட்ட விசையரெகுனாத சசி வற்ன்ன
41. பெரிய யுடையாத் தேவரவர்கள் திருவாலூரிலிருக்கும் வெள்
42. ளாளரில் சவரிராசப்பெருமாள் பிள்ளைமகன் திருவேங்கிட
43. பூசாரிக்குச் சிவகெங்கையில்த் தற்ம கோவில்க் கட்டிக்
44. குடுத்து சவுரிசாதனப் பட்டையங் குடுத்த படியினாலே ப
45. ட்டையமாவது சந்திராதித்தவரை உள்ளமட்டு[ம்] சிவகெ
46. ங்கையில்த் தற்மகோவில் கட்டிக்குடுத்து இருக்குற ப
47. டியினாலே அதுகாரியத்துக்கு நம்மிட ராச்சியத்திலே இரு
48. க்கிற தேவதாயம் பிறமதாயம் பண்ணைககிறாமம் ராசாக்க
49. ள் ராவுத்தமார் மங்கசெட்டியள் சேருவைகாறர் பாளைய கா
50. றர் உள்ளியகாறர் ஒண்டடி காறர் போவண்டமாற் முப்ப
51. மார் செம்பிடவர் மாணிபம் மடப்பிறம் மணியக்காரர்

## பின்பக்கம்

52. குடியானபேர் அம்பலகாறர் நாட்டுக கணக்கர் நாடுநகர
53. ங்கள் வலங்கை யிடங்கை தொண்ணூத்தாறு சாதியும்
54. ராமனாதபுரம் தற்ம்ம கோவிலுக்கு வுற்ற பிறகாறம்
55. சிவகெங்கை தற்;ம கோவிலுக்கு வீட்டுக்கு ஆளு
56. முத்திரைப் படியினாலே ரெண்டுபடி நெல் வரி வய்த்து
57. வரிசக்கட்டளையாக குடுத்துவறக் கடவாராகவும் அந்தப்படி
58. வாங்கி தற்ம கோவிலுக்கு நித்தப்பூசையும் அக்கிணி



59. த் திருநாளும் கூட்டிவருவாறாகவும் யிதுக்கு
60. யாதாமொருவராகிலும் தற்மம் யெண்ணெண்னைக்கும் பரிபாலிண
61. பண்ணி வருவாற்க்கு காசிநீர்க் கண்ணியாகுமரி பாவனா
62. சம் வரனாசியாறுங் கோதாபுரி மறுத்துள்ள நதியள் எண்
63. ணில் கோடி சிவ பிறதிஷ்டையும் கோடி விரும்
64. ப பிறதிஷ்டையும் கோடி கண்ணியாதானமும் கோ
65. டி அசுபமேதியாகமும் பண்ணின பலனையடைவா
66. ராகவும், இந்தப் பூசையும் அக்கினி திருநாளும் நடத்துகி
67. ற பேற்க்கு யிகத்திலெ தெய்வேந்திரப் பட்டமும் பறத்திலே
68. வைய்குண்ட கைலாசபதஞ் சேறுவாராகவும் யிந்த த
69. ற்ம கோவிலுக்கு யாதாமொருவர் அகுதம் பண்ணின
70. பேர் காசியிலேயும் ராமேசுரத்தில் யிதற்குள்ள புண்
71. ணிய தலத்திலும் கோடி காராம் பசுவையுங் கோடி தையளையும்
72. கோடி பிராமணரையும் கோடி குளைந்தையளையும்
73. கொண்ட பாவத்தை யடைவாராகவும் யிந்தப் ப
74. டிக்கி சிவகெங்கை தற்ம கோவில்ச் சருவ சாத
75. னப பட்டையம் யெழுதினேன் மதுரையிலிருக்கும்
76. வெள;ளாளரில் சொக்கனாத பிள்ளை மகன் ராயசம் செ
77. ங் கற நாறாயணன் கைய்யெழுத்து சொக்கலி
78. ங்கம் மீனாட்சி துணை .. உ

# 102. புதுக்கோட்டை தொண்டைமான் செப்பேடு

ஜெ. ராஜாமுகமது,
கரு. ராஜேந்திரன், புதுக்கோட்டை.

**இடம்:** புதுக்கோட்டை மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகம் (பதிவறை)

**காலம்:** புதுக்கோட்டை மன்னர் விஜயரகுநாத தொண்டைமான் (1789 -1807), பொ.ஆ. 1800

**செய்தி:** செப்பேடு 27க்கு 19 செ.மீ. அளவும் 1.100 கிராம் எடையும் உடையது. பொ.ஆ.1800-01, தமிழ் ரவுத்திரி வருடம் தை மாதம் 9ஆம் தேதியன்று விசையரகுனாத பாஸ்கரத் தொண்டைமான் அவர்களால் கோபாலதாசு என்ற பிராமணர்க்கு வழங்கிய தாம்பர சாசனப்பட்டையமாகும். பிராமண தானம் என்பதைக்குறிக்க ஓலைக்குடை-கமண்டலத்துடன் பிராமணர் உருவம் செப்பேட்டின் மேல்ப் பகுதியில் கோட்டுருவமாகப் பொறிக்கப்பட்டுள்ளது. கோபாலதாசு என்ற பிராமணர் ஸ்ரீரங்கத்தில் சத்திரம் ஒன்று ஏற்படுத்தி ஸ்ரீரங்கநாதர்க்கு அகண்ட தீபம் ஏற்றுவதற்காக சிங்கத்தாகுறிச்சி பெரியகுளப் பாசனத்தில் நஞ்சை புஞ்சை நிலங்கள்அஷ்ட போக உரிமையுடன சர்வமானியமாக தானம் தரப்பட்டமைக்கு இப்பட்டயம் வழங்கப்பட்டுள்ளது. நிலத்தின் அளவு எல்லைகள் இதனில் குறிக்கப்பட்டுள்ளன.

தானப்பட்டயங்களின் இறுதியில் வழக்கமாகக் கானப்படும் சமஸ்கிருத நீதி ஸ்லோகங்கள இப்பட்டயத்திலும கிரந்தஎழுத்துக்களில் காணப்படுகின்றன. அந்த ஸ்லோகன்களின் கருத்து: 'தான்கொடுத்த தானத்தையும் பிறர் கொடுத்த தானத்தையும பாதுகாத்து பரிபாலனம செய்பவர்கள ஸ்வர்க்க பதவி அடைவார்கள். அபகரிப்பவர்கள் துன்பத்தில் திளைத்து அழிந்து போவார்கள் என்பதாகும்.

## செப்பேட்டு வாசகம்

1. ஸ்வஸ்திஸ்ரீ மன்மகா மண்டலேசுவரன் அரியராயதளவிபாட-
2. ன் பாஷைக்கு தப்புவராயர் கண்டன் மூவராயிர கண்-
3. டன் கண்டர்கண்டன் கண்டையப் பிறதாபன் கட்டா-
4. றிச் சாளுவன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு
5. கு(டா*)ன் ஒரு பரிகொண்டு திரள்பரி வேட்டுமுபைய குலோத்-
6. துங்கன் எம்மண்டலங் கொண்டு யீழமுந்திறை கொண்-
7. ட ராசாதிராசன் ராசபரமேசுபரன் ராசமாற்த்தாண்-
8. டன் ராசநாறணகுல திலகன் ராசகண்டீரன் ராசாக்கள்
9. தம்பிரான் கொட்டத்து மன்னியர் கண்டன் சொரிமன்னி-
10. யர் சூரியன் கெடிமன்னியர் காலாந்தகன் தொண்டம-

11. ண்டல ஸ்தாபனாசாரியன் சோழமண்டலப் பிறதிஷ்-

12. ட்டாபனாசாரியன் பாண்டிமண்டலத் துபத3மனாசாரிய-

13. ன் மறுமன்னியர் கோடாரி குறுமன்னியர் கோளரி ஒட்-

14. டியர் தள விபாடன் ஒட்டியர் மோகந் தவிழ்த்தான் துலு-

15. க்கர் தளவிபாடன் துலுக்கர் மோகந் தவிழ்த்தான் அரிய-

16. தள விபாடன் அரியர் மோகந் தவிழ்த்தான் தொட்டியர் த-

17. ள விபாடன் தொட்டியர் மோகந் தவிழ்த்தான் படைகண்டு த-

18. த்தளிப்பாற்கள் மிண்டன் பஞ்சபாணாவதாரன் தற்காற்குதற்-

19. கன் தற்க வினோதன் தண்டுவார் மிண்டன் சண்டப்பிறச-

20. ண்டன் ஸகலகுணாபிராமன் துங்கா பிராமன் துரகரேபந்த-



21. ன் சொல்லுக்கரிச்சந்திரன் வில்லுக்கு விசையன் பரிக்-
22. கு நகுலன் குடைக்கு கற்ன்னன் பொறுமைக்கு தற்-
23. ம்மர் பூறுவ தெட்சண பச்சிம உத்தர ஸத்தஸமுத்திராதி-
24. பதி அசுபதி கெசபதி தனபதி நரபதி நரவேட்டை கண்டருளி-
25. ய மல்லிகாற்சுன தேவமகாராயர் பிறபுட தேவமகாராய-
26. ர் ராமதேவ மகாராயர் கிஷ்ட்டிண தேவமகாராயர் விரு-
27. ப்பாட்சி தேவமகாரயர் ஆனை கொந்தி தேவ மகாராய-
28. ர் நரசிங்கதேவ/தெலுங்கில் ஸ்ரீராமஜெயம் என்று பெரிதாகப் எழுதப்பட்டுள்ளது/
29. தேவமகா-
30. ராயர் ந-
31. ரசருடைய தேவமகாராய திருமலை தேவமகாராயர்
32. பிறிதிவிராசியம் பண்ணியருளா நின்ற சாலிவாஹ-
33. ந சகார்தம் 1722 கலியுக சகார்த்தம்
34. 4901யிதன் மேல செல்லா நின்ற ரவுத்தரி வருஷம் தை
35. மாதம் (9) பஞ்சமியும் திங்கள்க் கிழமையும் உத்திரட்டா-
36. தி நட்செத்திரமும் பரிகநாம யோகமும் பால வாகறண-
37. முங்கூடின சுபதினத்தில் ராசராச வளநாடு ராசேந்திர-
38. சோழ வளநாடு பன்றிசூழ்நாடு அன்பில் தெற்குலூரிலிரு-
39. க்குங் காணியுடைய அரசர் மக்களில் யிந்திரகுல வங்-
40. கிஷன் தென் கோடியாதிபன் வடகரைப் புலிவா -
41. கைமாலை புயனான ஸ்ரீமது திருமலைத் தொண்டைமானா-
42. ர வளத்ரந் திருமலையப்பராய தொண்டைமானார் புத்ர-
43. ந் ராயஸ்ரீராசா விசைய ரெகுனாதராய பாதர் தொண்-
44. டைமானாரவர்கள் கோ3ந்தாந கோத்ரம் கோவிந்ததாசு
45. பௌத்ரந் துவாரகாதாசு புத்ரந் கோபாலதாசுஸ்ரீரெ-
46. ங்கத்திலே ஸ்ரீரெங்கனாயகர் சன்னதியில் வைக்கு-
47. ற அகண்ட தீபதற்ம்மத்துக்கும் சத்திரந்தற்ம்மத்துக்கு-

**பின்பக்கம்**

48. மாக தாம்புர சா0தனப் பட்டையந் தாரா பூறுவமாகப்ப-
49. ண்ணிக் கொடுத்தபடி சிங்கத்தாகுறிச்சி பெரியகுளம்ந-
50. ஞ்சை செயி/(111/4)/மாம்பாடி யேந்தல்/ 2 1/2 கு நஞ்சை
51. செயி/ எ7 புஞ்சை ஏர்/(33)/ யிந்த நிலத்துக் கெல்லை

52. யாவது ராசிபுரத்து யெல்லைக்கு மேற்கு செங்களர்க்கு-

53. டி யெல்லைக்கு வடக்கு கொளுக்கட்டகுடியெல்லைக்குகி-

54. ழக்கு திருமலைசமுத்திரம் யெல்லைக்கு தெற்கு ஆக நான்-

55. கெல்லைக்குள்ப் பட்ட நஞ்சை புஞ்சையி தெவதாய-

56. ம் பிறும்மதாயம் உம்பளம் திட்டு திடல் தொ-

57. ப்புத்துறவு மாவடை மரவடை நத்தம் படுகை நிதிநி-

58. ட்சேபஜெல தருபாஷாணாக்ஷிண்யாகாமிஸ்ர்ய ஸா-



59.வயமெனப்பட்ட அஷ்ட்ட போக தேசஸ்வாமியங்-

60. களுள்பட ஆசந்திறாக்க ஸ்தாகியாக புத்ர பௌத்ர பாரம்ப-

61. ரையமாகவும் யிந்தப்படி ஸம்மதிச்சுராய ஸ்ரீராசாவி-

62. சைய ரெகுனாதராய பாதாதொண்டைமானாரவர்கள்

63. கோபாலதாசு தற்மம் ஸ்ரீரெங்கத்திலே ஸ்ரீரெங்கநாயக-

64. ருக்கு அகண்ட தீபத்துக்கும் சத்திரதற்மத்துக்கும் சிங்க-

65. த்தாகுறிச்சியை தாம்புர சா$_0$ஸநப்பட்டையம் பண்ணி-

66. க் கொடுத்தோம் யிந்த தற்ம்மத்துக்கு யாதாமொருத-

67. ர் விகாதம் பண்ணு குறார்களோ அவர்கள் ப்ரஹ்மஸ்வ-

68. ப ஹார தோ$_3$ஷத்திதுக்குள்பட்ட போவாகளாப்

69. போகக்கடவாராகவும் / தா$_3$நபாலநயொம்மச்யே தா$_3$நா-

70. ச$_2$ச்$_0$ரேயோந் பாலநம்தா$_3$நாத் ஸ்வர்க$_3$மவாப்நோதிபா-

71. லநாத்$_3$சு$_2$தம்பத$_3$ம்/ ஏகைவப$_4$கி$_3$தீலோசேவபஸ-

72. ர்வேஷாமேவபூ$_4$ ஜாடநபோ$_4$ஜ்யா நகர ச்ராஹ்யா-

73. விப்ரத$_3$த்தாந் பாலநம் பரத$_3$த்தாபஹரரேண ஸ்வத$_3$-

74. த்தந்நிஷ்ப$_2$லம் பவேத்/யிந்த பட்டையம் எழுதின நன்மை

75. பழணியப்ப வாத்தியார் குமாரன் ரெகுனாதவாத்தியா-

76. ர்கையிஎழுத்து.

# 103. மொழிமாறா கைச்சீட்டு ஓலை ஆவணம்

**அ.கா.பெருமாள், நாகர்கோயில்.**

**இடம்:** கோட்டாறு இனிய. ராஜன் என்பவரிடம் இருந்து கிடைத்த ஓலை ஆவணம்.

**காலம்:** கொல்லம் 1040, மாசி, 13ந்தேதி (நேரான பொது ஆண்டு 1865, பெப்ரவரி 22, புதன்கிழமை)

**செய்தி:** பரவர் அந்தோனி முதலான பேர்கள் முத்து சவரிமுத்து முதலானோர் இடையே உள்ள பிணக்கு தீர்த்து ஊரில் சேர்த்துக்கொண்டு வரிமுதலியன பெற்று ஒற்றுமையாக இருப்பதாக சர்ச் ஆண்டகைமுன் உறுதி எடுத்துக்கொள்ளும் மொழிமாறா கைச்சீட்டு. இந்த ஒப்பந்தம் மீறப்படுமானால் கோவிலுக்கு 100 ரூபாய் அபராதம்அளிக்க உடன்படுகிறது. அரசர் - தீருவிதாங்கூர் மன்னர் ஆயில்யம் திருநாள் ராமவர்மா (1860 - 80)

**முன்பக்கம்**

1. 1040 மாசி மாதம் 13 ள் கோட்டாறு வடக்கு தெரு பரவறு அந்தோனிக்கும் சந்தியாவு அந்தோனிக்கும் சந்தகுருசு மாதவடியானுக்கும்

2. மிக்கேல் தொம்மைகண்ணுக்கும் நீக்கிலான் அந்தோனிக்கும் மேல்படியூர் தெக்கு தெரு சுட(லை)முத்து தோமினிக்கு மொடுதவத்துக்கும்[1] முத்து சவேரிமுத்தும் சந்தகுருசு

3. மாதவடியானும் வெள்ளயன் தம்மக்காரனும் தொம்மையருளப்பன் சிவணஞ்ச பெருமாள் முதல்பேற் செனம் பூர்காரும் கூடி எழுதிக் கொடுத்த மொளிமாறா

4. கச்சீட்டாவிது நாளது முதல் மேல்படியாரை எங்களோடு சேறு்து கோவில் உள்பட்ட திருநாள் சிலவு வரிகுறிகளுக்கும் அஞ்சிலொன்று மேல்படியாற்களோடு

5. வாங்கி நன்மை தின்மை குணதோசங்களுக்கும் மேல்படியாரை எங்களோடு கூட்டி நடத்தி சுவசுவந்திரங்களும் குடுத்தும் பற்றியும் நடந்து கொள்வோமாகவும்

**மறுபக்கம்**

6. யினிமேல் மாறி மறித்து பேசினதே உண்டானால் கோவிலுக்கு நூறு ரூபாய் அவதாரமும் குடுத்து ஆண்டவர்கள் யிடுகிற ஆக்கினை அவதாயமும் குடுத்து கையேத்து

7. கொள்வோமாக

8. சம்மதிச்சும் யிந்த மொளிமாறா கச்சீட்டும் எளுதிக்கொடுத்தோம் சுடலைமுத்து தோமீனிக்கு மொடுதவம் முதல் பேறா சேளம் ஊ ற் காறருவும்

9. யிதுக்கு சாட்சி கோட்டாறு கோவில் கணக்கு மிக்கேல் பிள்ளை (ஒப்பம்) மேல்படி சாட்சி வாசலுபதேசம் அருளப்ப்பிள்ளை (ஒப்பம்) ஆரவாய் மொளி சவேரிமுத்து சவேரிமுத்து (ஒப்பம்)

10. யிது எளுதின கோட்டாறு யின்னாசி முத்து பிறாஞ்சீஸு (ஒப்பம்)

---

1 மொடுதவம் - ஊர்த்தலைவர், இந்த அடைமொழி ஆள்பெயருடன் இணைத்து வழங்கப்பெறும்.

நன்றி: ச. அனந்து,

# தொல்லியல்

## 104. ஆண்மர் நாட்டு வட்டாரத் தொல்லியல்

போ.கந்தசாமி, இராஜபாளையம்

இராஜபாளையத்திலிருந்து சங்கரன்கோவில் செல்லும் வழியில் முறம்பிலிருந்து 3கி.மீ தொலைவில் அமைந்துள்ள வாழந்தாள்புரம் கிராமத்தை ஒட்டிப் பாய்கின்ற தேவியாற்றங்கரை வாழவந்தாள்புரம் வாசுதேவநல்லூர் பகுதிகளில் கருப்பு - சிவப்பு நிற பானை ஓடுகள் செங்கற்கள் இன்றளவும் மக்கள் வாழ்ந்த வீடுகளின் எச்சங்களாக பானை ஓடுகளும் 1அடி நுண்கற்காலக் கருவிகளும் காணப்படுகின்றன. வாழவந்தாள்புரத்தின் 13ஆம் நூற்றாண்டைச் சோ;ந்த சிவ-லிங்கம், நந்திச்சிற்பங்கள் உள்ளன.

இக்கோவில் பாரிவார தெய்வங்களில் ஒன்றான சங்கிலி மாடசாமி நவகண்டச் சிற்பமாகும்.











# 105. வாலியர்காடு கல்திட்டை, கல்வட்டங்கள்

இல.தியாகராஜன், அரியலூர்.
ம.பாரதி ராஜா, வேட்டவலம்.

விழுப்புரம் மாவட்டம் திருக்கோவிலூர் வட்டத்தில் உள்ள ஆதிச்சநல்லூர் என்னும் கிராமத்தில் வாலியர் காடு என்றழைக்கப்படும் இடத்தில் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட கல்திட்டை, கல்வட்டங்கள் போன்றவை காணப்படுகின்றன. அங்கு ஆய்வு மேற்கொள்ளும் போது சுமார் 8.5x6cm மற்றும் 11.5x10.5cm அளவுள்ள இரண்டு இரும்பு கோடாரிகள் கிடைத்தன. இவை இரும்புக் காலத்தில் மக்கள் பயன்படுத்திய கருவிகள் ஆகும். அதில் ஒரு கோடரியில் கைகளால் பிடித்து வெட்டும்படியான அமைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. மற்றுமொரு கோடரியானது அரைச்சந்திர வடிவில் காணப்படுகிறது. மேலும் இவ்விடத்தை சுற்றி கருப்பு, சிவப்பு பானை ஓடுகள், கூம்பு வடிவ பொருட்கள், சிறு மட்கலன்கள் போன்றவையும் கிடைத்துள்ளன. அவற்றில் 4.5x6 cm அளவுள்ள அலங்காரம் செய்யப்பட்ட பானையோடு ஒன்றும் கிடைத்துள்ளது. இவ்விடத்தில் ஒரு மிகப்பெரிய கல்திட்டை ஒன்றும் காணப்படுகிறது. அதை ஊர் மக்கள் வாலியர் வீடு என்று அழைக்கின்றனர். பல கல்திட்டைகள் விவசாய பயன்பாட்டிற்காக அழிக்கப்பட்டுவிட்டன.

# 106. கொளத்தூர் ஈமத்தாழிகள்

இல.தியாகராஜன், அரியலூர்.
ம.பாரதி ராஜா, வேட்டவலம்.



திருவண்ணாமலை மாவட்டம் கீழ்பென்னாத்தூர் வட்டம் கொளத்தூர் கிராமத்தில் நந்தன் கால்வாய் அருகே உள்ள தனியார் நிலத்தில் சுமார் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகள் மற்றும் கருப்பு சிவப்பு வண்ண பானையோடுகள் அறியப்பட்டு உள்ளன..

# 107. 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட கல்வட்டங்கள்

**இல.தியாகராஜன், அரியலூர்.**
**ம.பாரதி ராஜா,வேட்டவலம்.**

விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டத்தில் உள்ள நாகலாம்பட்டு கிராமத்தில் சுமார் 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட கல்வட்டங்கள் கண்டுபிடிப்பு. நெய்வாநத்தம்-நாகலாம்பட்டு செல்லும் வழியில் அர்ஜுனன் என்பவரது நிலத்தில் பெருங்கற்கால பானை ஓடுகள் மற்றும் ஈமத்தாழிகள் கிடைத்துள்ளன. நாகலாம்பட்டு-நல்லான்பிள்ளை பெற்றாள் செல்லும் வழியில் தனியாருக்கு சொந்தமான நிலத்தில் சுமார் 15க்கும் மேற்பட்ட கல்வட்டங்கள் நல்ல நிலையில் காணப்படுகின்றன. மேலும் பல கற்பதுக்கைகள் நிலத்தை சீரமைக்கும் போது அழிக்கப்பட்டுவிட்டன.



# 108. உளுந்தாம்பட்டு தொல்லியல் செய்திகள்

**சி.இம்மானுவேல், உளுந்தாம்பட்டு**

கடலூர் மாவட்டம், பண்ருட்டிவட்டம், பண்ருட்டியிலிருந்து 17 கி.மீ. தொலைவில் உள்ள உளுந்தாம்பட்டு கிராமத்தில் உள்ள தென்பெண்ணை ஆற்றங்கரையில் (ஆற்றில்) களஆய்வு மேற்கொண்ட போது தொல்லியல் பொருட்கள் புதியதாக கண்டுபிடிக்கப்பட்டன. அவை: சங்ககால உறைகிணறு, கருப்பு சிவப்பு பானை ஓடு, கிண்டி, மூக்கி, வட்டசில்லுகள், சுடுமண் ஆட்டகாய், சுடுமண் அகல் விளக்கு, சுடுமண் பொம்மை, புதிய கற்கால ஆயுதங்கள் (கைக்கோடாரி), சுடுமண், பாத்திரம், முதுமக்கள் தாழியின் உடைந்த பாகம் ஆகியவையாகும்.

இந்த பகுதியை மேற்கண்ட ஆய்வில் சங்ககாலம் முதல் புதிய கற்காலம் வரை தடயங்கள் கிடைத்த வண்ணம் உள்ளன.



# 109. முள்ளூர் கல்திட்டை

**இல.தியாகராஜன், அரியலூர்.**
**ம.பாரதி ராஜா, வேட்டவலம்.**



விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டத்தில் உள்ள முள்ளூர் என்ற ஊரில் ஏரிக்கரையின் அருகில் அமைந்துள்ள அரசமரத்தின் கீழ் ஒரு கல்திட்டையானது காணப்படுகிறது. இக்கல்திட்டையின் ஒருபுறம் யானை போன்ற உருவம் கோட்டுருவமாக செதுக்கப்பட்டுள்ளது. 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அய்யனார் சிலையை வைத்து இத்திட்டையை தற்போது அய்யனார் கோயில் என்று வழிபாடு செய்கின்றனர். இக்கோயிலை சுற்றியுள்ள பகுதிகளில் கருப்பு சிவப்பு பானை ஓடுகள் நிறைய கிடைக்கின்றன.



# 110. தேனி மாவட்டம் சில்வார்பட்டியில் அரிதான குழிக் குறி கல்திட்டை

பாவெல்பாரதி , தேனி.
ப.மோகன்குமாரமங்கலம், தேனி.



வைகை ஆறு மற்றும் அதன் துணை ஆறுகளான வராகநதி, மஞ்சளாற்றுப் பகுதிகளில் நடத்திய தொல்லியல் ஆய்வில் அரிதான குழிக்குறி கல்திட்டை கண்டறியப்பட்டது. தேனி மாவட்டம் பெரியகுளம் வட்டம் சில்வார்பட்டி கிராமத்திலிருந்து பெரியகுளம் திண்டுக்கல் தேசிய நெடுஞ்சாலைக்குச் செல்லும் சாலையில் ஒரு கி.மீ. தொலைவில் கீழ்ப்புறம் விவசாய நிலத்தில் சமதளத்தில் வேப்பமரமும் கருவேல மரமும் வளர்ந்த புதரில் கற்திட்டை ஒன்று உள்ளது. இவ்விடம் வைகை நதியின் துணையாறுகளில் ஒன்றான வராக நதிக்கு கிழக்கே மூன்று கி.மீ தொலைவிலும் மேற்குத்தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியான முருகமலை அடிவாரத்திற்கு சுமார் பத்து கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது . இக்கல்திட்டை தம்பட்டம்பாறை என்று மக்களால் அழைக்கப்படுகிறது.

இக்கற்திட்டையின் மூடுபலகை முழுவதும் இடம்விடாமல் பல்லாங்குழிகள் போல இரு நூறுக்கும் மேற்பட்ட குழிகள் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றில் ஆறு குழிகள் பளிச்சென்று தெரிகிற பெரிய குழிகள் ஆகும். இக்குழிகள் அதிகபட்சம் எட்டு முதல் பத்து செ.மீ விட்டமும், மூன்று முதல் ஐந்து செ.மீ ஆழமும் உள்ளவை. இவை நல்ல வழுவழுப்பாக உள்ளன. பெருங்கற்படைச் சின்னங்களில் காணப்படும் இது போன்ற அமைப்பிற்கு குழி குறிகள் , கிண்ணக்குறிகள், கப் மார்க்ஸ் என்று அழைக்கப்படுகிறது.

கோட்பாடுகள்: இக்குழிக்குறிகளை விளங்கிக்கொள்ள நூற்றுக்கும் மேற்பட்ட கோட்பாடுகளை ஆய்வாளர்கள் முன்மொழிந்துள்ளார்கள். அவற்றில் சில கோட்பாடுகள்.

1.தந்திரக்கோட்பாடு , 2.இறப்பிற்குப் பிந்தைய வாழ்க்கையைப் பற்றியது,

3.வாழ்க்கைச் சுழற்சியைக் குறிப்பது, 4.இசைக்கருவிகளோடு தொடர்புடையது, 5.வழிபாட்டு அம்சத்தோடு தொடர்புடையது, 6.விண்மீன்கள் கோள்களின் இயக்கம் பற்றிய வானியல் நிகழ்வுகளோடு தொடர்புடையது, 7.விண்மீன் அட்டவனை, நில எல்லையைக் குறிக்கின்ற



ஆவணம் 8.நில உரிமையாளரின் ஆவணம், ஆட்சியாளர்களின் ஆட்சியாண்டைக் குறிக்கும் பாறை ஆவணம் , 9.தங்கம் செம்பு போன்ற உலோகங்களின் இருப்பைக் காட்டும் மண்ணியல் ஆய்வுக் குறியீடு. ஆகியவை முக்கியமான சில கோட்பாடு ஆகும்.

# 111. தேனி மாவட்டப் பெருங்கற்படைச் சின்னங்கள்

**பா. வெல்பாரதி, தேனி.**

தேனி மாவட்டம் மற்றும் அதனை ஒட்டிய பகுதிகளில் வைகை ஆறு, வராக நதி, மஞ்சளாறு பாயும் வெளிகளில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வில் கல்திட்டை, கற்குவை, குத்துக்கல், கல்வட்டம் உள்ளிட்ட பெருங்கற்படைச் சின்னங்கள் கண்டறியப்பட்டன.

**கல்திட்டைகள் :**

**சித்தடி :**




பெரியகுளம் வட்டம் சிந்துவம்பட்டிக்கும் சில்வார்-பட்டிக்கும் இடையில் வேட்டுவன் குளத்துக்குத் தென்புறம் வராக நதியின் இடது கரையில் உள்ள வயல்வெளியில் உள்ள சற்று மேடான இடமே சித்தடி ( சித்தர் அடி) என்று மக்களால் அழைக்கப்பட்டு வழிபாட்டில் இருக்கிறது. இங்கு கிழக்கு மற்றும் வடக்குப் பார்த்த் பீடம் போன்ற அமைப்புகள் இரண்டு உள்ளன. அவற்றின் அருகில் கல்திட்டையின் மூடு பலகை ஒன்று தரையில் கிடக்கிறது. இந்த பீடங்களில் ஒன்றோ அல்லது இரண்டோ கல்திட்டையாக இருந்து பின் பீடமாக மாற்றப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது.

**மேட்டுப்பட்டி கல்திட்டை:**




திண்டுக்கல் மாவட்டம் நிலக்கோட்டை வட்டம் அணைப்பட்டிக்கு விருவீட்டிலிருந்து வரும் வழியில் அணைக்கு ஒரு கி.மீ முன்பாக வைகை ஆற்றின் கீழ் கரை ஓரத்தில் கல்திட்டை ஒன்று உள்ளது. மூன்று பக்கம் அடைப்புகளும் மூடு கல்லும் கொண்டது. ஆனால் இது பலகைக் கல்லால் அமைக்கப்பட்ட கற்திட்டையாக இல்லாமல் பக்கச் சுவர்கள், மூடு கல் அனைத்தும் துண்டுக்கற்களால் அமைக்கப்பட்டுள்ளது.

**கற்குவை :**

பெரியகுளம் வட்டம் தேவதானப்பட்டியிலிருந்து மூன்று கி.மீ தொலைவில் காமட்சி அம்மன் கோவில் வழியாக காமக்காபட்டி செல்லும் வழியில் மஞ்சளாற்றின்

இடது கரையில் அமைந்துள்ள பதினெட்டாம்படிக் கருப்பு கோவில் மலையின் பாறைச் சரிவில் கற்குவை ஒன்று உள்ளது. இது மக்களால் முருகன் என்று அழைக்கப்படுகிறது.



## குத்துக்கல்

**பாண்டி முனி ஈஸ்வரன்:** தேனி மாவட்டம் ஆண்டிபட்டி வட்டத்தில் வைகை அணையின் தெற்கு கரையில் உள்ள ஊர் கரட்டுப்பட்டி. இவ்வூரிலிருந்து ஒரு கி.மீ தூரம் அணைக்குள் மேற்குப்புறமாகச் சென்றால் வைகை ஆற்றின் கிழக்குக் கரையில் தரைக்கு மேல் 172 செ.மீ உயரமான குத்துக்கல் ஒன்று அமைந்துள்ளது. தற்போது பாண்டிமுனி ஈஸ்வரன் என்ற பெயரில் வழிபாடு நடைபெறுகிறது. வைகைக்கரையில் அமைந்துள்ள குத்துக்கற்களில் மிகவும் தடிமனும் உயரமும் கொண்டது. இக்குத்துக்கல் தற்போது அணையின் நீர்ப்பிடிப்புப் பகுதிக்குள் உள்ளது. அணையில் நீர் நிரம்பும் காலத்தில் பார்க்க இயலாது. இக்குத்துக்கல்லுக்கு மேற்கே வைகையின் மேற்கரையில்தான் பின்னத்தேவன்பட்டி, சொக்கத்தேவன்பட்டி குத்துக்கற்கள் அமைந்துள்ளன.



**ஆதீஸ்வரன் கோயில் குத்துக்கற்கள்:** வைகை அணைக்குள் கரட்டுப்பட்டியிலிருந்து ஒரு கி.மீ. தொலைவில் ஒரு மேடு உள்ளது. அங்கு ஆதீஸ்வரன் என்ற கோயில் உள்ளது. அந்தக் கோயிலுக்குள் மூன்று குத்துக்கற்கள் வழிபாட்டில் உள்ளன. மையத்தில் இக்குத்துக்கற்கள் முன்பு இப்பொழுது உள்ள மேட்டுக்குக் கீழ் சற்றுத்தள்ளி இருந்ததாகவும், அணையில் நீர் நிரம்பும் காலத்தில் வழிபாடு செய்ய முடியாததால் அக்குத்துக் கற்களை தோண்டி எடுத்து தற்போது உள்ள மேட்டில் வைத்து வழிபடுவதாகவும் கூறுகிறார்கள்.



## கல் வட்டங்கள்:

தேனி மாவட்டம் பெரியகுளம் வட்டம் வடபுதுப்பட்டி, பொம்மி நாயக்கன்பட்டி, ரெங்கநாதபுரம், எ.வாடிப்பட்டி, கருப்பமூப்பன்பட்டி ஆகிய இடங்களிலும் ஆண்டிபட்டி வட்டம் கரட்டுப்பட்டி, மற்றும் தர்மத்துப்பட்டியிலிருந்து தாதனூர் , கொட்டோடைப்பட்டி செல்லும் வழிகளில் பரவலாகக் கல்வட்டங்கள் காணப்படுகின்றன.




வடபுதுப்பட்டியில் தேனி மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திலிருந்து மூன்று கி.மீ தொலைவில் நாடார் கலை அறிவியல் கல்லூரிக்கு முன்பு உள்ள விளை நிலத்தில் கல்வட்டம் சிதைந்த நிலையில் உள்ளது. முன்பு வட்டமாக இருந்த கல்வட்டம் தற்போது நீள் குவியலாகக் காணப்படுகிறது. இப்பகுதியில் இரும்புக்கசடுகள் நிறையக் காணப்படுகின்றன.

பொம்மிநாயக்கன்பட்டியில் தற்போது மனையிடங்களாக மாற்றப்பட்டுள்ள இடத்தில் சிதைந்த நிலையில் கல்வட்டம் காணப்படுகிறது.




எ.வாடிப்பட்டியிலிருந்து கருப்பு மூப்பன்பட்டிக்குச் செல்லும் வழியில் விளை நிலங்களுக்கு நடுவே கல்வட்டங்கள் காணப்படுகின்றன. இக் கல்வட்டங்களைக் கோயில் என்றே அழைக்கிறார்கள்.

தர்மத்துப்பட்டிக்கும் தாதனூருக்கும் இடையே மலை அடிவாரத்தில் சாலை ஓரத்தில் உள்ள சிதைந்த நிலையில் உள்ள ஒரு கல்வட்டம் அருகிலுள்ள நடுவக்கோட்டை என்ற கிராமத்து மக்களால் முனிசாமியாக வணங்கப்படுகிறது.



கரட்டுப்பட்டிகருகில் வைகை அணைக்குள் சிறிய குத்துக்கல்லுடன் கூடிய கல் வட்டமும் கல்வட்டங்கள் பலவும் உள்ளன.

# 112. பெருங்கற்கால கல்திட்டை ஓவியங்கள்

கோ.பெருமாள், பேளூர்,
வை.கலைச்செல்வன், செல்லியம்பாளையம்,
கா.சீனிவாசன், ஓமலூர்.

சேலம் மாவட்டம் - வீரபாண்டியிலிருந்து மல்லூர் செல்லும் வழியில் 3 கி.மீ தொலைவில் உள்ளது செவந்தாம்பட்டி. இவ்வூருக்கு அருகில் உள்ள 'பாண்டியன் பாறை' என்னும் இடத்தில் பெருங்கற்கால ஈமச்சின்னமான கல்திட்டை ஒன்று பிரம்மாண்டமாய் அமைந்துள்ளது. இதில் பெருங்கற்காலத்தை சேர்ந்த ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. சேலம் மாவட்டத்திலேயே கல்திட்டையில் ஓவியங்கள் காணப்படுவது இதுவே முதன்முறையாகும். ஏழு பெரிய கற்களின் மீது இந்த பிரம்மாண்டமான கல்திட்டை அமைக்கப்பட்டுள்ளது.

இந்த கற்கள் 3 முதல் 4 அடி உயரம் கொண்டவைகளாக இருக்கின்றன. இவற்றில் 5 கற்களில் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. மேற்புற பலகைக்கல் 15 அடி நீளம், 10 அடி அகலம், 2 அடி தடிமனுடன் காணப்படுகிறது. இதன் எடை சுமார் 50 டன் இருக்கலாம். இதன் அடிப்பகுதியிலும் ஓவியங்கள் உள்ளன. ஓவியங்கள் வெள்ளை நிறத்தில் வரையப்பட்டுள்ளன. இரு கைகளிலும் ஆயுதமேந்திய மனிதர்கள் (குச்சி உருவங்களாக) செல்வதைக் காண முடிகிறது. மனிதர்கள் எதிர் எதிர் திசையில் கூட்டமாக அருகருகே உள்ள இரண்டு கற்களில் வரையப்பட்டுள்ளதால் இரு குழுவினருக்கிடையே நடந்த பூசலைக் குறிப்பதாகக் கருதலாம். விலங்குகள் எதுவும் இடம்பெறவில்லை.

இதேபோல சங்ககிரி அருகில் வேலம்மா வலசு என்கிற கிராமத்திலுள்ள கரட்டில் பெருங்கற்கால செஞ்சாந்து ஓவியங்கள் காணப்படுகின்றன. பாறைக்




**சேலம் மாவட்டம் செவந்தாம்பட்டி பெருங்கற்கால ஓவியங்கள்**

குகையின் விதானப்பகுதியில் சிகப்பு நிற ஓவியங்களாக இவை உள்ளன.

இப்பகுதி மக்கள் இக்குகையில் கொங்கண சித்தர் வாழ்ந்ததாகக் கூறி வழிபடுகின்றனர்.



**பெருங்கற்கால செஞ்சாந்து ஓவியங்கள்**



**செஞ்சாந்து ஓவியங்கள்**

# 113. திருச்சிற்றம்பலம் தொல்லியல் எச்சங்கள்

சீ. பரந்தாமன், சென்னை.

திருச்சிற்றம்பலம் கிராமம் சென்னை-பெங்களூரு நெடுஞ்சாலையில் கிருஷ்ணகிரிக்கு வட கிழக்காக சுமார் 10கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. இப்பகுதியில் இடை பழங்கற்காலம் முதல் வரலாற்றுத் தொடக்க காலம் வரை தொடர் வரலாற்று சான்றுகள் கிடைகின்றன.

திருச்சிற்றம்பலத்தில் சிவமலை என அழைக்கப்படும் மலை உள்ளது. இம் மலையின் அடிவாரத்தில் இடைபழங்கற்கால கருவிகளான சுரண்டு கருவிகள், கிளிப்பான்கள் சில்லுகருவிகள் இக்கருவிகள் தயாரிக்கப்பயன்படும் மூலகல்லான டொலராய்டு வகையான கற்கள் இப்பகுதியில் அதிகமாக காணப்படுவதால் தொழிற்கூடமாக இருக்கலாம். புதியகற்கால கருவிகளான கற்கோடாரிகள் முற்றுப்பெற்ற மற்றும் முற்று பெறாத கற்கோடாரிகளும் கிடைகின்றன. எனவே இப்பகுதியில் சிவமலையிலிருந்து வடக்கே 1கி.மீ தொலைவில் பெரியதம்புரான் என்னும் மலை உள்ளது இம்மலையின் சரிவில் மண்மேடு காணப்படுகின்றது. இம்மண்மேட்டில் கருப்பு சிவப்பு பானை ஓடுகள், கருப்பு பானை ஓடுகள், சில்லுகல், இரும்பு கசடுகள் மற்றும் இரும்பு ஊது உலைகளான மண் குழாய்கள் காணப்படுகின்றன.





கற்கருவிகள்



பானை ஓடுகள்



சில்லுகல்

# 114. தேன்கனிக்கோட்டை வட்டாரத் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

**சீ. பரந்தாமன், சென்னை.**

காடுகளாலும் மலைகளாலும் சூழப்பட்ட தேன்கனிக்கோட்டை வட்டம் கிருஷ்ணகிரி மாவட்டத்தில் அமைந்துள்ள ஓர் முக்கிய பகுதியாகும். கருநாடகம் மற்றும் தமிழ் நாடு மாநிலத்தினை இணைக்கும் பகுதியாக இத்தேன்கனிக்கோட்டை வட்டம் அமைந்துள்ளது. தேன்கனிக்கோட்டை வட்டத்தில் மேற்கொள்ளப்பட்ட களமேற்பரப்பாய்வில் புதிய தொல்லியல் சான்றுகள் கண்டறியப்பட்டுள்ளன. இவை கீழ்வரும் அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது.

| எண் | ஊர் | காலம் | தொல்லியல் சான்றுகள் |
|---|---|---|---|
| 1 | அகநெள்ளி | புதிய கற்காலம்<br>இரும்பு காலம் | புதிய கற்கால கற்கோடாரி, கற்பதுக்கை மற்றும் புதிர்நிலை |
| 2 | ஆலத்தி | இரும்பு காலம் | |
| 3 | பரந்தூர் | இரும்பு காலம்,<br>வரலாற்றுக் காலம் | கற்திட்டை<br>கற்திட்டை, நடுகல் மற்றும் கல்வெட்டுகல் தமிழ் |
| 4 | பிலிகல் | இரும்பு காலம் | கல்வெட்டு<br>கற்குவை |
| 5 | பூதேரிக்கொட்டாய் | இரும்பு காலம் | கற்பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| 6 | ஏணிபெண்டா | புதிய கற்காலம், இரும்பு காலம் | புதிய கற்கால கற்கோடாரி<br>கல்திட்டை |
| 7 | இரடுகோட்டை | வரலாற்றுக் காலம் | தமிழ் கல்வெட்டு |
| 8 | எருமத்தனபள்ளி | இரும்பு காலம் | கற்குவை |
| 9 | குல்லட்டி | இரும்பு காலம் | கற்பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| 10 | ஜீமநத்தம் | வரலாற்றுக்காலம் | நடுகல் |
| 11 | கீழ்பள்ளம் | இரும்பு காலம்,<br>வரலாற்றுக் காலம் | கற்பதுக்கை, தமிழ் கல்வெட்டு |

| | | | |
|---|---|---|---|
| 12 | கெண்டிகானப் பள்ளி | இரும்பு காலம் | கற்திட்டை |
| 13 | கோலட்டி | இரும்பு காலம், வரலாற்றுக் காலம் | நடுகல்லுடன் கூடிய கல்வெட்டு |
| 14 | கூத்தாண்டபாறை | இரும்பு காலம் | கற்திட்டை |
| 15 | கோட்டையூர் | இரும்பு காலம் | கல்வட்டம் |
| 16 | கோவள்ளி | இரும்பு காலம் | கல்வட்டம் |
| 17 | குந்துக்கோட்டை | புதியகற்காலம், இரும்பு காலம் வரலாற்றுக் காலம் | புதிய கற்கால கற்கோடாரி, கற்பதுக்கை மற்றும் வாழ்விடம் |
| 18 | மேலூர் | இரும்பு காலம் | கற்பதுக்கையுடன் கூடிய கல்வட்டம் |
| 19 | மிலிதிகி | இரும்பு காலம், வரலாற்றுக் காலம் | நடுகல்லுடன் கூடிய தமிழ் கல்வெட்டு, குழி அமைப்பு கொண்ட பாறை |
| 20 | முலுவனப்பள்ளி | இரும்பு காலம் | கற்திட்டை |
| 21 | சாலிவாரம் | இரும்பு காலம் | கற்திட்டை |
| 22 | சீங்கோட்டை | புதியகற்காலம் | கற்பதுக்கை |
| 23 | தடிக்கல்லு | இரும்பு காலம் | கற்குவை |
| 24 | தக்கட்டி | வரலாற்றுக் காலம் | நடுகல்லுடன் கூடிய கல்வெட்டு |
| 25 | தொலுவபெட்டா | புதியகற்காலம், இரும்பு காலம் | புதிய கற்கால கற்கோடாரி மற்றும் கற்பதுக்கை |
| 26 | உடுபராணி | இரும்பு காலம் | கற்குவை மற்றும் புதிர் நிலை |
| 27 | உலிபெண்டா | இரும்பு காலம் | கற்குவை |
| 28 | உரிகம் | வரலாற்றுக் காலம் | நடுகல்லுடன் கூடிய தெலுங்கு கல்வெட்டு |

# நம்பியாற்றுப் பள்ளத்தாக்குத் தொல்லியல்

**மோ.பிரசன்னா, சென்னை.**

நம்பியாறு, தமிழகத்தின் மேற்குத்தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி திருநெல்வேலி மாவட்டத்தின் தென்பகுதியில் பாயும் 45 கிலோமீட்டர் நீளமுடைய ஓர் சிறு ஆறு. இவ்வாற்றங்கரையில் தொல்லியல் பண்பாட்டு நாகரிங்களின் அடையாளமாக தற்பொழுது இரும்புக்காலம் முதல் வரலாற்றுக்காலம் வரையிலான பண்பாட்டுக்கூறுகள் கண்டறியப்பட்டுள்ளன.

## குமாராப்புதுக்குடியிருப்பு

வள்ளியூர் என்னும் கிராமத்தின் அருகே கோட்டையடி என்ற பகுதியிலிருந்து சித்தூர் செல்லும் பாதையில் 2 கி.மீட்டர் தொலைவில் இவ்வூரானது அமைந்துள்ளது. இவ்வூரின் மேற்குபகுதியில் இரும்புக்கால வாழ்விடப்பகுதியும் அதற்குச்சான்றாக கருப்பு சிவப்பு, சிவப்பு நிற பானையோடுகள் பரந்த அளவில் காணப்படுகின்றன. மேலும் இவ்வூரின் மேற்கு பகுதியில் காணப்படுகின்ற மூன்றுயுகம் கண்ட அம்மன் கோவில் அருகே அமைந்துள்ள அம்மச்சி குளத்தின் அருகே இருப்பகுதியிலும் வரலாற்று இடைக்காலத்தைச் சார்ந்த உறைக்கிணறு தற்பொழுது கண்டறியப் பட்டுள்ளது. மேலும் இவ்வூரின் தெற்குப பகுதியில் உள்ள பண்டாரகுளம் என்றழைக்கப்படும் குளத்தில் பல செம்பு நாணயங்கள் கண்டறியப்பட்டுள்ளன. அவை இப்பகுதியில் கள்ளக்காசு என்றழைக்கப்படுகிறது.



## துலுக்கர்பட்டி

வள்ளியூர் என்னும் கிராமத்தின் அருகே கோட்டையடி என்ற பகுதியிலிருந்து சித்தூர் செல்லும் பாதையில் ஆனைகுளம் என்கிற கிராமத்தின் வடக்கே 2 கி.மீட்டர் தொலைவில் இவ்வூரானது அமைந்துள்ளது. இவ்வூரின் முக்கியத்துவமானது இரும்புக்கால வாழ்விடப்பகுதியின் எச்சங்கள் நம்பியாற்றிங்கரையிலே அமைந்துள்ளது. இவ்வாழ்விடப்பகுதியானது 12 ஹெக்டர் பரப்புளவில் அமைந்துள்ளது அப்பகுதியானது உள்ளூர் மக்களால் விளாங்காடு என அழைக்கப்படுகின்றது. அவற்றில் கருப்பு சிவப்பு, சிவப்பு, கருப்பு பானையோடுகள், முதுமக்கள் தாழி, குறியீடுகளுடன் கூடிய பானையோடுகள், வெள்ளை புள்ளிகளுடன் கூடிய கருப்பு சிவப்பு பானையோடுகள் மிகுந்த அளவில்

பரவிக்காணப்படுகின்றன.

## தளபதிசமுத்திரம் மேலூர்

நான்குனேரியில் இருந்து 12கி.மீட்டர் தொலைவில் திருநெல்வேலி கன்னியாகுமரி நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. இவ்வூரானது தற்பொழுது அதிக அளவில் வீடுகள் நிறைந்து காணப்பட்டாலும் இரும்புக்கால வாழ்விடப்பகுதியின் எச்சங்களான கருப்பு சிவப்பு, சிவப்பு, கருப்பு பானையோடுகள், முதுமக்கள் தாழி, வெள்ளை புள்ளிகளுடன் கூடிய கருப்பு சிவப்பு பானையோடுகள் அதிக அளவில் பரவிக்காணப்படுகின்றன. மேலும் இவ்வூரின் 2 கி.மீட்டர் தொலைவில் வடக்கே பெருவேம்புடையார் சாஸ்தா கோவில், சாஸ்தாபுரம் அருகே பரந்தளவில் காணப்படும் இரும்புக்கால புதைவிடப்பகுதியின் வாழ்விடப்பகுதியாக இத்தளபதிசமுத்திரம் மேலூர் இருந்திருக்கலாம்.

# 116. கிருஷ்ணகிரியில் புதிய பாறை ஓவியங்கள்

**சீ. பரந்தாமன், சென்னை.**
**பெ.வெங்கடேஷ்வரன், கிருஷ்ணகிரி.**

கிருஷ்ணகிரியில் இருந்து தென்கிழக்காக சுமார் 13 கி.மீ தொலைவில் பர்கூர்-ஜெகதேவி சாலையில குண்டலகுண்டாவில் மக்களால் "கல்யாண கவி" என அழைக்கிகப்படும் $14_{x}{}^{8}$ அடி அளவு குகை விதானத்தில் ஓவியங்கள் காணப்படுகின்றன. அவை மனிதர், விலங்கு மற்றும் குறியீடுகளாகும்.

இதில் சிறப்புவாய்ந்த ஓவியங்களாக யானையின் மீது கையில் வாளேந்திய வீரன் மற்றும் குதிரை (?) மீது அமந்துள்ள வீரன் உருவங்களும் மற்றும் இரண்டு வரிசையாக கைகளை கோர்த்து நடனமாடும் இரு உருவங்களும் ஒரு மனிதனின் மிக பெரிய உருவமும் குறிப்பிடத்தக்கவை இவை சிவப்பு வண்ணத்தில் தீட்டப்பட்டுள்ளன. மேலும் ஏணி, அலங்கரிக்கப்பட்ட மலர், செடிகள் போன்றவைகள் வெள்ளை நிறத்தில் தீட்டப்பட்டுள்ளன.

இக்குகையில் பாறை ஓவியங்களை தவிர பழைய கற்கால கருவியான சுரண்டுகருவி மற்றும் புதிய கற்கால பழுப்பு நிறபானை ஓடுகளும் கருப்பு நிற வண்ணம் பூசப்பட்ட பானை ஓடுகளும், கருப்பு சிவப்பு பானை ஓடுகளும் கண்டெடுக்கப்படடுள்ளன.

இக்குகையில் மனிதர்கள் பழையகற்காலம் முதல் வரலாற்று தொடக்ககாலம் வரை வாழ்ந்து வந்திருக்கின்றனர். ஆனால் பாறை ஓவியங்கள் பெருங்கற்காலம் காலத்தில் தீட்டப்பட்டிருக்க வேண்டும். எனவே இப்பாறை ஓவியங்களின் காலமானது கி.மு 3ம் நூற்றாண்டாக இருக்க வேண்டும்.



**பாறை ஓவியங்கள்**

# அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

## 117. பழந்தமிழ்க் கல்வெட்டுகளில் குறியீடுகள்

ப. சண்முகம், சென்னை.

ஒரு கருத்து, கருதுகோள் அல்லது கோட்பாடு போன்ற ஒன்றைச் சுருக்கமாகப் புரிந்துகொள்ளும் வகையிலும் பட வடிவிலும் தெரிவிக்கும் கோட்டுருவத்தைக் குறி அல்லது குறியீடு (symbol) எனலாம். இக்குறியீடு, பொதுவாக, சில அல்லது பல கோடுகளால் ஆன ஒரு வடிவமாக வரையப்பட்டிருக்கலாம். எல்லோராலும் எளிதில் வரையக்கூடிய உருவமாகவும், மிக எளிதாகப் புரிந்து கொள்ளும் விதமாகவும் அவ்வுருவம் அமைக்கப்பட்டிருக்கலாம். அவ்வாறின்றி, சில சமயங்களில், புரிய இயலாத அல்லது அடையாளப்படுத்த இயலாத வெறும் கோடுகளாக அல்லது கிறுக்கல் மற்றும் சிதைந்த வடிவமாகவும் அமைக்கப்பட்டிருக்கலாம். இவ்வகைக் குறிகள் அல்லது கிறுக்கல்கள் மிகத் தொன்மையான காலமுதல் தற்காலம் வரை புழக்கத்தில் இருந்துள்ளன. இப் பரந்த உலகத்தில் காணப்பட்டுள்ள பண்டைய நாகரிகத் தொல்லிடங்கள் எல்லாவற்றிலும் இக்குறிகள் பயன்பாட்டில் இருந்துள்ளன. இவை எலும்புகள், மண்பாண்டங்கள், செங்கற்கள், மரம், மற்றும் செம்பு, இரும்பு, தங்கம் போன்ற உலோகப் பொருள்கள் மீதும் வரையப்பட்டுள்ளதை தொல் எழுத்தியலாளர்கள் பலரும் கண்டுபிடித்துள்ளனர். இப்பொருள்களேயன்றி பிற பயன்பாட்டுப் பொருள்கள் மீதும் குறிகள் வரையப்பட்டுள்ளன.

மனிதர் தோன்றிய காலமுதல் பல்வேறு நிலைகளில் குறியீடுகள் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. தொல்பழங்காலத் தொல்லிடங்கள் பலவற்றிலும் தீட்டப்பட்டுள்ள ஓவியங்கள் மற்றும் வரைவுகளில் இக்குறிகளைக் காணலாம். வரலாற்றுக் காலமுதல் அரசியல், சமுதாய, பொருளாதார, வணிக, இசை, சமயம் போன்ற பல நிலைகளில் இக்குறிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. குறிப்பாக சமயம் தொடர்பான கொள்கைகளை விளக்குவதற்கு பெரும்பாலான மதங்களில் பல குறிகள் சமய அடையாளங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. பண்டைக் காலத்தில் மட்டுமல்லாது தற்காலத்திலும் இக்குறிகள் பல துறைகளிலும் பரிணமித்து, பயன்படுத்தப்பட்டு, ஓரளவு முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளதையும் காணலாம். தற்காலத்தில் வணிகர்கள் இக்குறிகளை அதிகமாகப் பயன்படுத்துவதைச் சிறப்பாகக் குறிக்கலாம். ஒருவருடைய வணிகத்தின் சிறப்புத்தன்மை அல்லது சரக்குகளின் தனித்தன்மையை நிலைநாட்ட அவர்களின் வணிகச் சரக்குகளின் மீது சில பல குறிகள் இடப்பட்டுள்ளதை நாம் சுட்டலாம். இவ்வகைக் குறிகள் 'வணிகக்குறிகள்'

---

* பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவியுள்ள தி.நா. சுப்பிரமணியன் அறக்கட்டளை சொற்பொழிவு வரிசையில் 2.7.2018ல் திருவண்ணாமலையில் நிகழ்ந்த 20வது சொற்பொழிவு.

('trade marks') என்ற நிலையில் வகைப்படுத்தலாம். இதேபோல பொது வாழ்வில், சாலைகளில் காணப்படும் போக்குவரத்து குறிகளையும் குறிக்கலாம். இக்குறிகள், அவற்றுக்கென்று உள்ள சில முக்கியக் கருத்துகளை மக்களுக்கு எளிதாக விளக்கும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளன.

பல வகையான பொருள்களின் மீது குறிகள் இடப்பட்டுள்ளன. இப்பொருள்களை எலும்புகள், மரப்பொருள்கள், மண்பாண்டங்கள், செங்கற்கள், கல், பாறைகள், மற்றும் இன்னபிற பொருள்கள் என்று வகைப்படுத்தலாம். இப்பொருள்களின் மீது கூரான கருவியினால் (குத்தூசி) மேல்புறத்தில் அல்லது வெளிப்புறத்தில் குறிகள் கீறப்பட்டிருக்கும். ஆயினும், கீறல்கள் அல்லது கீறல் குறிகள் என்று வேறு சில குறி வரைவுகளையும் இவற்றில் சேர்க்கலாம். கல்வெட்டுகள் மற்றும் செப்பு அல்லது பிற உலோகப் பட்டயங்களில் காணப்படும் குறிகள் கீறப்படாமல், சிறுஉளி ஒன்றினால் வெட்டப்பட்டவையாகும். காசுகள், மோதிரங்கள் அல்லது இதுபோன்ற உலோகப்பொருள்களில் காணப்படும் குறிகள் சாதாரணமாகக் கீறப்படுவதில்லை என்பதும், இவை யாவும் பிரதியாக உள்ள மூலஅச்சு ஒன்றின் மூலமாக அப்பொருள்கள் மீது அழுத்தப்படுவதால் உருவாகும் குறிகள் ஆகும். முத்திரைகளில் காணப்படும் குறிகள் மூலக்குறிகளின் பிரதிபிம்பமாக வெட்ட அல்லது செதுக்கப்பட்டவையாகும். இருந்தபோதிலும் இவ்வெல்லாவற்றையும் கீறல்கள் அல்லது வரைவுகள் என்றே பொதுவாகக் குறிக்கிறோம்.

இந்தியாவில், தொல்பழங்காலத்திலிருந்தே குறிகள் பலவும் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. தொல்பழங்காலத்தைச் சார்ந்த, பழங்கற்கால, புதுக்கற்கால மக்கள் வாழ்ந்த இயற்கைக் குகைகளில் வரையப்பட்ட ஓவியங்களில் பலவகையான குறிகளைக் காண்கிறோம். ஆயினும் இக்குறிகள் பலவற்றின் பொருளை நம்மால் தெளிவாக அறிய இயலவில்லை. புதுக்கற்காலத்தின் பின்னர் வாழ்ந்த செம்பு காலத்திலும் குறிகள் பலவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். சிந்துச்சமவெளி நாகரிக காலத்தில் ஸ்டியேடைட் என்ற மாக்கல் முத்திரைகளிலும், பிற தொல்பொருள்களிலும் குறிகள் இடப்பட்டுள்ளன. இக்குறிகளை ஆராய்ந்த அறிஞர்கள், மொழி சாராத பட எழுத்து முறை என்று சிலரும், சமஸ்கிருதம், திராவிடம் போன்ற தொல்மொழி எழுத்துகளாக இருக்கலாம் என்று சிலரும் அடையாளப்படுத்துவர். ஆயினும் இக்கருதுகோள்கள் இன்னும் ஆராயப்பட வேண்டுவன.

தென் இந்தியாவிலும் பெருங்கற்காலப் பண்பாட்டுக் காலகட்டத்திற்கு முன்பிருந்தே குறிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. தொல்லியலாளர்களால் பொதுவாக "கீறல்கள்" (graffiti) என்று குறிப்பிடப்படுகின்ற இவ்வரைவுகள் மண்பாண்டங்களின் வெளிப்புறத்தில் காணப்படுகின்றன. மண்பாண்டங்களைச்

சுட்டபின்னர் அவற்றைப் பயன்படுத்திய பயனாளிகளால் இவ்வரைவுகள் கீறப்பட்டன என்றே பொதுவாக அனைவரும் கருதுகின்றனர். சிலசமயங்களில் மண்பாண்டங்களை வனைந்த குயவர்களாலும் இக்குறிகள் இடப்பட்டுள்ளன. இக்கீறல்களில் சில புதுக்கற்காலம், செம்பு கற்கருவி காலம் ஆகிய பண்பாட்டுக் காலகட்டங்களில் கிடைக்கும் கீறல் குறிகளோடு ஒத்துள்ளன என்று சில ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள்ளனர். இக்கீறல் குறிகள் ஒரு குடும்பத்தாருடைய குலக்குறிகள் என்றும் சில ஆய்வாளர்களால் அடையாளம் காட்டப்பட்டுள்ளன. இதுவரை கிடைத்துள்ள இவ்வகைக் கீறல் குறிகளை நோக்கும்போது இவை யாவும் தனித்தனிக் குறிகளாகவே கிடைத்துள்ளன. ஒன்றுக்கு மேற்பட்ட கீறல் குறிகள் மிகவும் அரிதாகவே கிடைத்துள்ளன. இவ்வாறு ஒரே தொகுப்பாக கிடைத்த இடங்களில் அவற்றை அசைச் சொற்களாகச் சில ஆய்வாளர்கள் கருதியுள்ளனர். இக்கீறல்குறிகளோடு தொடர்புபடுத்தத்தக்க எழுத்துவடிவம் அல்லது மொழி வடிவம் ஏதொன்றும் இக்காலகட்டச் சான்றுகளில் கிடைக்கவில்லை.

இவ்வகைக் கீறல்கள் பலவும் அச்சு குத்திய காசுகளிலும் (punch marked coins) காணப்பட்டுள்ளன. இக்காசுகள் வட இந்தியாவில் மௌரியர் காலத்திற்கு முன்பிருந்தே வழக்கில் இருந்துள்ளன. இந்தியத் துணைக்கண்டத்தின் பல பகுதிகளில் இக்காசுகள் புழக்கத்தில் இருந்துள்ளன. பொதுவாக வெள்ளி உலோகத்தால் ஆன இக்காசுகள் சதுரம், செவ்வகம், வட்டம், நீள்வட்டம் ஆகிய உருவங்களில் உள்ளன. இக்காசுகளில் முன்பக்கத்தில் ஐந்து அல்லது ஆறு குறிகளும், பின்புறத்தில் ஒன்றோ அல்லது அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையில் குறிகள் இடப்பட்டுள்ளன. ஒரு அச்சு அல்லது பல அச்சுகளைக் கொண்டு ஒவ்வொரு குறியும் தனித்தனியாகவும், ஒன்றன்பின் ஒன்றாகவும் இடப்பட்டுள்ளன. இக்காசுகளில் மொழி சார்ந்த எழுத்துகள் ஏதும் இல்லை. எனவே வெளியிட்ட அரசர்கள் அல்லது வணிகர்கள் ஆகியோரைப் பற்றிய தகவல்கள் ஏதொன்றையும் இக்காசுகள் மூலம் அறிய இயலவில்லை. இருப்பினும், இக்குறிகளில் சிலவேனும் அரசகுலம், வணிகர்கள் மற்றும் பிற பொதுவகையினைச் சார்ந்தவைகளாக அடையாளப்படுத்த இயலும் என்று சில ஆய்வாளர்கள் குறிப்பர். இக்குறிகளில் வணிகர்களின் பயன்பாட்டுப் பொருள்களான, தராசு, போன்றவற்றோடு, மலை, சூரியன், விலங்கு, செடி, கொடி, மரம், ஆள் போன்ற வரைவுகளும் கோட்டுருவில் இடப்பட்டுள்ளன. இவைகளின் உண்மைப்பொருள் யாதென்பது இதுவரை தெளிவாக்கப்படவில்லை. இருந்தபோதிலும் இக்குறிகளில் வேலியிட்ட மரம், சக்கரம் போன்ற கோட்டுருவங்கள் புத்த சமயம் தொடர்பானவை என்று சில ஆய்வாளர்கள் குறிப்பர்.

பண்டைய காலங்களில், கீறல்குறி வடிவங்கள் மிகவும் கவனமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவை, படவடிவில் உள்ளன என்றாலும், இவற்றின்

உட்பொருளை அல்லது உண்மைப்பொருளை தற்காலத்தில் புரிந்துகொள்ள மிகக் கடினமாக உள்ளபோதிலும், சில முக்கிய கருத்துகளை உணர்த்தும் விதமாக வரையப் பட்டுள்ளன என்பதில் ஐயமில்லை. இவ்வகையில் சில கருதுகோள்களை அறிந்துகொள்வது மிக முக்கியமாகும். ஒரே உருவ அமைப்புடன் உள்ள குறிகள் பல பகுதிகளிலும், பல காலகட்டங்களிலும் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். அவ்வாறு பயன்படுத்தப்பட்ட அக்குறி, முன்பு பயன்படுத்தியவர்களிடமிருந்து பெற்றதாக அல்லது வேறோறிடத்திலிருந்து வந்ததாகக் கருதலாம். இவ்வகையில் மக்கள் பெயர்ச்சியாலோ, மக்கள் அல்லது வணிகத் தொடர்புகளாலோ இக்குறிகள் வேறிடங்களுக்கு சென்றன எனக் கருத இடமுண்டு. இவ்வாறின்றி இக்குறிகள் இருவேறு இடங்களில் தனித்தே தோன்றியமைக்கும் வாய்ப்புள்ளதாகக் கருதலாம். அதேபோல ஒரே வகையான குறியீட்டு வரைவுக்கு பல பண்பாட்டு இடங்களிலும் ஒரே பொருள் உள்ளது என்று கருதவேண்டியதில்லை; மாறாக வெவ்வேறு பொருள்களை உணர்த்துவதாகவும் கருதலாம். அதேபோல ஒரே குறியீட்டு வரைவுக்கு ஒரே பண்பாட்டு இடத்திலும்கூட பல பொருள்கள் இருப்பதற்கும் வாய்ப்புண்டு என்பதையும் நாம் கருத்தில் கொள்ளவேண்டும்.

இவ்வாறு பல பொருள்களில் இதுவரை காணப்பட்ட கீறல் குறிகளைச் சில ஆய்வாளர்கள் தீவிர ஆய்வுக்கு உட்படுத்தியுள்ளனர். இக்குறிகளின் தோற்றம், வளர்ச்சி, பரவல், இடப்பெயர்வு, போன்றவை உலகமுழுதும் உள்ள ஆய்வாளர்களால் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இக்குறிகளின் முக்கிய தன்மைகள், அவைகள் காட்டும் பொருள்கள், சார்ந்த மொழி அல்லது மொழிக் குடும்பங்கள், மற்றும் வகைப்பாடுகள் ஆகியன பற்றியும் பெருமளவில் ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. பண்டைக்காலத்தில் இக்குறிகளைப் பயன்படுத்திய பல சமூகத்தார் பற்றிய ஆய்வுகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இந்தியாவைப் பொருத்தமட்டில், தொன்மையான கீறல் குறிகள் பலவற்றிலிருந்து பிராமி எழுத்து வடிவங்கள் தோன்றின என்று சில ஆய்வாளர்களால் தவறாக கருதப்பட்டுள்ளது. இவற்றில் குறிப்பாக இரண்டு ஆய்வாளர்களின் கருதுகோள்களை நாம் காணலாம். முதலாவதாக, ஏ. வி. நரசிம்ம மூர்த்தி, தொல்லிட அகழாய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட பானைச் சில்லுகளில் காணப்படும் குறியீட்டு வரிவங்களை தொகுப்பாய்வுக்குப் பயன்படுத்திய பின்னர், அவைகளில் பலவும் இந்தியாவின் தொல் எழுத்து வடிவமான பிராமி என்ற எழுத்துவகையோடு தொடர்புபடுத்தலாம் என்பார். இவ்வகையில் பிராமி எழுத்துவடிவங்களின் மூலவடிவங்களாக இக்குறியீட்டு வரைவுகளைக் காணுகிறார். இக்கருதுகோள் தவறான அடிப்படையில் புனையப்பட்டது. இவரால் சுட்டப்பட்ட குறியீட்டு வரைவுகள் யாவும் பிராமி எழுத்து வடிவங்களுக்கு முற்பட்டவை அல்ல. மேலும் இவரால் அடையாளம் காணப்பட்ட குறியீட்டு வரைவுகளில் பலவும் பிராமி

எழுத்து வடிவங்களும் சமகாலத்தவை. அதாவது ஒரே காலகட்டத்தில் இரண்டு விதமான வடிவங்கள் ஒரே நோக்கத்திற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது போலத்தெரிகின்றது. மேலும் இக்குறியீட்டு வரைவுகள் யாவும் தனித்தனியாகவே கீறப்பட்டுள்ளன என்பதையும் நோக்கவேண்டும். எனினும் தனிக் குறியீட்டு வரைவுகள் மற்றும் முழுமையான எழுத்து வடிவங்கள் ஆகிய இருவகைப் பயன்பாட்டின் நெருங்கிய தொடர்பின் தன்மையைப் புரிந்துகொள்ள இயலவில்லை. இரண்டாவதாக கிப்ட் சிரோமணியின் கருதுகோளைக் காணலாம். இவர், தமிழ் நாட்டு குகைக் கல்வெட்டுகளில் காணப்படும் இரண்டு குறியீட்டு வரைவுகளை மூல வடிவங்களாகக் கொண்டு இவ்வடிவங்களில் இருந்து தமிழ் பிராமி எழுத்துவடிவங்கள் தோன்றியிருக்கலாம் எனக் கருத்தறிவிப்பார். இவரது வாதம் ஒரு கற்பனையான வாதம் ஆகும். ஏனெனில் இவரால் குறிப்பிடப்பெறும் குறியீட்டு வரைவுகள் ஆனைமலை, கொங்கர் புளியங்குளம் ஆகிய இடங்களில் காணப்பெறும் தமிழ் பிராமி கல்வெட்டுகளில் மட்டுமே காணப்படுகின்றன. சமகாலத்தில் இரண்டு வகையான வரைவுகள் ஒரே நோக்கத்திற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதும் ஒரு வடிவத்திலிருந்து மற்றொரு வடிவம் தோன்றிய நிலைகள் காட்டப்படவில்லை என்பதாலும் இவரது கருதுகோளை ஏற்க இயலாது. மேலும் இவர்களால் காட்டப்பட்ட கீறல் குறிகள் யாவும் ஒரு தொகையாக அல்லது ஒரு தொடர்ச்சியாகக் காணப்படாமல் ஒவ்வொன்றும் தனித்தனியே காணப்படுகின்றன என்பதால் இக்கருதுகோளை ஏற்பதற்கு முன்னர் தீவிர ஆய்வுக்கு உட்படுத்தப்படவேண்டும்.

தமிழ்நாட்டுத் தொல்லிடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட குறிகள் பலவற்றையும் பி.பி. லால் (1962), ஐராவதம் மகாதேவன் (1977), எஸ். குருமூர்த்தி (1999), இராசு. பவுன்துரை (2004), கே. இராஜன் (2001) போன்ற பல ஆய்வாளர்கள் முறையாக ஆராய்ந்துள்ளனர். இவர்களில் பி.பி. லால், செம்பு கற்காலப் பானைக் குறியீடுகளுக்கும் இரும்புகாலப் பானைக்கீறல்களுக்கும் உள்ள தொடர்புகளை கண்டறிந்துள்ளார். ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட பெருங்கற்காலக் கீறல்வரைவுகளில் பெரும்பாலானவை (சுமார் 85 விழுக்காடு) முற்காலத்தை, அதாவது அரப்பா மற்றும் செம்பு கற்காலத்தைச் சார்ந்தவை என்று கண்டுள்ளார். ஐராவதம் மகாதேவன் சிந்துவெளிக் குறியீடுகளையும் எழுத்துகளையும் மிகவிரிவாக ஆய்ந்துள்ளபோதிலும், தமிழ் பிராமி கல்வெட்டுகளில் காணப்படும் குறிகளைப் பற்றியும் கருத்து அறிவித்துள்ளார். பானைச்சில்லுகளில் வரையப்பட்ட கீறல் குறிகளை எஸ். குருமூர்த்தி மிக விரிவாக ஆய்ந்துள்ளார். முக்கியமாக தென் இந்தியாவின் பெருங்கற்காலக் கல்லறைகளிலும், தொல்வாழ்விடங்களிலும் கிடைத்த கீறல் வரைவுகளோடு பாறைத் தொல் ஓவியங்களில் காணப்படும் வரைவுகளையும் தொகுத்து சிந்துவெளி நாகரிகப் பரவல் உள்ள பகுதியில் கிடைத்த குறிகளோடு ஒப்பிட்டு ஆய்வு செய்துள்ளார். பலபகுதிகளில் உள்ள தொல்பழங்கால ஓவியங்கள்,

கல்வெட்டுகள், மட்பாண்டங்கள், நாணயங்கள் போன்ற தொல்பொருள்களில் உள்ள குறிகளைத் தொகுத்து அவற்றை இராசு. பவுன்துரை வகைப்படுத்தியுள்ளார்.

இக்குறியீட்டு வடிவங்களைக் காலமுறைப்படியும் இடமுறைப்படியும் வகைப்படுத்தி உள்ளபோதும் எல்லாக் குறிகளையும் பொதுவாக அளவீடு செய்யும் முறையையே மேற்கண்ட ஆய்வுகளில் காணுகிறோம். முற்காலத்தில் காணப்படும் குறியீடுகளை பிற்காலக் குறியீடுகளோடு சேர்த்து ஒன்றாகப் பொருள் கொள்ளும் கருத்தோட்டத்தையும் காணலாம். அதேபோல் ஒரு பகுதியைச்சேர்ந்த குறியீடுகள், வெகுதொலைவில் உள்ள பகுதிகளில் காணப்படும் குறியீடுகளோடு சேர்த்து கணிக்கப்பட்டுள்ளன. இதன்மூலம், காலம் மற்றும் இடம் ஆகியவற்றால் ஏற்படும் வேறுபாடுகளை உணராமல் கருதுகோள்களை அமைத்துள்ளது தென்படும். மேலும், இவ்வகையில் சரியான சான்றுகள் இல்லாதபோது இவ்வாறான கருதுகோளைத் தவறானதாக அல்லது ஏற்க இயலாததாகக் கருதவேண்டும். இவ்வாறான பொது வகைப்பாடுகளில் எழுத்து, மொழி போன்ற அடையாளங்களும் விவாதிக்கப்பட்டுள்ளன. ஒன்றுக்கு மேற்பட்டு தொடர்ச்சியாக உள்ள குறிகளை எழுத்து அல்லது அசை வடிவங்களாகக் கருதலாம் என்ற போக்கு நிலவுவது முன்னரே குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கருதுகோளுக்கு தொடர்ச்சியாக உள்ள குறியீட்டு வரைவுகள் என்ற ஆதாரத்தைத் தவிற வேறு வகையிலான உறுதியான ஆதாரம் ஏதுமில்லை என்பதால் இக்கருதுகோள் பொதுவான ஊகத்தின் அடைப்படையிலேயே உருவாக்கப்பட்டது என்பது புலனாகும்.

இவ்வகையில், குறியீடுகளை இனம் காணவும் அவற்றின் பொருளையும் சிறப்புகளையும் அறிவதற்கு, வேறு வகையான கருதுகோள்களும் வகைப்பாடுகளும் தேவையாகிறது. இந்நிலையில், ஒரே காலகட்டத்தைச் சேர்ந்ததும், ஓரளவுக்கு தொடர்புகளை ஏற்பதற்கு உரியவகையில் அருகே அமைந்துள்ள பகுதிகளில் காணப்படும் குறியீடுகளை முதலில் ஆராய்தல் வேண்டும். அதேபோல, இக்குறியீடுகளின் பயன்பாடு பற்றியும் நம்மால் ஓரளவு ஊகிக்க முடிகின்ற சூழல் உள்ள பொருள்கள் அல்லது தன்மையாக உள்ள குறியீடுகளை அடையாளப்படுத்தி அவைகளை ஆராய்தல் வேண்டும். இவ்வகைச் சூழல் உள்ள பொருள்களின் பயன்பாட்டை ஒட்டி அக்குறிகளின் பொருளை அறிவது இயல்பாகும். இவைகளை நம்மால் அறியக்கூடிய ஏதேனும் மொழியாக அடையாளப்படுத்துவது என்பது இயலாது. இவற்றைக் குறிகள் அல்லது குறியீடுகள் என்ற வகையிலேயே காணவேண்டும்.

தமிழ் நாட்டின் தொன்மையான கல்வெட்டுகள், தமிழ்ப்பிராமி வரிவடிவத்தில் காணப்படுகின்றன. இவ்வரிவடிவம் வட இந்தியாவில் அசோகர் காலத்தில் காணப்படும் பிராமி வடிவத்திலிருந்து மாறுபட்டுள்ளபோதிலும்

அதேகாலகட்டத்தில் தமிழ் நாட்டுப் பகுதிகளில் பயன்பாட்டில் இருந்துள்ளது. தழிழ்நாட்டுப் பகுதிகளில் காணப்படும் பாறைக் கல்வெட்டுகளிலும், பானைச்சில்லுகளில் காணப்படும் கீறல்களிலும், நாணயங்கள் மற்றும் முத்திரைகளில் காணப்படும் புடைப்பு எழுத்துகளிலும் பழந்தமிழ் வரிவடிவமான தமிழ்ப்பிராமி எழுத்துமுறையும் தமிழ் மொழியுமே பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளில் பலவற்றில் இடைஇடையே அல்லது இறுதியில் சில குறிகள் வெட்டப்பட்டுள்ளன. இக்குறிகள் தமிழ்ப்பிராமி எழுத்துவடிவத்தையோ அல்லது நாம் அறிந்த ஏதாவது மொழியின் எழுத்துவடிவத்திலோ உள்ளது என்று உறுதியாகக் கருத இயலாது. சொல்லின் இறுதியில் இக்குறிகள் காணப்படுவதால் இவ்வாறு கருதலாம்.

மதுரை நகருக்கு அருகில் உள்ள விக்கிரமங்கலம், அழகர்மலை, கொங்கர் புளியங்குளம் மற்றும் சில இடங்களில் உள்ள தமிழ்ப் பிராமி கல்வெட்டுகளின் முடிவில் அல்லது இடையில் சிலகுறிகள் வெட்டப்பட்டுள்ளன. இதேபோல் அக்கால மண்கலங்கள், நாணயங்கள் பலவிலும் சொற்களின் இறுதியில் சில குறிகள் உள்ளன. இதே காலத்தைச் சார்ந்தனவாகக் கருதப்படும் முத்திரைகள் சிலவற்றிலும் குறிகள் காணப்பட்டுள்ளன. மோதிரங்கள் சிலவற்றில் காணப்படும் தமிழ்ப்பிராமி சொற்களின் முடிவிலும் இக்குறிகள் உள்ளன. மேலே குறிப்பிடப்பட்ட தொல்பொருள்கள் யாவும் ஏறக்குறைய சமகாலத்தைச் சார்ந்தவையாகக் கருதி, கி.மு. முதல் நூற்றாண்டு கால வரையரைக்குள் அடக்கலாம். மேலே குறிப்பிடப்பட்ட தொல்பொருள்களில் காணப்படும் தமிழ்ப்பிராமி கல்வெட்டுகளின் இடையில்




**தமிழ் பிராமி கல்வெட்டுகளில் காணப்படும் குறியீட்டு வரைவுகள்**

அல்லது இறுதியில் காணப்படும் குறிவரைவுகள் மட்டுமே தற்போதைய ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

குறிகள் வெட்டப்பட்ட கல்வெட்டுகளில், அழகர்மலையில் (படங்கள் 18–19) காணப்பட்ட தமிழ்ப் பிராமி கல்வெட்டுகள் சிலவற்றின் நடுவில் அல்லது இறுதியில் ஒரு குறி காணப்படுகிறது. இக்குறியீட்டில், நடுவே ஒரு வட்டமும் அதன் மேல், கீழ்ப்பக்கங்கள் ஒவ்வொன்றிலும் வளைந்த கொக்கியை முனையில் கொண்ட வடிவங்கள் வெட்டப்பட்டுள்ளன (படம் 1). இதே வடிவத்தின் சற்றே மாறுபட்ட இரண்டு வடிவங்களும் இங்குள்ள கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. இவ்விடத்தில் உள்ள மற்றொரு கல்வெட்டின் முடிவில் உள்ள குறியீட்டில் காணப்பட்ட மாறுபட்ட வடிவத்தில், மூன்று கிடைக்கோடுகள் வட்டத்தின் ஒரு பக்கத்தில் வரையப்பட்டுள்ளன (படம் 3). இதன் மற்றொரு வடிவத்தில், வட்டத்தின் இருபக்கத்திலும் கிடைக்கோடுகள் வெட்டப்பட்டுள்ளன (படம் 4). விக்கிரமங்கலம் கல்வெட்டு ஒன்றில், கீழ், மேல் கோடுகள் வட்டத்தின் நடுவே சேர்க்கப்பட்டு ஒரே நீண்டகோடாகக் காட்சியளிக்கிறது (படம் 2). அழகர் மலையில் உள்ள கல்வெட்டுகள் யாவும் தொடர்ச்சியாக ஒரே வரியில் வெட்டப்பட்டுள்ளன. ஏறக்குறைய ஒவ்வொரு சொல்லும் ஒரு பெயரைக் கொண்டுள்ளது. இப்பெயர்களைப் பிரித்துக்காட்டவே ஒவ்வொரு சொல்லின் அல்லது பெயரின் முடிவில் ஒரு குறி (சற்றே மாறுபட்டு உள்ளபோதிலும்) வெட்டப்பட்டுள்ளது. எனவே இக்கல்வெட்டை ஒரே கல்வெட்டாகக் கருதி பெயர்களுக்கு இடையில் காணப்படும் குறிகளை நிறுத்தக்குறிகள் (punctuation marks) என்ற வகையில் நோக்கலாம். இவ்வகைகயில் அவை காற்புள்ளி (comma) என்ற வகையைச் சார்ந்ததாகக் குறிக்கலாம்.

கொங்கர் புளியங்குளத்தில் (படம் 20) உள்ள இரண்டு கல்வெட்டுகளின் இறுதியில், வெவ்வேறான இரண்டு குறிகள் தொடர்ச்சியாக வெட்டப்பட்டுள்ளன. இவ்விரண்டு குறிகளில் உள்ள முதலாவது குறி அழகர்மலையில் உள்ள ஒரு குறியீட்டைப் (படம் 1) போலவே உள்ளது. மற்றொரு கல்வெட்டில் உள்ள முதலாவது குறி சிறிய மாறுதலோடு அதாவது, கீழ், மேல் கோடுகள் இணைக்கப்பட்டு ஒரே கோடாகக் காட்சியளிக்கிறது (படம் 2). இரண்டாவதாக உள்ள குறி, நான்கு சதுரங்களை ஒன்றாகக் கொண்டுள்ளது அல்லது ஒரு சதுரம் நேர் மற்றும் கிடைக் கோடுகளால் நான்கு சதுரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது (படம் 5). மேலே காட்டப்பட்ட இவ்விரண்டு குறிகளும், ஒரு சொல் அல்லது வார்த்தையின் முடிவைக் குறிப்பதற்கு இடப்பட்ட குறி போலத் தோன்றுகிறது. இவ்வெண்ணத்தில் பார்த்தால், இக்குறிகள் பழங்காலத்தில் பயன்பாட்டில் இருந்த நிறுத்தக்குறிகளாக இருக்கலாமோ என்று தோன்றுகிறது. அழகர்மலைக் கல்வெட்டைப் பொறுத்தமட்டில், சொற்களுக்கு இடையில் வெட்டப்பட்ட தனிக்குறிகள் யாவும் சொற்களைப் பிரித்துக்காட்ட இடப்பட்ட குறிகளாப் புலப்படுகின்றன. ஆயினும், கொங்கர் புளியங்குளத்து

கல்வெட்டின் இறுதியில் வெட்டப்பட்ட குறிகள் ஒரு வாக்கியத்தின் முடிவைக் காட்ட இடப்பட்டவை போல உள்ளன. ஆயினும் இக்குறிகளை ஆய்ந்த ஐராவதம் மகாதேவன், நிறுத்தக்குறிகள், தமிழ்ப் பிராமி கல்வெட்டுகளில் பயன் படுத்தப்படவில்லை என்றும், திருப்பரங்குன்றம் கல்வெட்டில் சொற்களைப் பிரித்துக்காட்ட கோடு இடப்பட்டுள்ளதைக் குறிப்பிடுவார்.

மேலே குறிப்பிடப்பட்ட குறிகள் யாவும், ஈரோடு மாவட்டம், கொடுமணலில் (படம் 21) கண்டெடுக்கப்பட்ட மண்பாண்டச் சில் ஒன்றில் ஒரே தொகுப்பாகக் காணப்பட்டுள்ளன. இச்சில்லில் மூன்று குறிகள் கீறப்பட்டுள்ளன. ஆயினும், இச்சில்லின் இடது பக்கம் உடைபட்டுள்ளதை நோக்கினால் உடைபட்ட பகுதியில் தமிழ் பிராமி எழுத்துவடிவங்கள் இருப்பதற்கான வாய்ப்புகள் உள்ளதாக யூகிக்கலாம். இச்சில்லின் வலதுபக்கம் உடைபட்டுள்ளதால் கடைசிக் குறியின்



குறியீட்டு வரைவுகள் உள்ள தமிழ் பிராமி கல்வெட்டுகளும் தொல்பொருள்களும்

18-19: அழகர்மலை, 20: கொங்கர் புளியங்குளம், 21: கொடுமணல், 22: திருப்பரங்குன்றம், 23: எடக்கல், 24: பெரினிக்கெ, 25: கொடுமணல், 26: கொடுமணல் (எண்:21), 27: கொடுமணல் (எண்: 168), 28: மருங்கூர், 29. வெள்ளி மோதிரம், கரூர், 30: ஆனைக்கோட்டை முத்திரை (பிரதி)

வலதுபக்கம் காணப்படவில்லை. மற்ற இரண்டு குறிகளில், முதலில் உள்ள குறி, முன்பு சொல்லிய குறியைப்போன்று உள்ளது. அதாவது நடுவில் உள்ள வட்டத்தின் கீழ், மேல் பகுதிகளில் வளைந்த கொக்கியோடுள்ள வடிவம் (படம் 1) காணப்படுகிறது. இக்குறி, கொங்கர் புளியங்குளம் மற்றும் அழகர்மலையில் உள்ள தமிழ்ப் பிராமி கல்வெட்டுகளில் காணப்படும் குறியோடு ஒத்துள்ளது. இரண்டாவது குறி, வட்டம் போன்ற ஒரு வடிவத்தைத் தலையில் சுமந்துள்ள நீண்ட செங்குத்துக்கோட்டு உருவத்தைக் கொண்டுள்ளது (படம் 6). முன்பே சொல்லியவண்ணம், மூன்றாவது குறியின் வலதுபக்கம் சிதைவுற்றுள்ளது. இருந்தபோதிலும், கிடைத்துள்ள வடிவத்தைக் கொண்டு, நான்கு சதுரங்களை ஒருங்கே உடைய பெருஞ்சதுரம் என்று அவ்வடிவத்தை மீட்டுருவாக்கம் செய்யலாம் (படம் 5). இம்மூன்று வடிவங்களும் ஒருங்கே தொடர்ச்சியாகக் காணப்படுவதால், இவை ஒரு சொல்லாக இருக்க வாய்ப்புள்ளது என்று கருதப்பட்டாலும், மொழியியல் அல்லது எழுத்தியல் அடிப்படையில் ஒலி ஏறிய குறிகளாக அடையாளம் காணப்படுவதற்கான சான்றுகள் தற்பொழுது கிடைக்கவில்லை. மேலும் இப்பானையோட்டுச் சில்லின் உடைபட்ட முன்பகுதி கிடைத்தால் நம்முடைய கருதுகோள்களில் மாற்றம் செய்ய வேண்டியிருக்கும்.

இக்குறிகளில் நீண்ட கோடு உள்ள ஒரு குறியீட்டு வரைவு (படம் 7) சில கல்வெட்டுகளிலும் மண்பாண்டங்களிலும் காணப்படுகிறது. திருப்பரங்குன்றம் கல்வெட்டின் (படம் 22) நடுவே நீண்ட கோடு உள்ள வரைவைக் காணலாம். மேலும் இவ்வடிவம். எடக்கல் கல்வெட்டில் (படம் 23), கடும்மி என்ற சொல்லுக்கும் புத சேர என்ற சொல்லுக்கும் இடையில் இடப்பட்டுள்ளது. இதேபோன்ற நீண்ட கோடு, செங்கடல் பகுதியின் பழம் துறைமுகமான பெரனிகெயில் (படம் 24) கண்டெடுக்கப்பட்ட மண்பாண்டத்தில் கீறப்பட்ட ஒருபெயரின் இறுதியில் இடப்பட்டுள்ளது. இவ்வெல்லா இடங்களிலும் இக்குறிக்கென சிறப்பான பொருள் உள்ளதெனத் தெரியவில்லை. இவ்வாறு இடப்பட்ட நீண்ட கோடுகள் வணிகர்களின் குறியீட்டு வடிவங்கள் எனக் கருத இயலாது. திருப்பரங்குன்றம் கல்வெட்டில் உள்ள குறியீட்டு வரைவை ஆராய்ந்த ஐராவதம் மகாதேவன் சொற்களைப் பிரித்துக்காட்ட இக்கோடு இடப்பட்டிருக்கலாம் என்று கருதுகிறார். எனவே இக்குறியீட்டு வரைவுகளை பழங்கால நிறுத்தக்குறிகளாகக் கருதுதலாம்.

கேரளத்தின் எடக்கல் குகையில் உள்ள தமிழ்ப்பிராமி கல்வெட்டு ஒன்றின் இறுதியில் உள்ள குறியினை தற்போது ஆராயலாம். இக்கல்வெட்டை கடும்மி புத சேர என்று ஒரே சொல்லாக வாசித்துள்ளனர். ஆயினும், கடும்மி என்ற சொல்லை அடுத்து நீண்ட கோடு இடப்பட்டுள்ளது. புதசேர என்ற சொல்லின் முடிவில் திரிசூலக் குறி (படம் 8) காணப்படுகிறது. கடும்மி என்பதை தனிஆள் பெயராகவும் புதசேர என்ற சொல்லையும் அவ்வாறே தனி ஆள் பெயராகக் கருதலாம். பொதுவாக சேர

என்ற சொல் பண்டைய சங்க கால சேர மன்னர்களின் குலப்பெயராகவும், பட்டப்பெயராகவும் கருதப்பட்டுள்ளது. எனவே இங்கே காணப்படும் திரிசூலக் குறி, சேர மன்னர்களின் குலக்குறியாகக் கருதப்பட வாய்ப்புள்ளது. இருந்தபோதிலும், சேர மன்னர்களின் குலக்குறியாக திரிசூலத்தை இதுவரை எந்தச் சான்றும் குறிக்கவில்லை என்பதால் அரசகுலச் சின்னமாக இக்குறியை ஏற்க இயலாது. இருப்பினும் சொல்லின் இறுதியைக் குறிக்கும் வகையில் நிறுத்தக்குறி என்ற வகையிலும் இக்குறி இடப்பட்டிருக்கலாம். ஆயினும், ஆனைக்கோட்டையில் கிடைத்த முத்திரையோடு ஒப்பிடுகையில், இக்குறியும் வணிகரின் குலக்குறியாக இருப்பதற்கு வாய்ப்புள்ளது.

இக்குறியோடு ஒத்துப்போகின்ற வகையில் உள்ள மற்றொரு குறி பண்டைய துறைமுகமான பெரனிகெ என்றவிடத்தில் நடைபெற்ற அகழாய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட மண்பாண்டச் சில்லில் உள்ளது. இச்சில்லில் காணப்படும் தமிழ்ப்பிராமி எழுத்து வடிவத்தை கொறபுமான் என வாசித்துள்ளனர். இப்பெயரை அடுத்து உள்ள இரண்டு கீறல்களில் முதலாவதாக உள்ள வரைவில் ஒரு தண்டின் மேற்பகுதியில் இரண்டு கிளைகள் உள்ள வடிவம் உள்ளது. இவ்வடிவத்தின் கீழ்ப்பகுதியில் ஒரு கிடைக்கோடும் இடப்பட்டுள்ளது (படம் 9). முழுமையான திரிசூல வடிவத்தை இக்குறியீட்டு வரைவு பெற்றிருக்கவில்லை என்றாலும் அதோடு ஒப்பிடத்தக்க வடிவம் என்று கருதலாம். இக்குறியீட்டு வரைவை அடுத்து நீண்ட கோடு ஒன்றும் இடப்பட்டுள்ளது. இவ்விரண்டு குறிகளும் சொல்லின் இறுதியில் உள்ளதால், இவை நிறுத்தக்குறிகளாகக் கருதப்பட வாய்ப்புள்ளது. இத்திரிசூலக் குறியை, ஆனைக்கோட்டை முத்திரை, எடக்கல் பொறிப்புகள் ஆகியவற்றோடு ஒப்பிடலாம். பெரனிகெவில் காணப்படும் பொறிப்புகளில் உள்ள பெயர்களை அரச குலத்தோடு அல்லது மன்னர்களின் பெயர்களோடு தொடர்புபடுத்த இயலாது. ஆயினும் இப்பெயர்களை வணிகர்களின் பெயர்களாகக் கருதுவதற்கு வாய்ப்புள்ளது. எனவே இக்குறிகளையும் வணிகர்களின் குலக்குறிகளாகக் கொள்ளலாம்.

மண்கலப் பொறிப்புகளில் மேலும் சில குறிகளைக் காணலாம். கொடுமணலில் காணப்பட்ட பானைச் சில் (படம் 25) ஒன்றில் ஏழு எழுத்துகள் உள்ள தமிழ்ப்பிராமி பொறிப்பின் முடிவில் இடப்பட்டுள்ள குறியீடு முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டுவதாகும். தமிழ்ப்பிராமி எழுத்துக்களை பெரியன்சஃந்தன் என்று வாசிக்கலாம். இறுதியில் உள்ள குறியீடு இரட்டைக் காளை பூட்டிய வண்டியின் வரைபடமாகும் (படம் 10). வண்டியில் சரக்குகளை அடுக்கும் பகுதி பல பலகைகள் கொண்டது எனக்காட்டுவதற்காக பல கோடுகள் இடப்பட்டுள்ளன. இப்பகுதி முன்னுள்ள நுகத்தடியுடன் இணைக்கப்பட்டுள்ளது. நுகத்தடியின் இரு பக்கமும் இரண்டு கோடுகள் இடப்பட்டுள்ளன. இவ்விரண்டு கோடுகளும் எருதுகள் பூட்டப்பட்டுள்ளன என்பதைக் குறிக்க இடப்பட்டுள்ளன. இவ்வண்டியின்

வரைபடத்தில் சக்கரங்களைக் குறித்த வரைவுகள் இல்லை என்பதைக் கவனிக்கவேண்டும். இருந்தபோதிலும் இவ்வரைவு இரட்டைக் காளைகள் பூட்டிய வண்டியின் வரைபடம் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. வண்டியின் வரைபடம் மட்டுமே உள்ள பிற வரைவுகள் சிலபல வேறுபாடுகளுடன் இதே காலகட்டத்தைச் சார்ந்த பல மண்பாண்டங்களில் காணப்பட்டுள்ளன. அவ்விடங்களில் இக்குறியை செங்குத்து வரைவாகக் கருதியுள்ளனர். அவ்விடங்களில் இவ்வரைவில் பக்க வரைவுகள் மறைக்கப்பட்டோ உடைபட்டோ உள்ள நிலையில் ஏணி என்று அடையாளப்படுத்தியுள்ளனர். செங்குத்து வரைவாக உள்ள பிற இடங்களில் ஆட்கள் தூக்கிச் செல்லும் நீண்ட தண்டின் இருமுனைகளில் சுமையுள்ளதாகக் கருதி ஆள்சுமை என்றும் அடையாளப்படுத்தியுள்ளனர். ஆயினும், ஏணி, சுமை ஆகிய இவ்விரண்டு அடையாளங்களும் இவ்விடத்தில் காட்டப்பட்டுள்ள வரைவுக்குப் பொருந்தாது. மேலும் இக்குறியீட்டை நிறுத்தக்குறியாக அடையாளப்படுத்த வாய்ப்பில்லை என்பதனால் வணிகர் குறிப்பாக, நெடுந்தொலைவு செல்லும் வணிகர் அல்லது சரக்கு போக்குவரத்தில் ஈடுபட்ட முக்கிய வணிகர் ஒருவரின் குறியீடாகக் கருதலாம். இவ்விளக்கம் பிற இடங்களில் காணப்படும் இதே போன்ற குறியீட்டு வரைவுக்கும் ஏற்றதாகக் கருதலாம்.

கொடுமணலில் கண்டெடுக்கப்பட்ட மற்றொரு மண்பாண்டச் சில் (எண் 21, படம் 26) ஒன்றில் உள்ள குறியீட்டை நோக்கலாம். இப்பாண்டத்தில், தமிழ்ப்பிராமி பொறிப்பில், எழுத்துகள் ஒன்றன் மீதொன்றாகக் கலந்து கீறப்பட்டுள்ளது என்றபோதிலும், தெளிவாக, 'கோன்' என்று படிக்கலாம். இச்சில்லின் இடது பக்கம் உடைபட்டுள்ளதால் முன்பகுதிப் பெயர் மறைந்து போயுள்ளது. கோன் என்ற சொல் பொதுவாக இடையர்களின் குலப்பெயராகக் கருதப்படுவதால், இச்சொல்லை ஆள்பெயரின் கடைசிப்பகுதியாகக் கொண்டு, இடையர்களில் ஒருவரது பெயராக அல்லது வேறு ஒரு பெயரின் கடைசிப்பகுதியாகக் குறிக்கலாம். ஆயினும், கோன் என்ற சொல், அரசர்களையும் கூட குறிக்கலாம். எவ்வாறாயினும், இச்சொல்லின் முன்பகுதி கிடைக்கப்பெறாததால் முழு உண்மையை அறிவதற்கில்லை. இச்சொல்லின் முடிவில் இரண்டு குறிகள் ஒன்றோடொன்று சேர்ந்து பொறிக்கப்பட்ட குறி நம் கவனத்தைக் கவர்வதாகும். இக்குறியீட்டின் அடிப்பகுதி குடம் போன்ற பாத்திரத்தின் உள்பகுதியில், தலை கீழாக உள்ள மீன் போன்ற உருவம் ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது (படம் 11). இக்கீறலோடு ஒப்பிடத்தக்க குறிகள் பழம் காசுகளில் காணப்படுகின்றன. சில காசுகளில் தொட்டிகளில் அல்லது தனியாக மீன்கள் கோட்டுருவில் காட்டப்பட்டுள்ளன. இவை, 'தொட்டியில் உள்ள மீன்' அல்லது 'குடத்தில் உள்ள மீன்' என்பதாகக் காசியல் ஆய்வாளர்கள் குறிக்கின்றனர். இவ்வகையில், இக்கீறலையும், இவ்வாறே நாம் விவரிக்கலாம். இதேபோன்ற குறி சிந்துவெளிக் குறிகளிலும் காணப்படுகின்றன. இக்குறியீட்டின் உண்மையான பொருள் யாதென்று அறியக்கூடவில்லை. ஆயினும், மீன் குறி,

முக்கியமாக இரட்டை மீன் குறி, சங்ககாலப் பாண்டிய அரசர்களின் குலச்சின்னம் ஆகும். பாண்டிய மன்னர்கள் வெளியிட்ட காசுகள் பலவற்றிலும் இக்குறி இடப்பட்டுள்ளது. சங்க இலக்கியமும், இரட்டைமீன் குறி பாண்டிய அரசர்களின் குலக்குறி என்பதற்குச் சான்று பகர்கின்றன. இருந்தபோதிலும் இவ்விடத்தில் காணப்படும் இக்குறியீட்டை பாண்டிய அரசகுலச் சின்னம் எனக் கருதுவதற்கு இயலாது. அரசகுலம் தொடர்பான எவ்விதச் சான்றும் இவ்விடத்திலிருந்து கிடைக்கப்பெறவில்லை என்பதை முக்கியமாகக் கருதவேண்டும். இவ்வகையில், சொல்லின் இறுதியில் காணப்படும் இக்குறியினை, நிறுத்தக்குறியாகக் கருத வாய்ப்புண்டு. ஆயினும், நிறுத்தக்குறி இடுவதற்கு இவ்வாறான தொகுப்புக் குறியைக் கீறுவதென்பது சற்றே நெருடலாக, அல்லது அதிகமானதாகத் தோன்றுகிறது. எனவே இக்குறிக்கு வேறு ஒரு பொருள் காணப்படவேண்டும். முன்னர் குறிப்பிட்டாற்போல், இக்குறியீட்டையும் வணிகரின் குலக்குறியாகக் கொள்வதற்கு வாய்ப்புள்ளது.

இதே போல மற்றொரு மண்கலச் சில்லிலும் (எண் 168, படம் 27) சற்றே மாறுபட்ட வடிவில் இவ் உருவும் வரையப்பட்டுள்ளது. இச்சில்லின் இடது மேல் பக்கம் வரை உடைபட்டுள்ளதால் இச்சில்லில் உள்ள தமிழ்ப்பிராமி வரிவடிவத்தில் கீறப்பட்டுள்ள முழுப்பெயரை அறிய இயலவில்லை. கிடைத்த பகுதியில் உள்ள எழுத்துகள் 'கனி' (?) என்று வாசித்துள்ளனர். இறுதியில் உள்ள குறியீட்டு வரைவை (படம் 12), கீழ் நோக்கிய அம்பு முனைப் பகுதியின் நடுத்தண்டோடு மேல்பகுதியில் உள்ள 'ப' போன்ற வடிவம் ஒரு பானைக்குள் வரையப்பட்டுள்ளது என்று விவரிக்கலாம். இவ்வடிவம் மீன் அல்லது அம்பு போன்ற வடிவத்தை ஒத்துள்ளது எனலாம். இவ்விரண்டு மண்கலச் சில்லுகளில் காணப்படும் இக்குறியீட்டு வரைவுகள் ஒன்று போலத் தோன்றினாலும் தனித்தனியாகக் கருதுவதே சிறந்தது.

இவ்வகையில் மற்றுமொரு குறியீட்டைக் காணலாம். இக்குறியீட்டு வரைவு (எண் 5) இடப்பகுதி உடைபட்டுள்ளதால் முழுப்பெயரை அறிய இயலவில்லை. கடைசி இரண்டு எழுத்துகள் 'ணன்' என்று வாசிக்கலாம். இவ்விரண்டு எழுத்துகள் உடைய தமிழ்ச் சொற்கள் பலவாகும் (பரணன், குமணன் போன்ற பெயர்களைக் குறிக்கலாம்). இச்சொல்லினை அடுத்து பெருக்கல் குறியின் அடிமுனைகள் இரண்டும் கிடைக்கோடு ஒன்றால் சேர்க்கப்பட்டுள்ளன (படம் 13). இச்சில்லு இருபக்கமும் உடைபட்டுள்ளது. எனவே இக்குறியீட்டு வரைவை முழுமையாக அறிய இயலாது. இக்குறியீட்டு வரைவுக்கு சற்று மாறுபட்ட வரைவு மருங்கூர் (கடலூர் மாவட்டம்) (படம் 28) கள மேற்பரப்பு ஆய்வில் கண்டெடுக்கப்பட்ட பானைச் சில் ஒன்றில் காணப்படுகிறது. மூன்று எழுத்துள்ள தமிழ் பிராமி பொறிப்பை (அமன்) அடுத்து குறியீடுகள் உள்ளன. மூன்று குறியீடுகள் உள்ளன போன்று தோன்றினாலும் முதலில் உள்ள குறியீடு மட்டுமே தெளிவாக உள்ளது. இக்குறியீடு (படம் 14) பெருக்கல் குறியின் வலது பக்க மேல் முனையோடு கீழ்முனை ஒரு நேர்கோட்டில்

இணைக்கப்பட்டுள்ள தோற்றத்தைக் கொண்டுள்ளது. இக்குறியீட்டை தமிழ் பிராமி எழுத்துகளோடு சேர்த்து வாசிக்க இயலாது. குறியீடு என்ற வகையிலேயே நோக்குதல் வேண்டும். இக் குறியீட்டோடு கொடுமணலில் காணப்பட்ட செங்குத்தாக உள்ள குறியீட்டு வரைவு (படம் 13) ஒப்பிடத்தக்கது. கரூரிலும் இதே மாதிரியான செங்குத்து வரைவு காணப்பட்டுள்ளது. மருங்கூரில் காணப்பட்ட குறியீட்டுவரைவைப் போன்று மற்ற இடங்களில் காணப்படவில்லை என்றா லும் சற்றே மாறுபட்ட வடிவத்தில் இக்குறி காணப்படுகிறதால் இரண்டு குறிகளையும் வேவ்வேறானவையாகக் கருதலாம். இக்குறியீடுகள் நிறுத்தக்குறிகளாக இருக்கலாம் என அனுமானிக்கலாம். இருந்தபோதிலும், எல்லா இடங்களிலும் இவ்வகைக் குறியீடு இடப்படவில்லை. இக்குறியீட்டை, குழுக்குறியீடாகவோ, வணிகர்களில் குறியீடாகவோ கருத வாய்ப்புண்டு.

பழந்தமிழகத்திய காசுகள் பலவற்றிலும் குறிகள் பல பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்குறிகளில் பெரும்பாலானாவை தமிழ்ப்பிராமி எழுத்துவடிவத்தோடு இல்லாமல் தனித்தனிக் குறிகளாகவே உள்ளன. ஆயினும் சில காசுகளில் தமிழ்ப் பிராமி பொறிப்பைத் தொடர்ந்து குறிகள் காணப்பட்டுள்ளன. இக்குறிகளைச் சில ஆய்வாளர்கள் அக்காலப் பழம் எழுத்து வடிவங்களாகக் கருதியுள்ளனர். இவ்வகையில், சங்ககாலப் பாண்டிய மன்னர்கள் வெளியிட்ட காசு ஒன்றில் உள்ள குறியீட்டைச் சுட்டலாம். இக்காசின் முன்புறத்தில் பாண்டிய அரசனின் பெயர், பெருவழுதி பெருவழுதி என்று காணப்படுகிறது. இப்பெயர், காசின் மேல் பகுதி, பக்கவாட்டுப்பகுதி, மற்றும் கீழ்ப்பகுதி என்று மூன்று பகுதிகளில் பிரித்து வெட்டப்பட்டுள்ளது. இப்பெயரின் இறுதியில் உள்ள ஒரு குறியீட்டை (படம் 15), பிராகிருத எழுத்துவடிவான 'ச' என்று அடையாளப்படுத்தினர். எனவே, இச்சொல்லுக்கு 'உடைய' என்ற பொருள் கண்டு, இக்காசை வெளியிட்ட அரசனுடையது என்றும் கருதினர். இதன் காரணமாக காசில் உள்ள பெயர் இரண்டு எழுத்து வடிவங்களில் (தமிழ்ப்பிராமி, (வட)பிராமி), இரண்டு மொழிகளில் (தமிழ், பிராகிருதம்) உள்ளதெனவும் ஐராவதம் மகாதேவன் எண்ணினார். பின்னர் இதே காசுகளை ஆய்ந்த சம்பத் இக்கருத்துக்கு ஆதரவு தெரிவித்தார். இவ்வாய்வாளர்களால் 'ச' என்று அடையாளம் காணப்பட்ட வடிவம் பிராகிருத எழுத்து வடிவமன்று, அது, வளைந்த பிறை வடிவங்கள் மூன்றைப் பக்கவாட்டுப் பகுதிகளில் கொண்ட ஒரு வட்டம் எனப்படும் 'மூவளையப்பிறை' (triskele) என்பது எவ்வித ஐயத்திற்கும் இடமில்லாமல் இக்காசைக் கண்டெடுத்து வெளியிட்ட கிருஷ்ணமூர்த்தியால் காட்டப்பட்டுள்ளது. இந்த மூவளையப்பிறைக் குறி பொதுவாக பழம் காசுகளில் தனியாகவோ அல்லது ஒன்றிரண்டு சேர்ந்த தொகுப்பாகவோ பொதுவாகக் காணப்படும். பொதுவாக 'மூவளையப்பிறை' என்ற இக்குறி எவ்வித பண்டைய எழுத்து வடிவத்தோடும் சேர்ந்து காசுகளோ அல்லது வேறு தொல்பொருள்களிலோ காணப்படுவதில்லை. தனித்தே காணப்படும்

இக்குறியீட்டின் உண்மையான பொருள் தற்பொழுதுவரை தெரியவில்லை.

கரூர் (கரூர் மாவட்டம்) (படம் 29), அமராவதி ஆற்றில் கண்டெடுக்கப்பட்ட வெள்ளி மோதிரம் ஒன்றில் நாம் வாசிப்பதற்கு ஏதுவாக நேரான வகையில் மிகத் தெளிவாக வெட்டப்பட்டுள்ள தமிழ்ப்பிராமி எழுத்துருக்களின் இறுதியில் கோட்டுருவில் ஆன மீன் குறி ஒன்று (படம் 16) வெட்டப்பட்டுள்ளது. தமிழ்ப்பிராமி வரிவடிவத்தில் உள்ள பெயரை பெருவழுதி என்று வாசிக்கலாம். இங்கு காணப்படும் மீன் குறிக்கும் நாணயங்கள் போன்ற பிறபொருள்களில் காணப்படும் மீன் குறிக்கும் எந்த வித்தியாசமும் இல்லை என்பது மிகத் தெளிவாக உள்ளது. மீன் குறியீடு பாண்டிய அரசர்களின் குலக்குறியாக இலக்கியக்களிலும், பிற நாணயங்களிலும் காணப்பட்டுள்ளன. எனவே இம்மீன் குறியீட்டை அரசகுலச் சின்னமாகக் கருத வாய்ப்புள்ளது. பொதுவாக இரட்டை மீன் குறியே, பாண்டியர் சின்னம் எனக்கருதப்பட்டாலும், தனி மீன் குறியீட்டையும் அவ்வாறே கருதலாம்.

ஏறக்குறைய இதே வடிவிலான குறிகளைக் கொண்ட மாவுக் கல் (ஸ்டியேடைட் கல்) முத்திரை (படம் 30) ஒன்றை இங்கே நாம் குறிப்பிடவேண்டும். இது மோதிரம் வடிவிலான ஒரு சிறிய முத்திரை; இலங்கையில் (யாழ்ப்பாணம் பகுதி), ஆனைக்கோட்டை என்ற பெருங்கற்காலப் புதைகுழி ஒன்றிலிருந்து கண்டெடுக்கப்பட்டது. இது ஒரு முத்திரை என்பதால், எழுத்துகளும், குறிகளும் நேராக வெட்டப்படாமல், பிரதிபிம்பமாக மாற்றி வெட்டப்பட்டுள்ளன. முத்திரை இடப்பட்ட பின், எழுத்துகளையும் குறிகளையும் நேராகப் படிக்க இயலும். இம்முத்திரையில் உள்ள மூன்று குறிகள், மூன்று எழுத்துகள் உள்ள தமிழ்ப்பிராமி பொறிப்பின் மேல்பகுதியில் பொறிக்கப்பட்டுள்ளன. இம்மூன்று குறிகளில் ஒரேஉருவம் கொண்டவையாயுள்ள முதல் இரண்டு குறிகள் நம் கவனத்தை ஈர்ப்பன. மூன்று கிளைகளை ஒரு தண்டில் கொண்டுள்ளன என்பதால் இக்குறிகளை, திரிசூலம் அல்லது முச்சூலம் (படம் 8) என்று வகைப்படுத்தலாம். மூன்றாவதாக உள்ள குறியில், வட்டத்தின் பக்கவாட்டுப் பகுதியில் பிறைவளைவு இணைக்கப்பட்டுள்ளது. இக்குறியை நந்திபாதம் (nandipada) அல்லது காளை உருவக் குறி (taurine) என்றும், இவ்விடத்தில் அக்குறி படுக்கை வசத்தில் (படம் 17) வெட்டப்பட்டுள்ளது எனலாம். இக்குறி, பொதுவாக எல்லா பழம் காசுகளில் காணப்படுகின்றன என்றபோதிலும், காளையின் முகச் சாயல் அல்லது காளையின் குளம்பு வடிவத்தை ஒத்து உள்ளது என்ற போதிலும், இக்குறியீட்டு வடிவம் காசுகளில் பொறிக்கப்பட்டதன் உண்மைப் பொருளைத் தற்போது அறிய இயலவில்லை. இம்மூன்று குறிகளும் தொடர்ச்சியாக ஓரிடத்தில் காணப்படுவது சிறப்புடையது. இதன் தன்மைகள் நன்கு ஆராயப்படவேண்டும்.

தமிழ்ப்பிராமி வரிவடிவத்தில் உள்ள பொறிப்பை முதலில் கோவேத என்று

படித்துள்ளனர். இச்சொல், தனி ஆள்பெயராக அல்லது பட்டப்பெயராகக் கருதப்பட்டுள்ளது. இச்சொல்லில் முதலில் உள்ள 'கோ' என்ற சொல், அரசர் அல்லது சிற்றரசர்களைக் குறிப்பதாகக் கருதப்படுவதாலும் அரசன், சிற்றரசன் அல்லது அரசஊழியருக்கு தரப்பட்ட பட்டமாகக் கருதப்பட்டுள்ளது. எனவே அரசன், சிற்றரசன் அல்லது அரச ஊழியருடைய அலுவல் பயன்பாட்டிற்காக இம்முத்திரை செய்யப்பட்டிருக்கலாம் என்று முதலில் கருதப்பட்டது. ஆனால், அண்மையில், எ. சுப்பராயலு, இம்முத்திரை மோதிரத்தில் உள்ள தமிழ்ப்பிராமி வாசகத்தைச் சற்றே மாற்றி 'ரேவேத' என்று படித்து பிராகிருதச் சார்புடைய ஆள் பெயராகும் என்று கருத்தறிவித்துள்ளார். இதனால் இப்பெயரை அரசகுலத்தோடு அல்லது அரச அலுவரோடு தற்போது தொடர்புபடுத்த இயலாது என்பதால், வணிகர் ஒருவரின் பெயராகக் கொள்ள வாய்ப்புள்ளது. அவ்வாறு கொண்டோமென்றால் இம்முத்திரை வணிகர் ஒருவரின் முத்திரையாகக் கருதி மேல் பகுதியில் உள்ள குறிகளை அவ்வணிகரின் தனி அடையாள முத்திரையாகக் கருத வாய்ப்புள்ளது.

இம்முத்திரையின் மேல் புறத்தில் உள்ள மூன்று குறிகளில் திரிசூலக் குறி (படம் 8) கொண்ட இரண்டு குறிகள், பெருங்கற்கால மண்பாண்டங்களில் காணப்படும் குறிகளை ஒத்துள்ளது. இப்படி காணப்படும் குறிகள் அக்கால மண்பாண்டங்களில் பொதுவாக தனித்தே காணப்படுகின்றன. இக்குறி, மொழிசார்ந்த எவ்வித வரிவடிவத்தோடும் தொடர்பில்லாமல் காணப்படுவது நோக்கற்பாலது. இக்குறியின் முழுமையான வடிவமான திரிசூலம் வரலாற்றுக்காலங்களில் கடவுள் படிமங்களில் காணப்படுகின்றன. முக்கியமாக திரிசூலம், சிவன், விஷ்ணு, துர்க்கை, சுப்பிரமணியர் போன்ற கடவுள்களின் படைக்கலன்களில் ஒன்றாகக் காணப்படுகின்றது. இருந்தபோதிலும், திரிசூலம் அரசகுலச் சின்னமாக இலங்கை அல்லது தென் இந்தியாவில் இதுவரை அடையாளப்படுத்தப்படவில்லை. எனவே இக்குறியினை, அரசர்களோடு அல்லது அரசகுலங்களோடு தற்சமயம் தொடர்புபடுத்துவது இயலாது. இக்குறி, முத்திரையில் வெட்டப்பட்டு, முத்திரை இட பயன்பட்டிருக்கவேண்டும் என்பதாலும், காசுகளில் காணப்படும் நந்திபாத குறியும் இம்முத்திரையில் பயன்படுத்தியுள்ளதையும் சேர்த்து நோக்கும் போது இவையெல்லாம் ஒரு வணிகரின் சொந்தக்குறியாக இருப்பதற்கு வாய்ப்புள்ளது. எனவே இம்முத்திரை, அரசகுல முத்திரை என்று கொள்ளாமல், ஒரு வணிகரின் முத்திரை என்ற அளவில் அடையாளப்படுத்தலாம்.

மேலே விவாதிக்கப்பட்ட பண்டைய குறிகள் தமிழ்ப்பிராமி கல்வெட்டுகள், மண்கலப் பொறிப்புகள், நாணயங்கள், முத்திரைகள் ஆகிய தொல்பொருள்களில் கல்வெட்டுகளின் இடையில் அல்லது இறுதியில் காணப்படுகின்றன என்றபோதிலும் ஒரே வகைக் குறிகள் உள்ளபோதும் அவை ஒரே பொருளைக் குறித்து இடப்படவில்லை என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது. குறிகள் அமைவிடத்தினை

ஒட்டி பொருள் மாறுபடும். அரச குலக் குறியீடாகவும், வணிகர்குலக் குறியீடாகவும் சில சமயம் இக்குறிகளை நோக்குதல் வேண்டும். இக்குறியீட்டு வரைவுகள் சிலவற்றை குறிப்பாக, அழகர்மலை, திருவண்ணாமலை, எடக்கல் போன்ற இடங்களில் உள்ள வரைவுகளை நிறுத்தக்குறிகளாகக் கருதுவதற்கும் வாய்ப்புள்ளது. எனினும், நிறுத்தக்குறிகளுக்கு ஒரே வகையான வரைவுகள் பயன்படுத்தப்படவில்லை என்பதையும் நம் கருத்தில் கொள்ளவேண்டும்.

## துணை நூற்பட்டியல்


**1. A.V. Narasimha Murthy, "Graffiti or Pottey and the Brahmi Script", in Michael Lockwood, ed. *Indological Essays, Commemoration Volume II* for Gift Siromoney, Madras Christian College, Tambaram, 1992, pp.57-66.**

**2. Gift Siromony, "The Invention of the Brahmi Script", in Michael Lockwood, ed. முன்னர் குறித்தநூல், pp.219-223.**

**3. B.B. Lal, "Form the Megalithic to the Harappa, Tracing back the graffiti on pottery", *Ancient India, vol. 16*, 1962. pp. 4-**

**Iravatham Mahadevan, *The Indus Script: Texts, Concordance and Tables*, Memoirs of the Archaeological Survey of India, No. 77, Archaeological Survey of India, New Delhi, 1977.**

**4. S.Gurumurthy, *Deciphering the Indus Script* ( From Graffiti on Ancient Indian Pottery), University of Madras, Chennai 1999.**

5. இராசு.பவுன்துரை, **பண்டைய வரைவுகளும் குறியீடுகளும** ', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.

6. கா.ராஜன், 'பண்டைக் குறியீடுகளும் எழுத்துக்களும்', **தமிழ்க் கல்வெட்டியலும் வரலாறும்** , பதி. எ. சுப்பராயலு, இராசு, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 2001, பக். 1-18.

**7. Iravatham Mahadevan, *Early Tamil Epigraphy,* From the Earliest Times to the Sixth Century C.E. (ETE.), Revised & Enlarged Second Edition, Central Institute of Classical Tamil, Chennai, 2014,** பக். **244.**

8. அழகர்மலை: ***Annual Report on Epigraphy* (ARE.), 1910, nos. 70-79; *South Indian Inscriptions* (SII.), vol. 36, nos. 70-79; Iravatham Mahadevan, ETE., plates 36-47.** விக்கிரமங்கலம்: **ARE., 1963-64, no. 285; Iravatham Mahadevan, *ETE.*, plate 19.** கொங்கர்புளியங்குளம்: **ARE,, 1910, nos. 56-57; SII., vol. 36, nos. 56-57; Iravatham Mahadevan, ETE., plates 12-13.**

**9. Iravatham Mahadevan, ETE., Chennai, 2014.**

10. மேல்குறித்த நூல், பக். 243.

11. மேல்குறித்த நூல், பக். 243.

12. **ஆவணம்** , 21 (2010), பக். 7-8. இங்கே சங்க கால வாழ்விடம் இருந்ததற்கான பல தொல்பொருள்கள் கிடைத்துள்ளன.

13.மூன்று எழுத்துகளில் மூன்றாவதாக உள்ள எழுத்தை வாசிக்காமல் குறியீடாகக் கருதியுள்ளனர். ஆயினும் இதனை 'ன்' என்று வாசித்து அமன் என்ற ஆள்பெயராகக் கருதலாம்.

14. R.Krishnamurthy, *Sangam Age Tamil Coins* (SATC.), p. 23, see coin No. 8, Plate I, Garnet Publications, Chennai.

15. Iravatham Mahadevan. *ETE*., p. 74.

16. M.D. Sampath, "A Bilingual Pandya Coin", *The Quartely Journal of the Mythic Society, vol.79*, no.3 (1988), pp. 301-304.

17. R.Krishnamurthy, SATC., coin No. 8, p. 20-21, plate: 1 no.8.

Beena Sarasan, "A Sangam Age Pandya Ring of C.2nd Century BC", *Studies in South Indian Coins, Vol. xxvi* (2016), eds. A.V. Narasimha Murthy, T. Satyamurthy, pp.6-8. இம்மோதிரத்தில் உள்ள "ரி" நேர் கோடாகக் காணப்படாமல் சற்றே வளைந்துள்ளது ஆனைக்கோட்டை அகழாய்வு முத்திரையில் காணப்படும் 'ரெ' என்ற எழுத்தோடு ஒப்பிடத்தக்கதாகும்.

18. இம்முத்திரை மோதிரம் இலங்கையில் (யாழ்ப்பாணம் பகுதி) ஆனைக்கோட்டை என்னுமிடத்தில் உள்ள பெருங்கற்காலப் புதைகுழியில் 1980 இல் கண்டெடுக்கப்பட்டது. முதலில் இம்முத்திரை வெள்ளி உலோகத்தால் ஆனது என்று அறிவித்திருந்ததை அண்மையில் அவர் வெளியிட்ட நூலில் திருத்தி அறிவித்துள்ளார். இம்முத்திரை மோதிரம் பற்றிய முழுமையான கட்டுரையை, இந்திரபாலா வெளியிட்டுள்ளார். Indrapala, Appendix viii: "A Note on the Anaikoddai seal inscription" in The Evolution of an Ethnic Identity: *The Tamil in Sri Lanka, 300 BCE to 1200 CE.*, The South Asian studies Centre, Sydney, pp. 324.

இம்முத்திரை மோதிரம் கண்டெடுக்கப்பட்ட காலத்தில், சிந்துவெளி நாகரிக முத்திரை எனத் அறிவிக்கப்பட்டிருந்தது.

19. ஐராவதம் மகாதேவன் சற்றே மாறுபட்ட வாசகத்தைத் தருகிறார். மூன்று எழுத்துகளில் நடுவில் உள்ள எழுத்தில் 'ஆ' நெடிலுக்கு இடப்படவேண்டிய வலதுபக்கக் கோடு தவறுதலாக இடப்பக்கம் இடப்பட்டுள்ளதாக கருதியும், சொல்லின் இறுதியில் 'ன்' என்ற எழுத்து விடுபட்டிருக்கலாம் என்றும் அனுமானித்து, அச்சொல்லை "கோவாத(ன்)" என்று வாசிக்கிறார். அவரது இந்த இரண்டு கருத்துக்களும் ஏற்கத்தகுந்தன அல்ல. முக்கியமாக, இது ஒரு முத்திரை என்பதால் மிகுந்த கவனத்தோடு வடிவமைத்து, எழுத்துகளையும் குறிகளையும் செதுக்கியிருக்கவேண்டும். எனவே தவறு ஏற்படுவதற்கு வாய்ப்பில்லை எனக் கருதலாம்.

20. மூன்று எழுத்துகளில் முதலில் உள்ள எழுத்தை 'கோ' என்று கொள்ளுவது பொருத்தமாக இல்லை என்றும் அவ்வெழுத்தை 'ரே' என்று படிப்பதே சரியானது என்றும், முழுச்சொல்லை, 'ரேவேத' என்ற ஒரு பிராகிருதச் சார்புடைய ஆள் பெயராகப் படிப்பதே சரியானது என்று காட்டியுள்ளார். எ. சுப்பராயலு, "ஆனைக்கோட்டை முத்திரை எழுத்துப் பொறிப்பு - ஒரு மீள்பார்வை", **ஆவணம்** , 21, 2010, பக். 245-246.

# 118. இராசேந்திர சோழன் - உத்தமாக்ரமும் பிற புதுவை மாநிலக் கல்வெட்டு செய்திகளும்

**ந.வேங்கடேசன், வில்லியனூர்.**

பொ.ஆ. 2-3-1048 -இல் சேனாதிபதிகள் இராசேந்திர சோழ மாவலி வாணராஜர் என்பவர் தம் அரசன் இராசேந்திர சோழன் உடல் வளத்துடன் நீடுவாழ வேண்டுமென்று வீர நாராயண விண்ணகர் ஆழ்வார்க் கோவிலுக்கு 72 வேலி நிலங்களைக் கொடையாக வழங்கினார். திரிபுவன மாதேவிச் சதுரவேதி மங்கலத்துக்கு வடக்கே உள்ளதும், கோக்கிழானடிப் பேரேரிக்குக் கிழக்கே உள்ளதுமான கொடுக் கூரான இராசேந்திர சோழ நல்லூரில் அந்நிலங்கள் அமைந்திருந்தன. அந்நிலங்கள் ஆண்டு ஒன்றுக்கு 12,000/- கலம் நெல் வருவாயுடையன. இராசேந்திர சோழன் 'உத்தமாக்ரம்' என்னும் பெயரால் வருவாய் வந்தது. அவ்வருவாய் முழுவதும் திருவமுது, கல்லூரி, மடம், நந்தவனம், பணியாளர் ஆகிய பல்வேறு இனங்களுக்கும் செலவிடப் பெற்றன. திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலத்துச் சபையினர் செம்பியன் உம்பள நாட்டு மூவேந்த வேளார் எடுப்பித்த மண்டபத்தில் கூடியிருந்து மேற்கண்ட செலவினங்களைக் கீழ்க்கண்டவாறு வரையறைச் செய்தனர்.

வீற்றிருந்தாழ்வார்க்குக் காலைச் சந்தித் திருவமுதுக்காக நாள்தோறும் நெல் ஐந்து குறுணியும், அழகிய மணவாளர்க்கு நான்கு சந்திகளில் திருவமுது படைக்கவும், நந்தா விளக்கு எரிக்கவும் நாள்தோறும் நெல் ஒரு கலமும் நரசிங்க ஆழ்வார்க்குச் சந்தித்திருவமுது படைக்கவும், நந்தாவிளக்கு எரிக்கவும் நாள்தோறும் நெல் பதக்கே மூன்று நாழியுமாக இம்மூன்று இனங்களுக்கும் ஆண்டு ஒன்றுக்கு நெல் ஐந்நூற்றுத் தொண்ணூற்று ஆறு கலனே முக்குறுணி நெல் ஒதுக்கப்பெற்றது.

மாசித் திங்கள் புணர்ப்பூச நட்சத்திரத்தன்று தனது பிறந்த நாள் கொடையாக இருக்கு வேதம் ஓதுகின்றவனுக்கு தலா பொன் கழஞ்சரையே இரண்டு மஞ்சாடிக் குன்றி வீதம் பொன் நான்கு கழஞ்சே முக்காலே இரண்டு மஞ்சாடிக் குன்றி வழங்கப்பெற்றன. இவை பொன்னாக வழங்கப் பெறாமல் ஒரு கழஞ்சு பொன்னுக்குப் பத்து கலம் நெல் வீதம் நாற்பத்தெட்டுக் கலனே இருதூணிக் குறுணி ஒதுக்கப்பெற்றது.

அன்றைய நாளில் நெய்யாடலுக்கும், விளக்கெரிக்க வேண்டுதலுக்கு நூற்று நாழி எண்ணெய்க்குமாக நெல் முப்பத்து முக்கலனே தூணியும், சுண்ணம் தயாரிப்பதற்கு வேண்டும் மஞ்சளுக்கு நெல் நான்கு கலமும், 108 குடம் திருமஞ்சன நீர் கொணர நெல் ஏழு கலமும், திருவமுதுக்காக நெல் பத்துக் கலமும், 100 வைணவர்கள் உணவு உண்ண நெல் நூற்று இருபது கலமும், செங்கழுநீர் பூக்களால் திருவாசிகைச் செய்ய நெல் எட்டுக் கலனே எழுகுறுணியும் ஆக இவ்வகையில்

---

கோவிலூர் ஆதினத்தலைவர் தவத்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் ஆண்டவர் பெயரில் நிறுவியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 18வது சொற்பொழிவு. திருவண்ணாமலை நாள் 22.7.2018

ஆண்டு ஒன்றுக்கு நெல் 240 கலம் ஒதுக்கப்பெற்றது.

ஜெயந்தாஷ்டமி நாளன்றும் 240 கலம் நெல் ஒதுக்கப் பெற்றது. திருவாய்மொழித் திருப்பதிகங்களை ஓதுகின்றவர்களுக்கு நாற்கழஞ்சு பொன்னுக்கு நெல் நாற்பது கலமும், துவாதசி நாளன்று வீற்றிருந்த ஆழ்வார்க்கு 108 குடம் திருமஞ்சன நீர் கொணர நெல் ஏழுகலமும், திருவமுதுக்கு நெல் பத்துக் கலமும், ஆடைக்கு நெல் நாற்பத்தாறு கலனே தூணி நெல்லும், ஸ்ரீவைணவர்கள் உணவு உண்ண நெல் பதினாறு கலனே இருதூணியும் ஆக இவ்வகையில் ஆண்டு ஒன்றுக்கு நெல் 120 கலம் ஒதுக்கப்பெற்றது.

மேலும் 72 வேலி அளவுடைய நிலங்களிலிருந்து இதுகாறும் கூறிய அனைத்து இனங்களுக்கும் ஆண்டு ஒன்றுக்கு 12,000 கலம் நெல் செலவிடப் பெறுதல் வேண்டும்.

இவற்றை ஆவ்வவ் ஆண்டில் பஞ்ச வாரியம் செய்கின்ற வாரியத்தினரே இந்நில வருவாயை வசூலித்து அவற்றை மேற்கூறிய இனங்களுக்குச் செலவிட ஏற்பாடு செய்தல் வேண்டும். இந்நிலங்களைப் பயிர்செய்யும் குடிகளுக்கு வரிகள் தவிர வெள்ளானிறை, உழவிறை, உள்ளிட்ட பிற வரிகள் நீக்கப்பெற வேண்டுமென்றும் உறுதி செய்தனர்.

கோக்கிழானடிப் பேரேரியிலிருந்து, கங்கைகொண்ட சோழப் பேராற்றினின்றும் இந்நிலங்களுக்குக் கலிங்கு அல்லது மடைகள் வாயிலாகவும், சில நிலங்களுக்குச் சிறிய அணைகள் வாயிலாகவும் நீர்பாய ஏற்பாடு செய்யப்பெற்றது.

சபையினரின் முடிவுகளுக்கு மாறாகச் செயல்படுவார்க்கு தண்டனை வழங்கவும் வழிவகை செய்தனர். ஊர்ச் சபையினரின் இம்முடிவுகள் கல்லில் பொறிக்கப் பெற்றதன் வாயிலாக உறுதி செய்யப்பெற்றது.

இவ்வாறு சபை உறுப்பினர்கள் சொல்ல சிவதேவன் செய்ய பத்திரன் என்னும் வீரசிகாமிகச் சேரியைச் சேர்ந்த கணக்கன் நிகழ்ச்சிக் குறிப்பில் எழுதியுள்ளான். (இ. ஆ. க. அ: 176/1919) (புதுச்சேரி மாநிலக் கல்வெட்டுக்கள். எண்: 102)

**எண்ணாயிரம்:** முதல் இராசேந்திரன் பொ.ஆ.1012 -இல் ஆனாங்கூராகிய இராஜராஜ நல்லூரில் இராஜராஜ விண்ணகர் கோவில் உள்ளது. சபை கூடி, அவ்விண்ணகர் எப்பெருமானுக்கு விழா எடுக்கவும், திருவாய்மொழி இசைக்கவும் கல்லூரி செயல்படவும் 45 வேலி நிலங்களைக் கொடையாக அரசன் அளித்தான்.

1. நால்வர் நாள்தோறும் இறைவன் முன்பு திருவாய்மொழி இசைக்க வேண்டும். அவர்களுக்கு மூன்று குறுணி நெல் ஊதியமாக அளிக்கப்பட்டது. அதற்காக அரைவேலி இரண்டு மா நிலம் ஒதுக்கப்பெற்றது.

2. மடத்திலிருக்கும் இருபத்தைந்து திருவைணவர்களுக்கு உணவுக்காக, ஒருவேலி நான்கு மா நிலம் ஒதுக்கப்பட்டது.

3. ஆணி அனுஷம் விழா ஏழு நாட்கள் கொண்டாடப்பெறும். அப்போது வரும் ஆயிரம் வைணவர்களுக்கும் விழாவிற்கு வரும் பொதுமக்களுக்கும் அறுபது கலம் நெல்லும் மூன்று கழஞ்சு பொன்னும் ஒதுக்கினர்.

4. அரைவேலி இரண்டு மா நிலமும் , சில பொன்னும் ஒதுக்கினர். எதற்காக என்றால், இறைவன் வீதி உலாவிற்கும் தேர் திருவிழாவிற்கும், இறைவர்க்கு ஆடைக்கும் ஆகும் செலவுகளை மேற்கண்ட நில வருவாயிலிருந்து செலவு செய்ய

வேண்டியது.

கங்கை கொண்ட சோழன் மண்டபத்திலிருந்து முடிவெடுத்தமை:-

75 மாணாக்கர் ரிக் வேதமும்,

75 மாணாக்கர் யசூர் வேதமும்,

20 மாணாக்கர் சந்தோக சாமமும்,

20 மாணாக்கர் தலவகார சாமும்.

உத்தராயணம், தட்சராயணம், ஐப்பசி விஷு சித்திரை விஷு ஆகிய நாட்களில் மணவாள ஆழ்வார்க்கு 108 குடம் நீர் கொணர்ந்து திருமஞ்சனம் செய்வதற்கும், ஆடைக்கும், அமுதுக்கும் நாளொன்றுக்கு நெல் முப்பது கலமாக மேற்கூறிய நான்கு நாட்களுக்கு நெல் 120 கலம் ஒதுக்கப்பெற்றது.

இதுகாறும், கூறப்பெற்ற இனங்களுக்கும் ஆண்டுக்கு நெல் ஆயிரத்து முந்நூற்றுப் பதினாறு கலனே மூன்று குறுணி ஒதுக்கப்பெற்றது.

இனி, இராசேந்திரசோழன் மடத்தில் நாள்தோறும் உணவு உண்ணுகின்ற 12 ஸ்ரீவைணவர்களுக்கு நாளொன்றுக்கு நெல் கலமும், ஆராதனை செய்கின்ற ஒருவனுக்கு நெல் பதக்கும், திருவாய்மொழித் திருப்பதியம் பாடுகின்ற ஒருவனுக்கு நெல் முக்குறுணியும், கோவிலையும், மடத்தையும் பெருக்கித் தூய்மை செய்கின்ற ஒருவனுக்கு நெல் ஐந்து நாழியும்;

புருஷ நாராயணன், விக்கிரம சோழன் என்னும் பெயருடைய இரண்டு நந்தவனங்களைப் பராமரிக்கின்ற நால்வர்க்கு நெல் இரு தூணியும் கோவிலுக்கும், மடத்துக்கும் கணக்கெழுதுகின்ற ஒருவனுக்கு நெல் குறுணியும், காவலன் ஒருவனுக்கு நெல் பதக்கும் ஆக நாள் ஒன்றுக்கு முக்கலனே ஒரு பதக்கு ஐந்து நாழி வீதம் ஆண்டுக்கு ஆயிரத்து நூற்று ஐம்பத் தொன்பதின் கலனே ஐங்குறுணி நெல்லும் ஒதுக்கப்பெற்றது.

வடமொழிக் கல்லூரி:

இருக்கு வேதம் ஓதுவிப்பார் மூவர், யசூர் வேதம் ஓதுவிப்பார் மூவர், சந்தோக சாமம்

**எண்ணாயிரம் 2**

20 மாணாக்கர் வாஜஸ நேயமும், 10 மாணாக்கர் அதர்வாவும், 10 மாணாக்கர் பௌதானிய கிரியாகல்பா மற்றும் பாடலையும், 230 பிரம்மசாரிகள் அபூர்வ வேதத்தையும் 40 ரூபாவதாரவும் 270. இவர்களுக்கு 6 நாழி நெல் ஒவ்வொருவருக்கும் ஒரு நாளைக்கு ஒதுக்கப்பட்டது.

25 பேர் வியாகர்ணாவும், 305 பேர் பிரபாகாராவும், 10 பேர் வேதாந்தமும் இவர் 70 பேர்களுக்கு நாள்தோறும் ஒவ்வொருவர்க்கு ஒரு குறுணி இரண்டு நாழி நெல் ஒதுக்கப்பெற்றது.

நம்பிகளுக்கு,யாகர்ணம் கூறும் நம்பிகளுக்கு ஒரு கலம் நெல்லும், பிரபாகரா கூறும் நம்பிகளுக்கு ஒரு கலம் நெல்லும், வேதாந்தம் நம்பிகளுக்கு ஒரு கலம் ஒரு தூணி நெல் ஒதுக்கப்பெற்றது.

பத்து பேராசிரியர்கள் வேதம் கற்பிக்க

3 பேராசிரியர் ரிக் வேதம்

| | |
|---|---|
| 3 பேராசிரியர் | யசூர் வேதம் |
| 1 பேராசிரியர் | சந்தோக சாமம் |
| 1 பேராசிரியர் | தலவகார சாமம் |
| 1 பேராசிரியர் | வாஜச நேயம் |
| 1 பேராசிரியர் | பௌதானிய கிரியா கல்பா காடாகா. |

ஓதுவிப்பார் ஒருவர் தலகார சாமம் ஓதுவிப்பார் ஒருவர், அபூர்வம் ஓதுவிப்பார் ஒருவர், வாஜஸ நேயம் ஓதுவிப்பார் ஒருவர், போதாயன சூத்திரம் ஓதுவிப்பார் ஒருவர், சந்தியா க்ர்ஷாட சூத்திரம் ஓதுவிப்பார் ஒருவர் ஆக பன்னிருவர்க்கு நாள் ஒன்றுக்கு தலா தூணி நெல்லாக நாள்தோறும் நான்கு கலம் நெல் ஒதுக்கப்பெற்றது.

வேதாந்த விரிவுரையாளன் ஒருவனுக்கு நெல் கலனே பதக்கும், மீமாம்சை விரிவுரையாளன் ஒருவனுக்கு நெல் கலமும், வியாகரண விரிவுரையாளன் ஒருவனுக்கு நெல் தூணி குறுணியும், உருபாவதாரம் கேட்பிப்பாண் ஒருவனுக்கு நெல் தூணிப் பதக்கும், மாபாரதமும், ஸ்ரீராமாயணமும் வாசிக்கின்ற ஒருவனுக்கு நெல் இரு தூணிக் குறுணியும் ஸ்ரீமனுசாஸ்திரம் கேட்பிப்பான் ஒருவனுக்கு நெல் தூணியும், ஸ்ரீவைகானசம் ஓதுவிப்பான் ஒருவனுக்கு நெல் தூணியும் இருக்கு வேதம், அபூர்வம் ஆகியவற்றை ஓதுவார் அறுபதின்மர், சந்தோக சாமம் ஓதுவார் இருபதின்மர், தலவகார சாமம், அபூர்வம் வாஜஸ நேயம், போதாயன சூத்திரம், சந்தியாஷாட சூத்திரம் ஆகியவற்றை ஓதுவார் ஐம்பதின்மர் ஆக நூற்றுத் தொண்ணூற்றுவர்க்குத் தலா அறு நாழியாக நாள் ஒன்றுக்கு நெல் பதினொரு கலனே இருதூணிப் பதக்கு நானாழியும்;

வேதாந்தம் கேட்பார் பதின்மர்ஞ் சாத்திரம் கேட்பார் முப்பதின்மர் ஆக நாற்பதின்மர்க்கு நெல் ஐங்கலனே இருதூணிப் பதக்காக நாள் ஒன்றுக்கு நெல் இருபத்தாறு கலனே ஐங்குறுணி

**எண்ணாயிரம் 3**

ரூபாவதாரம் கற்றுத் தருவோர்க்கு மூன்று குறுணி நெல்வீதம் ஒரு நாளைக்குத் தரப்பட்டது. ஆண்டுக்கு 10, 506 கலம் நெல் செலவிடப் பெற்றது.

பொன் வகையில்: வியாகர்ணம் போதித்த பேராசிரியர்க்கு 8 கழஞ்சு பொன் கொடுத்தனர்.

12 அத்தியாயம், ஒரு அத்தியாயத்திற்கு ஒரு கழஞ்சு வீதம் 12 அத்தியாயத்திற்கு 12 கழஞ்சு பொன் கொடுத்தனர். 13 பேராசிரியர்களுக்கு, ஒருவர்க்கு லு கழஞ்சு வீதம் 6 லு கழஞ்சு பொன்னை வேத பேராசிரியர்களுக்கு அளித்தனர். 70 சாஸ்திரர்க்கு ரூபாவதாரம் பயின்றவர்க்கு ஒருவர்க்கு லு கழஞ்சு வீதம் பொன் அளித்தனர். மேற்கூறிய பொன்னும் நெல்லும் 45 வேலி நில வருவாயிலிருந்து ஒதுக்கப்பெற்றது.

அந்நிலங்கள் மாம்பாக்கச் சேரியான பவித்திர மாணிக்க நல்லூரில் உள்ளது. இவ்வூர் ஆனாங்கூராகிய இராஜராஜ நல்லூரின் ஒரு பகுதியாகும். மற்றும் மேல் கூடலூர் புருஷ நாராயண நல்லூரிலும் உள்ளது.

அரசன் இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தில் காளி ஏகாம்பரனார் என்பவர்

தலைமையில் கூட்டம் கூடி, அரசு ஆவண பொத்தகத்தில் 45 வேலி நிலங்களைப் பயிர் செய்யும் குடிகள் 1/16 மாவுக்கு ஒரு பதக்கு வீதம் செலுத்த ஆணை பிறப்பிக்கப்பட்டது. நானாழியாக ஆண்டு ஒன்றுக்கு 9525 கலம் நெல் ஒதுக்கப்பெற்றது.

**ஆரியக் கூத்து:** முதலாம் இராஜாதிராஜ சோழனின் 35-ஆம் ஆட்சியாண்டில் கி.பி.1043.

**திருநள்ளாறு:** திருநள்ளாறுடையார்க் கோவிலில் ஆண்டுதோறும் மாசிமாதம் மகத்து நாளன்றும், வைகாசி மாதம் விராகத்து நாளன்றும் ஸ்ரீகண்டன் கம்பனான அபிமான மேரு நாடகப் பேரரையனும், ஸ்ரீகண்டன் அரங்கனின் மக்களுமாக ஆரியக் கூத்து நிகழ்த்தி வந்தனர். இவர்கள், அனுபவிப்பதற்காக 'ஆரியக் கூத்துக் காணி' என்னும் பெயரில் 3 வேலி நிலங்கள் கொடையாக வழங்கப்பெற்றன. இவர்கள் தாம் ஆடிய இரண்டு நாள் கூத்துக்களை ஐந்து ஐந்து அங்கங்களாகப் பிரித்து நிகழ்த்தினர்.

கூத்தைப் பற்றிய பிற கல்வெட்டுகள்:

இராசாதிராசன் - கல்வெட்டுவழி வைகாசித் திங்கள் திருவாதிரை விழாவின் போது 6 முறை சாந்திக் கூத்து நடைபெற்றது. இதில் கலந்துகொண்ட இரண்டு நடன மாதர்களுக்கு நிலம் கொடையாகக் கொடுத்துள்ளதை அறிகிறோம். (புதுக்கோட்டை கல்வெட்டு 254/1914 - எண்: 139). சுந்தர பாண்டியனின் 10-ஆம் ஆட்சியாண்டில் அறிஞ்சை அரிட்டன் என்றவன் சாந்திக் கூத்து நிகழ்த்தினான். அதற்காக நிலம் கொடையாக அளிக்கப்பட்டது. (37. புதுக்கோட்டை - கல்வெட்டு எண்: 274). மூன்றாம் இராசராசனின் 19-ஆம் ஆட்சியாண்டில் திருவொற்றியூர்க் கோவில் கல்வெட்டில், இராசராச திருமண்டபத்தில் ஆவணித் திருவிழாவின் எட்டாம் நாள் அகமார்க்கம் அல்லது மெய்க்கூத்து நடத்தப்பெற்றது. (தெ.இ.சா.38, பா.211, 1912/520, 39.தெ.128/1912)

சாந்திக் குனிப்பன் என்று கூறப்படும் ஒருவகைக் கூத்தைப் பற்றிய செய்தியைச் சுந்தர பாண்டியனின் திருவொற்றியூர் கல்வெட்டு கூறுகிறது. (40.எ.ஆ.இ. 1913 பக்கம் 127, 212/1910 எண் 525). இரண்டாம் ஆதித்தன் காலத்தில் திருவிடைமருதூர் கல்வெட்டு - திருவெள்ளாற்றைச் சாக்கை என்பான் ஆரியக் கூத்து நிகழ்த்தினான் என்று உள்ளது. (41. தெ.இ.சா. பா.4. எண்: 718). இராசராசன் 9-ஆம் ஆட்சியாண்டில் திருவாவடுதுறையில் சாக்கை சாணி என்பான் ஆரியக் கூத்தைப் பற்றிய செய்தி வருகிறது. (42. ஆ.அ.இ. 1914). முதலாம் இராசேந்திரனின் 29-ஆம் ஆட்சியாண்டில் கீழப் பழுவூர்க் கல்வெட்டில் சாக்கைக் கூத்தைப் பற்றி வருகிறது. (44. ஆ.அ. 65/1914)

திருவாவடுதுறையில் ஆழ்வார்க் கோவிலில் குமரான் ஸ்ரீகண்டன் ஆறங்கம் ஆரியக் கூத்தினை நிகழ்த்தினான் என்று உள்ளது. (45. ஆ.அ. 120/1925)

இச் செய்திகள் கூத்துக்கள் பற்றி பிற கல்வெட்டுகளில் வரும் செய்திகளாகும். ஆனால், மிகத் தெளிவாகப் புதுவை மாநிலத்தைச் சேர்ந்த, திருநள்ளாற்றுக் கல்வெட்டு ஆரியக் கூத்தைப் பற்றி விரிவாகக் கூறியிருக்கிறது. (ஆ.அ. 437/1965-66). திருநள்ளாருடையார் கோவிலில் ஆண்டுதோறும் மாசி மாதம் மகத்து நாளன்றும், வைகாசி விசாகத்து நாளன்றும் ஸ்ரீகண்டன் அரங்கனின் மக்களுமாக ஆரியக் கூத்து நிகழ்த்தி வந்தனர். இதன் பொருட்டு இவர்கள்

அனுபவிப்பதற்காக ஆரியக் கூத்துக் காணி என்னும் பெயரில் 3 வேலி நிலங்கள் கொடையாக அளித்தனர். இவர்கள் தாம் ஆடிய இரண்டு நாள் கூத்துகளை ஐந்து ஐந்து அங்கங்களாகப் பிரித்து நிகழ்த்தினர். மேற்கூறிய விழா நாட்களில் ஆரியக் கூத்து நிகழ்த்தும் இக்கூட்டத்தார்க்கு விழாக் கொற்று என்னும் பெயரால் 20 கலம் நெல்லும், ஒப்பனை செய்து கொள்ள அங்கம் ஒன்றுக்கு நாழி அரிசியும் இவர்களுக்குக் கொடுக்கப் பெற்றதை அறிகிறோம்.

"ஆரியந் தமிழை யறியார் கூத்தின்
வீரிய மறியா வெறுமைக் கூத்தர்"

-என்று ஆரியக் கூத்து பற்றி குறிப்பு - தாள நூலில் காணப் பெறுவதாக அறிவனார் - பஞ்ச மரபு மூலமும் உரையும். என்னும் நூல் - வே.ரா.தெய்வ சிகாமணிக் கவுண்டர் - பதிப்பு - ஈரோடு - 1975. பக்கம்.6. அடிக்குறிப்பால் அறிகிறோம். சிலப்பதிகாரத்து அரங்கேற்றுக் காதையில் வரும் இருவகைக் கூத்து என்னும் தொடருக்கு அடியார்க்கு நல்லார் -ஆரியம் - தமிழ் - என்று விளக்கம் கூறியுள்ளார். (உ.வே.சா. பதிப்பு - 1950. பக்கம்.79). ஆரியர் ஆடிய கழைக்கூத்து பற்றிய குறிப்பு சங்க நூலில் காணப்பெறுகிறது. (குறுந்தொகை பாடல்: 7)

ஆரியர்கள் ஆடிய கூத்து ஆரியக் கூத்து என்றும், தமிழர்கள் ஆடிய கூத்து தமிழ்க்கூத்து என்றும் பொதுவகையான பொருள் கொண்டாலும் இவ் இரு திறத்தார் ஆடியக் கூத்துகளின் அடிப்படை வேறுபாடுகள் பற்றி இக்காலத்தில் அறிந்துகொள்ள இயலவில்லை. ஆனால், திருநள்ளாறு சிவன் கோவிலில் ஆண்டுதோறும் நடைபெற்ற ஆரியக்கூத்து கழைக்கூத்து அன்று. அது, கதையை மையமாகக் கொண்டு நாடக அமைப்பில் அமைந்த கூத்தாகும். ஆரியக் கூத்துக் காணி ஆரியக் கூத்து ஆடியோர்க்கு விடப்பெற்ற கொடை நிலமாகும்.

பச்சைப் பதிக நிறுத்தம் என்பதின் சிதைவாக இருக்கலாம். திருஞான சம்பந்தர் அனல் வாதம் செய்தபோது அவரால் நெருப்பில் இடப்பெற்ற பதிகம் "போகமார்த்த பூண் முலையாள்" என்று தொடங்கும் தேவாரத் திருப்பதிகமாகும்.

அது திருநள்ளாற்றில் அவ் அடியாரால் பாடப்பெற்ற பதிகமாகும். நெருப்பில் இடப்பெற்ற அப்பதிகம் வேகாது இருந்தமையின் அப்பதிகம் பச்சைப் பதிகம் என்று பெயர்பெற்றது.

கல்வெட்டில் வருகின்ற பச்சைப் பதி என்பது அப்பதிகத்தையே குறிப்பதாக இருத்தல் வேண்டும். திருநள்ளாற்றுக்கு அண்மையிலுள்ள வேறுசில கல்வெட்டுகளில் காணப்பெறும் பச்சைப் பதியஞ் சோறுடையான், பச்சைப் பதிய நல்லூர் முதலான பெயர்கள் இக்கருத்தை வலியுறுத்துவனவாக உள்ளன. திருநள்ளாற்றுக் கோயிலில் நிகழ்த்தப் பெற்றதையும், மதுரையில் நடைபெற்ற அனல் வாதத்தின் போது அப்பதிகம் நெருப்பில் வேகாது நின்றதையும் மையமாகக் கொண்டு ஐந்து ஐந்து அங்கங்களாகப் பிரித்து நிகழ்த்தப் பெற்றிருத்தல் வேண்டும்.

**அளவுகோல்:**

திருவாண்டார் கோவில் அளவுகோல். இக் கோவிலில் அளவுகோல் ஒன்று மிக அழகாக வெட்டப்பட்டுள்ளது. வடக்குத் திருச்சுற்றில் முப்பட்டைக் குமுதப்படைஇய்ல் அளவுகோல் வெட்டப்பெற்றுள்ளது. அக்காலத்தில் விளை

நிலங்களைச் சீரிய முறையில் அளந்து வரியை விதித்துள்ளனர் என்பதை இதனால் அறிகிறோம். முதலாம் இராசராசனின் பதினான்காம் ஆட்சியாண்டில் பொ.ஆ.999 இல் குரவன் உலகளந்தான் இராசமாராயன் என்பவரின் தலைமையில் சோழநாடு முழுவதும் இருக்கும் நிலங்களை அளந்தனர். இரண்டாம் முறையாக முதலாம் குலோத்துங்க சோழனின் பதினாறாவது ஆட்சியாண்டில் பொ.ஆ.1086 -இல் திருவேகம்ப உடையானான உலகளந்தானான திருவரங்கத் தேவன் என்பவரின் தலைமையில் அளக்கப் பெற்றது. நில அளவுகள் பல்வேறு வகையான அளவு வகைகள் இருந்துள்ளன. இன்று 100 குழிகளைக் கொண்டது ஒருமா என்று இருந்து வருகிறது. கல்வெட்டுகளில் 250 குழிகள் கொண்டது ஒருமா என்று குறிக்கின்றன.

புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள குன்றாண்டார் கோவில் கல்வெட்டில் ஒன்பதடிக் கோலால் இருநூற்று ஐம்பத்தாறு குழிகள் கொண்டது ஒரு மாவாகக் கணக்கிட்டனர். இது மூன்றாம் குலோத்துங்கனின் 39-ஆம் ஆட்சியாண்டாகிய பொ.ஆ.1217 -இல் கணக்கிடப்பெற்றது. பொ.ஆ. 1340-இல் சடையவர்மன் வீரபாண்டியனின் 45-வது ஆட்சியாண்டில் திருமய்யம் ஊரில் வாளால் வழிதிறந்தான் குளிகை, இரு நூற்றுக்கு விற்ற பாடி காவல் பன்னீரடிக் கோலால் இருநூற்றைம்பத்தாறு குழிகள் கொண்டது ஒரு மா என்ற அளவில் அளந்தனர். திருவண்ணாமலையில் கோப்பெருஞ்சிங்கன் காலக் கல்வெட்டில் விற்றுக் கொடுத்த பதினான்கடிக் கோலால் குழி பதின்மூன்று எனக் குறிக்கப் பெற்றிருக்கிறது. முதலாம் பராந்தகச் சோழனின் இலால்குடி கல்வெட்டில் எண்பிடிக் கோலால் ஒரு கோல் ஆழமும், நாற்கோல் நீளமும், நாற்கோல் அகலமும் ஒரு குழி. அக்குழி 200 கொண்டது ஒரு மா எனக் கணக்கிட்டனர். ஆலங்குடியில் முதலாம் இராசராசன் காலத்துக் கல்வெட்டில் பதினாறடிக் கோலால் நூற்றிருபத்தெட்டு குழி கொண்டது ஒரு மா என்ற அளவு குறிக்கப்பெற்றது. ஆனால், பதினாறடிக் கோலால் 256 குழி கொண்டது ஒரு மா என்ற அளவு முறை பல கல்வெட்டுகளில் வருகின்றன. பொ.ஆ. 1276 -இல் பதினெட்டடியுள்ள கோலால் பதினாறுக்குப் பதினாறு கொண்டது ஒரு மாவாகவும் கணக்கிட்டனர். திருக்கோவலூர் தெற்கு மாட வீதியிலிருந்து புலவர் கண்ணன் வீட்டு வழியாகச் சென்றால் கழனிவழி – கழனியில் நரிக்கல்லுப் பாறையில் ஓர் அளவுகோல் வெட்டப்பெற்றுள்ளது. அளவுகோலின் ஒரு பக்கம் சங்கும் மறுபக்கம் சக்கரத் தாழ்வாரும் வெட்டப் பெற்றுள்ளன. கோலின் நீளம் 26 அடி 11 1/4 அங்குலம், 8.21 மீட்டர் கோலின் மேலும், கீழும் உள்ள கல்வெட்டில் பத்துரண் அடிக்கோலால் என்ற பகுதி காணப்பெறுகிறது. இதனால், பல்வேறு காலங்களில் பல்வேறு அளவு முறைகள் பின்பற்றப் பெற்றன.

நிலத்தின் பரப்பு தெளிவாகக் கணக்கிடக் குழிகள் கணக்கிட்டனர். தென்பாண்டி நாட்டில் சீவல்லபப் பாண்டியன் ஆட்சியில் வழக்கிலிருந்த நிலம் அளக்கும் கோலுக்கு அருள்நிதி அளவுகோல் என்று பெயரிட்டிருந்தனர். நிலம் 14 அடிக் கோலால் அளக்கப்பெறும் வேலி, மா - என்பன பெரு வழக்கு, குழி அளவும் வருவதுண்டு. 20 மா ஒரு வேலியாகும். முழம், சாண் எனபன பெருவழக்கு (தஞ்சை "மராட்டிய மன்னர் கால, அரசியலும் சமுதாய வாழ்க்கையும்" பக்கம் 166)

இனி, நம் திருவாண்டார் கோவில் அளவுகோல் 'இராசவிபாடன்' கோல்

என்கிறது. அதில் அன்னமரய்யா என்பவர் கையொப்பமிட்டுள்ளார். முதலாம் இராசராச சோழனின் ஆட்சியில் கி.பி. 990 -இல் நம் புதுச்சேரி பகுதிகளில், கோவிலுக்குத் தேவதானமாக வழங்கப்பெற்ற நிலத்தின் எல்லைகளும், அளவுகளும் மீளவும் உறுதி செய்யப்பெற்றது. அக்காலத்தில் இவ்அளவுகோல் பயன்படுத்தியிருக்கலாம் என்று கருதலாம்.

**கலப்புச் சாதியினர்:**

பாரசவர்: (கல்வெட்டு எண்: 126) முதலாம் குலோத்துங்கன் காலம் கி.பி.1099. பிராமண ஆடவர்க்கும், சூத்திரப் பெண்டிற்கும் பிறந்தவர் பாரசவர் எனப்பட்டனர். இவர்க்கு 'பொரசவக் காணி' அளிக்கப்பட்டது. இக்காணியை உள்ளூர்க் குயவர், வலிமையால் வலிந்து அந்நிலத்தைத் தாங்களே அனுபவித்து வந்தனர். இதனைப் பாரசவக் கணத்தார் (கலப்பினத்தார்) அரசனிடம் முறையிட்டனர். அரசனும் முறையன்று என்று திருவாய் மொழிந்தருளினன். இதனை, கேய விநோதப் பல்லவரையர் எனும் திருமந்திர ஓலை எழுதுவோர் எழுத்தின்வழி சபைக்கு அறிவித்தார். அதனைப் பார்த்த மகாசபையினர் அரசனின் ஆணைப்படிப் பாரசவரே பாரசவக் காணியைப் பெற்று அனுபவிப்பார்கள் என்று கல்லில் வெட்டுவித்தனர். இதனால், இரு மரபுகளுக்கிடையே நிகழ்ந்த சிக்கலை நீக்கி நீதி வழங்கிய செயலைக் காணமுடிகிறது.

ஆயோகவர் - பிராமணப் பெண்டிர்க்கும் வைசிய ஆடவர்க்கும் பிறந்தவர் (திரிபுவனை - விக்கிரம சோழனின் கல்வெட்டு எண் : 159). செங்காட்டுப் புத்தூரான உத்தம சோழப் பட்டணத்தார், உம்பர் பாடியான உய்யக் கொண்ட, சோழ பட்டணத்தார், வேளார்க்காணியான இராஜேந்திர சோழபுரத்தார், கருப்பூரான விக்கிரம சோழ புரத்தார் ஆகிய நான்கு ஊரவரும்; உபநயனம் (பூணூல் அணிதல்) போன்ற சடங்குகளுக்கும், கோயில் கொடியேற்று விழாவிற்கும், இறைவனுக்கு அணிவிக்கும் ஆடைக்கும், திருப்பரிச் சட்டங்களுக்கும் அரசர் அணியும் ஆடைகளுக்கும் துணி நெய்து தரவேண்டும். அதற்காக அவர்களுக்குக் கொடையாக நிலங்களும், பத்து மனைகளும் கொடுத்துள்ளனர். ஆயோகவர், வைகாசித் திருநாளுக்கு நான்கு திருப்பரிச் சட்டமும், திருயுத்திரியம் இரண்டும், திருமுடிச் சேலை இரண்டும், ஐப்பசி, சித்திரை விஷுக்களுக்கும், உத்தராயணம், தட்சிணாயனம் ஆகிய இரண்டு காலங்களுக்கும் சேர்த்து - நான்கும் பரிச் சட்டங்களுக்கும் திருக்கொடிக்கும், திரைச் சீலைக்கும், திருவிதானத்திற்கும் ஆடை நெய்து தரவேண்டும் என்று ஆணையிட்டனர். மேற்கூறியனவைகளைச் செய்யாவிடின் திருவைணவர்கள் இவர்களுக்குத் தண்டனை அளித்து சிறையில் இடச் சம்மதித்துக் கல்வெட்டிக் கொடுத்தனர். மேற்கண்ட கலப்பினத்தார் நெசவுத் தொழில் செய்து வந்ததோடு, இவர்கள் உற்பத்தி செய்த துணிகளைக் கோவிலுக்கு அளிக்கும் உரிமையும் பெற்றிருந்தனர்.

இது போன்றே, தஞ்சை மாவட்டம் நன்னிலம் வட்டத்தைச் சேர்ந்த திருக்கண்ணபுரத்தில் உள்ள விக்கிரம சோழன் கல்வெட்டிலும், ஐந்து ஊர்களைச் சேர்ந்த வணிகர்கள் நான்கு ஆயோகவக் குடும்பங்களை நிரந்தரமாகத் திருக்கண்ணபுரத்தில் தங்கவைத்து அவர்கள் சித்திரை, ஐப்பசி மாதங்களில் நிகழும்

விழாக் காலங்களில் கோவிலுக்குத் துணிகளை நெய்து வழங்கியதைக் கல்வெட்டு அறிவிக்கிறது.

(பாகூர் - மூன்றாம் கிருஷ்ணன் - கல்வெட்டு எண் : 4)

பொ.ஆ. 961 -இல் மன்றாடிகள் என்று அழைக்கப்பெறும் இடையர் இனத்தாரிடையே வழக்கத்திலிருந்த 'கட்டிலேறுதல்' என்ற வழக்கம் பற்றிக் குறிப்பிடுகிறது. வேசாலிப்பட்டி வடகரை வாகூர் நாட்டு மன்றாடிகள் - வாகூர் ஸ்ரீ மூலட்டானத்துப் பெருமானுக்குச் செய்த அறச்செயல். கட்டிலேறும்போது ஓர் ஆடு கொடுத்துக் கட்டிலேறுவதாகவும், புறநாட்டினின்று வந்து இந்நாட்டில் கட்டிலேறும் மன்றாடி வசம் ஓர் ஆடு கொடுப்பதாகவும், அவ்வாறு கொடுக்காவிடின் கணப் பெருமக்களும், தேவரடியாரும் இரண்டு ஆடு பிடித்துக் கொள்வதாகவும் சம்மதித்து உறுதியளித்தனர். இவ்வறத்தை நிறுத்திக் கொடுப்பதாக, இந்நாட்டில் மதகு செய்யும் மதகர் உறுதியளித்தனர். கோவை மாவட்டத்தில் பெருமளவு வாழும் கொங்கு வேளாளரிடையே காணப்பெறும் திருமணச் சடங்கு, இத்தொடரின் உண்மைப் பொருளையறியத் துணைபுரிகின்றது. கொங்குவேளிர் இயற்றிய பெருங்கதையில் (பொ.ஆ. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சமணக்காப்பியம்) காப்பியத் தலைவன் உதயணன் - வாசவதத்தை ஆகியோரின் திருமணத்தைச் சொல்லும்போது 'கட்டிலேற்றியது' பற்றிய குறிப்புள்ளது சீவக சிந்தாமணியிலும் - திருத்தக்க தேவர் - குறிப்பிட்டுள்ளார் (பொ.ஆ. 10 -ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த காப்பியம்) சீவகன் இலக்கணை ஆகியோர் திருமணத்தின்போது சீவகன் பணப் பெண்ணைத் தன் இடது கையில் பிடித்துக் கொண்டு கட்டிலேறினான் என்று இச்சடங்கு விளக்கப்பட்டுள்ளது. உ.வே.சா. கட்டில் என்பதற்குச் சாந்திக் கூத்தைக் கண்டுவிட்டு ஆரத்தி எடுத்து முடிந்த நிலையில் அருந்ததியைப் பார்க்கும் சடங்கிற்குச் செல்லும்வரை மணமக்கள் அமர்ந்திருக்கும் 'கட்டில்' என்று பொருள் கூறியுள்ளார். இவ்வாறு இவ்விரு இலக்கியங்களும் திருமணத்தின் போது மணமக்களைக் கட்டிலில் அமர்த்தும் சடங்கையே குறிக்கின்றன.

கல்வெட்டுச் சான்றாக - கரூர், ஜலசயனப் பெருமாள் கோவிலில் உள்ள முதலாம் குலோத்துங்கன் காலத்துக் கல்வெட்டில் திருவாய்ப்பாடி மன்றாடிகள் தங்கள் மக்கள் திருமணத்தின் போது பெருமாளுக்கு பெண் - ஒரு ஆடு கொடுக்கும் பழக்கம் - 'எங்கள் கல்யாணத்து ஒரு ஆண் கட்டிலேறுமிடத்தும் ஒரு பெண் வாடகைப் படுத்துமிடத்தும் எங்கள் மக்கள் தலைமளி செய்யுமிடத்தும்' எனக் குறிப்பிடுகிறது. தலைமளி என்ற சொல்லை தலைமழி என்று இருத்தல் வேண்டும்.

திருமணமாகி ஆறு மாதம் கழித்துப் பின்னர் மணமக்களுக்கு மழித்தல் சடங்கு செய்வது பற்றிய செய்தி பெருங்கதைக் குறிப்பிடுகிறது. இச்சடங்கில் இரு புருவங்களுக்கிடையே காணப்படும் முடியை நாவிதரால் நீக்குவர் எனக் காப்பியம் விளக்குகிறது என்று பேராசிரியர் - கோ.விஜயவேணுகோபால் அவர்கள் எழுதியுள்ளார்கள். என்னும் எல்லோருக்கும் இரு புருவங்களுக்கிடையே முடி இருக்குமா? என்ற ஐயம் எழுகிறது.

**கல்வெட்டில் நாணயம்:**

நாணயங்கள் சற்றேறக்குறைய 2,700 ஆண்டுகளுக்கு முன்பே உருவாயின.

பொருள்களின் மதிப்பை அளவிடும் கருவியாகப் பயன்பட்டன.

அவை, வரலாற்று மைல் கற்களாகவும் பண்பாட்டு வளர்ச்சியின் சின்னங்களாகவும் இன்று திகழ்கின்றன. வரலாற்றோடு அக்கால மக்களின் கலை நுட்பத்தையும் தெளிவாக அறிவிக்கிறது. திருநள்ளாறு சிவன் கோவிலில் சடையவர்மன் குலசேகர பாண்டியனால் (இரண்டாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன்) - பொ.ஆ. 1336 -இல் வரையப்பெற்றக் கல்வெட்டொன்று ‘வாளால் வழிதிறந்தான் பணம்’ என்னும் பெயருடைய பணம் குறிக்கப்படுகிறது. வாளால் வழிதிறந்தான் என்பது முதலாம் சடையவர்மன் பராக்கிரம பாண்டியனின் சிறப்புப் பெயராகும். (குடந்தை - என். சேதுராமன். 1978. பக்கங்கள். 112, 129, 154, 236) “கமுகும் பட்டபாழ் மணலிருக்கும் பிரமானபடி வாளால் வழி திறந்தான் பணம் இருபத்து ஐயாயிரம்” என்று கல்வெட்டு குறிப்பிடுகிறது. தென்னாட்டின் மீது படையெடுத்த டெல்லி சுல்தான் முபாரக் ஷாவின் படைத் தலைவனான குசுருக்கானை எதிர்த்துப் போரிட்டமையால்; இம்மன்னன் இச்சிறப்புப் பெயரைப் பெற்றான். இவன் ஆட்சிக்காலம் கி.பி.1315 – 1333 வரை என்பர். ஆனால் பொ.ஆ.1319 ஆண்டுகளுக்குப் பிறகுதான் பாண்டியர் - கல்வெட்டுகளில் ‘வாளால் வழிதிறந்தான்’ என்னும் பணம் பற்றிய செய்தி காணப்பெறுகிறது.

காரைக்கால் பகுதியான திருநள்ளாற்றுக் கல்வெட்டில் “வாளால் வழிதிறந்தான்” பணம் குறிக்கப்பெறுதலின் - இக் கல்வெட்டு குறிப்பிடும் அரசன் சடையவர்மன் குலசேகர பாண்டியனே ஆவான். இவன் மாறவர்மன் அன்னும் பட்டத்தையும் புனைந்து கொண்டான் என்பது குறிப்பிடத்தக்கது. மற்றொரு திருநள்ளாறு கல்வெட்டில் விருப்பண உடையார் காலத்தில் பொ.ஆ. 20.10.1391 -இல் கல்வெட்டு குறிப்பிடும் பணம் ஆகுவராமன் பணம். பாண்டிய மன்னன் சடையவர்மன் ஸ்ரீவல்லபனுக்கு ஆகவராமன், வாள் வீசிக் காட்டினான் முதலான சிறப்புப் பெயர்கள் உண்டு. கல்வெட்டில் ஆகுவராமன் என்று உள்ளது. அச்சொல் ஆகவராமன் என்று இருத்தல் வேண்டும். கல்வெட்டில் 80 என்னும் இலக்கம் அ0என்று வரையப்பெற்றுள்ளது.

கல்வெட்டில் அய என்று இருக்கவேண்டிய இலக்கம் ‘அ0’ என்று குறித்துள்ளனர். எனவே, 14-ஆம் நூற்றாண்டளவில் சுழியம் என்னும் வரிவடிவம் அக்கால மக்களிடையே வழக்கத்தில் இருந்தமையைக் கல்வெட்டால் அறிகிறோம்.

**சப்த விடங்கத் தலங்கள்:**

திருவாரூர் - வீதிவிடங்கர் - மரகத லிங்கம் -அஜா நடனம், திருநள்ளாறு - நாகவிடங்கர் - மரகதலிங்கம் - உன்மத்த நடனம; திருநாகைக் காரோணம் - சுந்தரவிடங்கர் கோமேதக தரங்க நடனம; திருக்கோளிலி (திருக்குவளை) - அவனிவிடங்கர் - மரகதலிங்கம் பிருங்க நடனம; திருவாய்மூர் - நீலவிடங்கர். ஸ்படிகலிங்கம் - கமல நடனம்; திருமறைக்காடு - புவனிவிடங்கர் - மரகத லிங்கம் - அம்ச நடனம்; இவ்வாறு இத்தலங்களில் சோமஸ்கந்தரைத் தியாகராஜராக வழிபடுகின்றனர்.

**சோமாஸ்கந்தர் :**

அறுபத்து நான்கு சிவமூர்த்தங்களில் சுகாசனர் முதலான மூர்த்தியாக 11-

ஆவது சோமஸ்கந்தர் விளங்குகிறார். உமையம்மை பிரியாமல் உடனுறைவதாலும் சோமன் எனப்பட்டார். சிவாலயங்களில் விளங்கும் மகேஸ்வர் திருமேனிகளில் மிகச் சிறப்புடையது. சோமாஸ்கந்தர் மூர்த்தியாகும். இத்திருமேனியினை சிலை உருவிலும், சுதை வடிவிலும், பஞ்சலோகச் சிலையிலும் மரத்திலும் (தேர்ச்சிற்பம்) ஓவியத்திலும் காணலாம். இவ்வுருவம் சச்சிதானந்தம் உருவமாகும். சோமாஸ்கந்தர் மேற்கு ஆவரணத்தில் விளங்கும் மிகப் பழமையான சிவாலயத்தில் உண்ணாழியின் (கருவறை) ஒட்டினாற் போன்று சிலை உருவமாகவோ அல்லது சிற்பமாகவோ விளங்கும். இத்திருமேனிக்கு முன் சிவலிங்கம் சிலை விளங்கும். இத்திருமேனியானது சிவன் -முருகன் -உமை இம்மூவரும் தனித்தனி பத்ம பீடத்தில் ஒருசேர விளங்கும் சிலை சிவாலயங்கள் சோமாஸ்கந்தர் வடிவமைப்பில் நிர்மானிக்கப் பெற்றுள்ளன. மேலும், மாமல்லபுரம் இராமானுச மண்டபக் கருவறையின் பின் சுவரிலும், காஞ்சி கைலாசநாதர் ஆலயத்திலும், பனைமலை மலைக் கோவிலிலும் சோமாஸ்கந்தர் திருமேனி விளங்குவதால் தொன்மை சிறப்பு தெரிய வருகிறது. (சோமாஸ்கந்தர் - திருவாவடுதுறை ஆதீனம் வெளியீடு - 407).

இத்திருமேனியானது, ஆண்டுப் பெருவிழாக் காலங்களில் பிரதானமாகப் போற்றப்படுகிறது. இந்தத் திருமேனியினைத் தொன்றுதொட்டுத் தியாகராஜராகப் போற்றி வழிபடப்படுகிறது. இத்தகு தியாகராஜர் தலங்களைச் சப்த விடங்கத் தலங்கள் எனக் கூறுவர். திருநள்ளாற்றில் தியாகராஜரைத் தூக்குவது ஸ்தானிகர் (தானத்தார்) தனிப்பட்ட உரிமையாகும். தானத்தார் வாரைகளை மஞ்சத்துடன் சேர்த்துக் கயிறு போட்டுச் சாதாரண முறையில் கட்டுவது கிடையாது. வாரைகளையும் பிள்ளைத் தண்டுகளையும் முன் கூட்டியே தமக்கே உரிய சிறப்பான முறையில் தானத்தார்கள் தயாரித்துக் கட்டிவைத்து, அதை அறையில் பூட்டி வைப்பர். அவ்வறையின் சாவியை தானத்தார்களே வைத்திருப்பர்.தானத்தார்கள் தியாகராசர் சந்நிதியின் கதவுகளை மூடிவிட்டு வாரைகள் தயார் செய்து வைப்பார்கள். சாமியை வாரையைப் பிடித்துத் தூக்குவது கிடையாது. முன்பக்கத்துப் பிள்ளைத் தண்டை 6 பேர் தோளில் தூக்கிக் கொள்வர் கைகளை வாரையின் மேல்வைத்து அணைத்துக் கொள்வார்கள். இதேபோல் பின் பக்கத்துப் பிள்ளைத் தண்டையும் 6 பேர் தோளில் தூக்கிவைத்துக் கொள்வார்கள். இப்போது மேற்கூறிய 12 பேர்களின் தோளில் முழு தியாகராஜ மஞ்சமும் அமர்ந்திருக்கும். 12 பேர் பிள்ளைத் தண்டுகளைத் தூக்கியதும் சாமி உன்மத்த நடன ஆட்டம் ஆடத் தொடங்கும். ஆடுபவர்களின் தோளில் இருக்கும் இறைவன் ஆடுவது போலவே தோற்றமளிக்கும். இயற்கையாகவே ஆடுவதுபோன்று இருக்கும் உன்மத்த நடனம் ஆடும்போது தூக்குபவர்களின் கால்களும் அதற்குத் தக்கவாறு மாறிமாறி நடனமாடும். வாரையின் முன்புறம் ஒருவர், பின்புறம் ஒருவர் வாரையின் மேலும் கீழுமாகப் பிடித்து ஆடுவதற்குத் துணைபுரிவர். முன் கோடி ஒருவரும் பின் கோடி ஒருவரும் குஞ்சம் பிடித்திருப்பர். சாமி, வலமும் இடமும் கீழும் பூமி வரையில் சாய்ந்து உன்மத்த நடனம் ஆடும். இதன் முறையை நன்கு அறிந்திருப்பர் தானத்தார்கள். தேரில் இருக்கும் தியாகராஜாவைக் காவல் புரிய வேண்டிய வேலையும் தானத்தார்களுடையதே. தேர் ஊரைச் சுற்றி வந்ததும், தியாகராசரை உன்மத்த ஆட்டத்துடன் தானத்தார்கள், கோவில் திருச்சுற்றில் இருக்கும்

எண்ணெய்க்கா மண்டபத்திற்குக் கொண்டு வருவார்கள். உன்மத்த ஆட்டத்தின்போது பெரியதாளம், தண்டை, நமரி முதலிய வாத்தியங்கள் (எக்காள வகையறா - 5 வகை வாத்தியங்கள்) இசைப்பர். தானத்தார்களின் ஆண் வாரிசுக்கே தியாகராாசரைத் தூக்கும் உரிமை உண்டு. பெண்ணைக் கட்டிக் கொண்ட மாப்பிள்ளைகளுக்கு உரிமை இல்லை. தானத்தார்களின் வீட்டுத் திருமணத்திற்கு செலவுக்காக கோவிலில் ரூ.5 நன்கொடை கொடுப்பர். தானத்தார்கள் வீட்டில் துக்க நிகழ்ச்சி நிகழ்ந்தால் அடக்கம் ஆகும் வரை கோவில் மூடி இருக்கும்.

மேலும், பிரேதத்திற்குச் சந்தனக் கட்டை வாய்க்கரிசி, தேங்காய், வெற்றிலைப் பாக்கு இவற்றைப் பரிவட்டத்தில் கட்டி ஓர் இடத்தில் வைத்து விடுவர்.

நேர்காணல் :திருவாளர் முனைவர் எஸ்.எஸ்.முருகேசம் பிள்ளை அவர்கள்.

தானத்தார் திருவாளர் கி.மா. சிவபுண்ணியம். வயது 80, தெற்கு வீதி, திருவாளர் ந.சா.சிவானந்தம். வயது 79, தலையாரித்தெரு, திருநள்ளாறு, திருவாளர். ஜி. இராமகிருஷ்ண அய்யர், திருநள்ளாறு, குருமூர்த்தி அய்யர் (சர்க்கரை), திருநள்ளாறு.

**உப்பு அளங்களும் உப்பு உற்பத்தியும் :**

பண்டைய நாளிலிருந்தே மனிதர் உணவில் உப்பு இன்றியமையாத ஒரு பகுதியாக இருந்து வருகிறது. ஆதிவாசிகள் பலர் இக்காலத்திலும் உப்பில்லாத உணவை உட்கொள்கின்றனர். பாலைப் பருகுவோரும், பச்சையாகவோ, தீயிற் சுட்டோ இறைச்சியை மட்டும் உண்போரும் உப்பைத் தேவையற்றதாகக் கருதினர்.

மத்திய ஆப்பிரிக்காவையொத்த சில பகுதிகளில் உப்பு கிடைப்பது மிக அருமையாதலால் அங்கு இதைச் செல்வர் மட்டும் உணவிற்குப் பயன்படுத்திகின்றனர். உழவு தோன்றியது முதல் உப்பை உணவில் சேர்க்கும் முறையும் தோன்றியது. இது பழங்காலத்தில் மதக் கோட்பாடுகளிலும் சடங்குகளிலும் முதன்மை பெற்றிருந்தது. உப்பு, தூய்மையையும், நட்பையும், நன்றியையும் குறிக்கும் பொருளாகப் பல நாடுகளிலில் வழங்குவதிலிருந்தே இதற்குப் பழங்கால மக்கள் கொடுத்த முதன்மை விளங்கும். பண்டைய நாளில் வாணிகத்திலும் உப்பு மிக இன்றியமையாததாக விளங்கியது. பல வணிகப் பாதைகள் உப்பு வாணிகத்திற்காகவே ஏற்பட்டவையாகும். ஆப்பிரிக்க நாடுகளிலும், திபெத்து முதலிய மத்தியப் பகுதிகளிலும் பணத்திற்குப் பதிலாக பண்டமாற்று முறையில் பயன்படுகின்றது. மீன்களை உப்பிட்டுக் காக்கின்றனர். பனிக்கட்டியுடன் கலந்து தாழ்ந்த வெப்பநிலைகளைப் பெறவும், உணவு கெடாமல் காக்கவும், தோல்கள் அழுகாமல் காக்கவும், வயல்களுக்கு உரமாகவும், உலோக வேலைகளிலும், சிமெண்டுத் தொழிலிலும் உப்பு பெரும்பயன் அளிக்கிறது. அக்காலத்தில் உப்பு உற்பத்தி செய்வதற்கு உரிமம் வழங்கிப் பெற்றமையைக் கல்வெட்டு கூறுகிறது. குத்தகைக்கு விடப்பெற்றது என்பதையும் தெரிவிக்கிறது.

இவ்வாறு குத்தகைக்கு விடப்பட்டவை தவிர்த்து மற்றைய கோவிலுக்குச் சொந்தமான நிலங்களின் ஒரு பகுதி வாய்க்கால் வழியாக உப்பு நீர் கொண்டுவரப் பெற்று உப்பளங்களாக மாற்றப்பெற்றன. அவ்வாறு உற்பத்தி செய்யப் பெற்ற உப்பிற்கு வரிவிலக்கு அளித்தனர். இவற்றைப் பல பகுதிகளிலும் எடுத்துச் சென்று

விற்றனர். விற்பனையால் பெறப்பட்ட அனைத்துப் பணமும் கோவில் பணிகளுக்கே செலவு செய்யப்பெற்றது. திருநள்ளாற்றில் இரண்டு கல்வெட்டுகள் உப்பு உற்பத்திக்கு விதிக்கப்பெற்ற வரியைப் பற்றித் தெரிவிக்கின்றன. சில நேரங்களில் அரசர் வரிதவிர்ப்பு செய்து வந்தனர்.

காரைக்கால் உப்பளத்தில் இக் கோவிலுக்குச் சொந்தமாக இருந்த தரிசு நிலத்தின் ஒரு துண்டத்தையும் ஒரு கேணியையும் திருத்தி, உப்பு விளைவித்து, அவ்வுப்பைப் புறநாட்டில் விற்று அதனால் வரும் வருவாயைக் கொண்டு மேற்கூறிய அறச் செயல்கள் நிகழ்த்தப் பெற வேண்டுமென்று கோவில் தானத்தார்க்கு ஆணையிடப் பெற்றது. மற்றொரு கல்வெட்டு மேற்கூறிய பாண்டியனின் 11-ஆம் ஆட்சியாண்டில் பொ.ஆ. 1328 -இல் பதியப் பெற்றுள்ளது. அபிமுத்தீஸ்வரத்து நாயனார்க்குச் சொந்தமான காரைக்கால் உப்பளத்தில் ஒருவாய்க்காலில் வரும் தண்ணீரால் உப்பு விளைவித்து, அவ்வுப்பைப் புறநாட்டில் விற்பதால் வரும் வருவாயைக் கொண்டு இந்நாயனார்க்குத் திருப்பணி நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்யப் பெற்றமையைக் குறிக்கிறது. ஆங்கிலேயர் பிரெஞ்சுக்காரருடன் செய்துகொண்ட ஒப்பந்தம். பொ.ஆ. 1818-ஆம் ஆண்டு. பிரெஞ்சுக்காரர்கள் காரைக்கால் பகுதியில் உப்பு உற்பத்தி செய்வதை நிறுத்தி, ஆங்கிலேயர் மட்டுமே உப்பு உற்பத்தி செய்யும் தனித்த அதிகாரத்தைப் பெற்றனர். அந்த அதிகாரத்தைப் பெற்றதற்காக, ஆங்கிலேயர்கள் 4,000 காசுகளை இழப்பீட்டுத் தொகையாகத் தருவதுடன், புதுவையில் வாழ்ந்த பிரெஞ்சுக் காரர்களுக்குத் தேவையான உப்பையும் கொடுத்தனர்.

**கடிதம் என்ற சொல்லாட்சி:**

திருக்காமீசுரர் பங்குனித் திருநாள் திருவுலாச் செய்து கடலிலே தீர்த்தமாடித் தீர்த்தப் பிரசாதிக்கும் விழாவுக்காக அரசன் நிலம் வழங்கிய செய்தியைக் “கடிதத்திலும்” எழுதுவித்து எனக் கல்வெட்டு வாசகம் வருகிறது. எனவே கடிதம் என்ற சொல்லாட்சி பொ.ஆ. 1379 -இல் தமிழில் வந்தமையை இதன்வழி அறிகிறோம்.

# 119. செய்தி திரட்டு - புதிய கண்டுபிடிப்புகள்

## 119:1 காட்டுமயிலூர் கொற்றவை



கடலூர் மாவட்டம் வேப்பூர் வட்டம் காட்டுமயிலூர் என்ற கிராமத்தில் செல்லியம்மன் கோயிலில் உள்ள கருவறையில் வழிபாட்டில் ஒரு கொற்றவை சிற்பம் உள்ளது .இதன் காலம் 8ஆம் நூற்றாண்டாக கருதலாம்.ஒரு பலகைக்கல்லில் புடைப்புச் சிற்பமாக வெட்டப்பட் - டுள்ளது. இதன் உயரம் 132 செ.மீ. அகலம் 73 செ.மீ.கரண்ட மகுடம், சவடி,சரபளி உள்ளது.மார்புக்கச்சை பட்டையுடன் காட்டப்பட்டுள்ளது. காதுகளில் பத்ரகுண்டலம், இடுப்பில் அரையாடை முடிச்சுடன் உள்ளது.

எட்டு கரங்களில் ஆறு கைகளில் சங்கு, பிரயோகசக்ரம், வாள், வில்,மணி, கேடயம் காட்டப்பட்டுள்ளது. ஒருகரம் அபயமுத்திரை,மறுகரம் கடியஸ்த நிலையிலும் உள்ளது.கீழ் வலது பக்கம் தன் தலையை தானே அரிந்து நவகண்டம் கொடுத்துக்கொள்ளும் வீரனும், மறுபுறம் வணங்கிய நிலையில் ஒரு அடியாரும் உள்ளனர்.நவகண்ட வீரனுக்கு மேற்புறம் மானும்,அடியாருக்கு மேற்புறம் சிங்கமும் காட்டப்பட்டுள்ளது. எருமை தலையின் மீது நின்ற நிலையில் கொற்றவை காட்சியளிக்கிறார்..

**சி.வீரராகவன்,விழுப்புரம்**
**பொன்.வெங்கடேசன்,ஆறகழூர்**

## 119:2 பல்லவர் கால விஷ்ணு துர்க்கை

காஞ்சிபுரம் மாவட்டம், மதுராந்தகம் வட்டம், செட்டிமேடு பாத்தூர் என்னும் ஊரில் சாலை ஓரத்தில் மரத்தடியில் கிழக்கு நோக்கியபடி எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த பல்லவர் கால துர்க்கை சிற்பம் காணப்படுகிறது. புடைப்பாக செதுக்கப்பட்டிருக்கும் இச்சிற்பத்தின் உயரம் 100 செ.மீ, அகலம் 85 செ.மீ அளவில் நின்ற நிலையில் எட்டு கைகளுடன் காணப்படுகின்றது. வலது முன் கையில் பின்கைகளில் அம்பு, நீண்டவாள் மற்றும் சங்கும் உள்ளன.



இடது முன் கைவயிருக்கு முன்பாக வைத்தவாறும், பின்கைகளில் வில், கேடயம் காலடியில் வலதுபுறம் ஒரு பக்தன் வணங்கிய நிலையிலும் இடதுபுறம் வீரன் ஒருவன் தனது இடது கையால் தலைகொண்டையை பிடித்துகொண்டு வலது கையில் உள்ள வாளால்தன் தலையை அரிந்து பலிகொடுப்பதைப் போன்று காணப்படுகிறது.

**இரமேஷ் மாசேதுங், மதுரை.**

## 119:3 பண்ருட்டிவட்டாரசிற்பங்கள்

### சமணசிற்பங்கள்

### 119:3:1. எனதிரிமங்கலம்



கடலூர் மாவட்டம், பண்ருட்டிவட்டம், பண்ருட்டி வடமேற்கே சுமார் 17 கி.மீ. தொலைவில் எனதிரிமங்கலம் கிராமத்தில் உள்ள ஐயனார் கோவிலின் உள்ளே ஒரு சமண தீர்த்தங்கரர் சிற்பம் நிறுத்தி வைக்கப்பட்டு ஐயனார் என்ற பெயரில் வணங்கப்பட்டு வருகிறது. தீர்த்தங்கரர் முக்குடையின் கீழ் அமர்ந்த வண்ணம் தியான நிலையில் காணப்படுகிறார். இத்தீர்த்தங்கரர் 34 செ.மீ. உயரமும், 25 செ.மீ. அகலமும் கொண்டது. முகம், கழுத்து, மார்பு ஆகியவை அழகாக வடிக்கப்பட்டுள்ளன. காதுகள் நீண்டும், தலைமுடி சுருள் சுருளாகவும் உள்ளது. இடது தோலும், மூக்கும் சிதைந்த நிலையில் உள்ளன. கலையம் சத்தை வைத்து பார்க்கும்போது இச்சிற்பமானது 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகலாம்.

### 119:3:2.கொரத்திகிராமம்

கடலூர் மாவட்டம், பண்ருட்டிவட்டம், பண்ருட்டி வடமேற்கே சுமார் 12 கி.மீ. தொலைவில் கொரத்தி என்னும் ஊரிலுள்ள ஏரியின் உள்ளே மதகு பக்கத்தில் மண்ணில் முகம் குப்புற புதைந்த நிலையில் காணப்படுகிறது. இச்சிற்பத்தின் உயரம்



110 செ.மீ., அகலம் 46 செ.மீ. ஆகும். இத்தீர்த்தங்கரர் சிற்பத்தில் முக்குடை உடைந்து காணப்படுகிறது. இவர் பரந்து விரிந்த மார்பினையும் பருத்து திரண்ட தோள்களையும் பெற்று யோக நிலையில் அமர்ந்த வண்ணம் காட்சியளிக்கிறார். சாமரம் வீசுவோர் இருபக்கங்களிலும் திரிபங்கநிலையில் நின்று கொண்டுள்ளனர். முகம் முற்றிலும் சிதைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பமானது பொ.ஆ. 10-ஆம் நூற்றாண்டு கலையமைப்பைப் பெற்றுள்ளது.

## பல்லவர் கால கொற்றவை சிற்பங்கள்

### 119:3:1. உளுந்தாம்பட்டு



கடலூர் மாவட்டம், பண்ருட்டிவட்டம், பண்ருட்டி வடமேற்கே 17 கி.மீ. தொலைவில் உள்ள உளுந்தாம்பட்டு ஏரியின் உள்ளே துர்க்கையின் சிற்பம் காணப்படுகிறது. இச்சிற்பமானது பலகைகல் புடைப்புச் சிற்பமாக எருமையின் மேல் நின்ற சமபங்க நிலையில் எட்டு கைகளுடன் காணப்படுகின்றது. இச்சிற்பத்தின் உயரம் 70 செ.மீ., அகலம் 40 செ.மீ. கொண்டது. தலையில் கரண்டமகுடம், காதுகளில் பனைஓலை, கழுத்தில் சரபணி, மார்புக்கச்சை தோள்பட்டையுடன் காட்டப்பட்டுள்ளது.

### 119:3:2. எனதிரிமங்கலம் (ஒரே கல்லில் இரு சிற்பங்கள்)

பண்ருட்டிவட்டம், எனதிரிமங்கலம் வழியாக பண்ருட்டி செல்லும் சாலையில் உள்ள வயல்வெளியின் உள்ளே இத்துர்கை சிற்பம் காணப்படுகிறது. சுமார் 3 அடிஉயரம் உள்ள இச்சிலையானது பாதி சிதைந்த நிலையில் உள்ளது. அழகிய முகத்துடன் எட்டு கரங்களுடன் உள்ளது. இச்சிற்பத்தின் பின் பகுதியில் சிதைந்த நிலையில் ஐயனார் சிற்பம் புடைப்பு சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. இச்சிற்பம் அமர்ந்த நிலையில் ஒருகாலைத் தொங்கவிட்டு, மற்றொரு காலை மடக்கி ஆசனத்தின் மீது ஊன்றி உத்குடிசாசனம் நிலையில் உள்ளது. இதுபோன்ற கோலத்தில் அமர்ந்திருக்கும் சிற்பம் ஐயனார் மற்றும் யோக தட்சிணாமூர்த்தி ஆகும். இச்சிற்பத்தின் அமைப்பை பார்க்கும் போது ஐயனார் போன்று காணப்படுகிறது.




### 119:3:3. பல்லவர் கால மூத்ததேவி மற்றும் சாமுண்டி நத்தம்



\ பண்ருட்டி வட்டத்தில் உள்ள நத்தம் ஏரியின் உள்ளே பல்லவர் காலத்தைச் சார்ந்த மூத்ததேவி மற்றும் சாமுண்டி சிற்பம் காணப்படுகிறது.

ஆனத்தூர் நத்தம் ஊரில் உள்ள ஏரியின் உள்ளே இரண்டு மூத்ததேவியின் சிற்பங்கள் உள்ளன. சிறிய மூத்ததேவியின் சிற்பம் சிதைந்த நிலையில் உள்ளது.

சிவனின் சேவகளான யமனுக்கு சக்தியை வழங்கக்கூடிய தேவியான சாமுண்டிவிரிசடை அலங்காரத்தில் அபயமுத்திரையில் காட்சிதருகிறாள். இச்சிற்பத்தின் உயரம் 100 செ.மீ., அகலம் 57 செ.மீ. கொண்டுள்ளது. காதில் பிணைக் குண்டலமும், கைகளில் திரிசூலம், உடுக்கை ஈட்டி போன்ற ஆயுதங்கள் காணப்படுகிறது. கழுத்தில் கபால மாலை



காட்டப்பட்டுள்ளது.

**சி.இம்மானுவேல், உளுந்தாம்பட்டு**

## 119:4 இளையரசனேந்தல் சதிக்கற்களும் சிற்பங்களும்



திருநெல்வேலி மாவட்டம், இளையரசனேந்தல் குளக்கரையில் சிற்றரசன் அவரது மனைவி என்று சொல்லும் வகையில் ஒரு சதிக்கல் உள்ளது. இதன் தாம் 10ஆம் நூற்றாண்டு எனலாம். இதனில் ஆணும் பெண்ணும் நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ளர். ஆணின் உருவம் இடக்கை மேல்நோக்கிக் குத்திட்ட வாளுடனும் கால்களில் வீரக்கழல்களுடனும் தலை முடி சூடிய நிலையிலும் காட்டப்பட்டுள்ளது. பெண்ணின் உருவம் திரிபங்க நிலையில் இரு கைகளும் தலைக்குமேல் உயர்த்திய நிலையிலும் இருக்கைகளிலும் ஏதோ பொருட்களை ஏந்தியவாறும் காட்டப்பட்டுள்ளது. ஆண் உருவத்தின் வலப்பக்கத்தில் வெண்கொற்றக் குடையினை விரித்து முடி சூட்டப்பட்ட ஆணின் தலைமீது நிற்குமாறு பணியாள் உருவம் காட்டப்பட்டுள்ளது. ஊரின் பெயர் இளையரசனேந்தல் எப்பதில் இளையரசன் என்பது இளவரசன் எனவும் சிற்றரசன் எனவும் பொருள்படும். மேலும் இவ்வூரில் மூன்று சதிக்கற்கள் உள்ளன. இவை 16, 17ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. ஒன்று மேற்சொன்ன சதிக்கல் அருகிலும் மற்றவை குளக்கரையிலும் உள்ளன.

இளையரசனேந்தல் குளத்திற்குள் மேல் பகுதியில் சிதைந்த நிலையில் மூத்த தேவி சிற்பம் காணப்படுகிறது. காலம் 10 ஆம் நூற்றாண்டு எனலாம்.

இடம்: இளையரச னேந்தல் ஊரிலிருந்து புளியங்குளம் செல்லும் சாலையில்







இளையரசனேந்தல் ஊருக்குக் கிழக்குப் பகுதியில் குவாரியை அடுத்து சாலையின் இடப்புறம் விளைநிலங்களுக்கு நடுவில் ஐயனார் சிற்பம் அமைந்துள்ளது. காலம் 10 ஆம் நூற்றாண்டு எனலாம். கிராமியக் கலை அமைப்பில் சிற்பம் உள்ளது. இருபுறமும் பூரணை புஷ்கலையின் உருவங்கள் நெருங்கி அமர்ந்த நிலையில் காட்டப்பட்டுள்ளன. இந்த ஐயனாரின் சிற்பத்தை ஊர்மக்கள் குசும்புசாமி என்றழைக்கின்றனர். அருகில் காளி சிற்பம் ஒன்றும் உள்ளது.

சிற்ப அமைதி:

பீடத்தின்மீது வலக்காலை மடித்துக் குத்திட்டவாறும் இடக்கால் தொங்கவிட்ட நிலையில் அரக்கன் தலையில் மிதிப்பது எட்டு கைகளுடன் விளங்குகிறது.





**ஈ.சங்கரநாராயணன், தூத்துக்குடி.**

## 119:5 அய்யனார் சிற்பம்

விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டத்திலுள்ள கஞ்சூர் கிராமத்தில் உள்ள ஒரு மரத்தின் கீழ் பலகைக் கல்லில் செதுக்கப்பட்ட அய்யனார் சிற்பமானது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இவரின் வல,இடப்புறங்களில் பொற்கலை(புஷ்கலை) மற்றும் பூரணி அமர்ந்துள்ளனர். அய்யனாரின் தலையை அடர்ந்த ஜடாபாரம் அலங்கரிக்கிறது. காதில் பத்ர குண்டலமும், கழுத்தில் அணிகலனை பெற்றும்,

தோள்வளை மற்றும் கைவளை பெற்றும் காணப்படுகிறார். அய்யனாரின் ஆயுதமான செண்டையை வலக்கரத்தில் பற்றியவாறும், இடக்கையை நீட்டியவாறும் உட்குதிகாசன முறையில் அமர்ந்துள்ளார். இச்சிற்பம் 17ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கும்..

**இல.தியாகராஜன், அரியலூர்.**
**ம.பாரதி ராஜா, வேட்டவலம்.**

## 119:6 செஞ்சி வட்டத்தில் கணக்கன்குப்பம் கிராமத்தில் கண்டறியப்பட்ட தவ்வை சிற்பம்



செஞ்சி வட்டத்தில் உள்ள கணக்கன்குப்பம் கிராமத்தில் தன்ராஜ் என்பவரின் நிலத்தின் அருகில் இடிந்த நிலையில் ஒரு சிவன் கோவில் உள்ளதென கண்டறியப்பட்டது. அக் கோயிலின் வெளிப்புறம் ஒரு பலகைக் கல்லில் தவ்வை சிற்பம் உள்ளது.

இச்சிற்பத்தின் அமைப்பைக் கொண்டு இச்சிற்பமானது பிற்கால பல்லவர் காலத்தை சேர்ந்ததாக இருக்கும் என கருதலாம்.. இடிந்த நிலையில் உள்ள கோயிலின் உட்புறம் நிறைய கல்வெட்டுகள் உள்ளது என நில உரிமையாளர் கூறினார்.

இக்கோவிலுக்கு சற்று தொலைவில் வனதுர்க்கை அம்மன் மலை அடிவாரத்தில் மற்றுமொரு இடிந்த கோவிலானது காணப்படுகிறது. இக்கோயிலின் வெளிப்புறம் மஞ்சள் மற்றும் சிவப்பு வண்ணங்களிலான தாமரைப்பூ ஓவியம் ஒன்று காணப்படுகிறது. பதினாறாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்ட ஓவியமாகக் கருதலாம்.



**இல.தியாகராஜன், ம. பாரதி ராஜா,செஞ்சி.**

# 119: 7 மானசா தேவி



மிக அரிதான மானசாதேவி சிற்பம் சேலம் மாவட்டம் ஆத்தூர் காயநிமலேஸ்வரர் கோயில் கருவறையின் பின்புறம் உள்ள சுற்றுச்சுவர் அருகே நடப்பட்டுள்ளது.

ஆத்தூரில் காணப்படும் மானசாதேவி தனி சிற்பமாக உள்ளது. தலையில் 5 தலையுடன் நாகம், கரண்ட மகுடம், கழுத்தணியுடன் இரு கரங்களிலும் பாம்பை பிடித்தபடி உள்ளார். இடுப்புக்கு மேலே மனித உருவமும், இடுப்புக்கு கீழே பாம்பு உருவமும் காணப்படுகிறது. இடுப்புக்கு கீழே வலது மற்றும் இடது புறங்களில் இரு பாம்புகள் படம் எடுத்த நிலையில் உள்ளன. வலது புறம் ஒரு ஆண் முகம் தெரிகிறது. வங்கம் மற்றும் வட கிழக்கு மாநிலங்களில் அதிகம் வழிபடப்படும் தெய்வம் இது.

**பொன்.வெங்கடேசன், ஆறகழூர்.**

# 119:8 ஈயனூர் கொற்றவை



விழுப்புரம் மாவட்டம் கள்ளக்குறிச்சி வட்டம் ஈயனூர் என்ற கிராமத்தில் பல்லவர் கால கொற்றவை சிற்பம் கண்டறியப்பட்டுள்ளது.

மாரியம்மன் கோயில் பின்பிறமுள்ள காளிக்கோயிலில் இந்த கொற்றவை சிற்பம் உள்ளது. 100 ஆண்டுகளுக்கு முன் மண்ணில் புதையுண்டு இருந்த இச்சிற்பத்தை மக்கள் மீட்டெடுத்து தற்போது வழிபாட்டில் வைத்துள்ளனர். ஒரு பலகைக்கல்லில் புடைப்புச்சிற்பாக செதுக்கப்பட்டுள்ளது. இதன் உயரம் 120 செ.மீ, அகலம் 105 செ.மீ, தடிமன் 10 செ.மீ ஆகும். கொற்றவை நேராக நின்ற நிலையில் உள்ளார். தலையில் கரண்ட மகுடம், காதுகளில் பனைஓலை, கழுத்தில் சவடி, சரபளி அணிகலன்கள், மார்பில் சன்னவீரம் காணப்படுகின்றன. மார்புக்கச்சை தோள்பட்டையுடன் காட்டப்பட்டுள்ளது. பின்புறம் சூலமும், இடதுபுறம் கலைமானும் உள்ளன. எட்டு கரங்களுடன் காட்சியளிக்கிறார். சங்கு, வில், கேடயம்,

கடியஸ்தம் எறிநிலைசக்கரம், வாள், மணி காட்டப்பட்டுள்ளன. வலது முன் கரம் அபய முத்திரையில் உள்ளது. வளையல் உள்ளது. வலது கை அருகே கிளியும் இடது புறம் சிங்கமும் காட்டப்பட்டுள்ளன. கொற்றவையின் கால் அருகே தன் தலையை தானே அரிந்து பலியிட்டுக்கொள்ளும் நவகண்டவீரன் உள்ளான். இடது பக்கம் வணங்கிய நிலையில் அடியார் ஒருவர் உள்ளார். காலடியில் எருமையின் தலை காட்டப்பட்டுள்ளது.

**பொன்.வெங்கடேசன்,ஆறகழூர்**
**சி.பொன்னம்பலம்,வாழப்பாடி**
**ஜீவநாராயணன்,பெத்தநாயக்கன் பாளையம்**

## 119:9 கோட்டைகவுண்டன்பட்டி வாமனக்கல்



சேலத்தில் கோட்டை கவுண்டன்பட்டி என்ற ஊரில் உள்ள மாரியம்மன் கோயில் அருகே ஒரு வாமனக்கல் காணப்படுகிறது. இதன் உயரம் 90 செ.மீ.அகலம் 50 செ.மீ. இதில் புடைப்பு சிற்பமாக வாமனன் உருவம் செதுக்கப்பட்டுள்ளது.வாமனன் உயரம் 35 செ.மீ அகலம் 20 செ.மீ ஆகும்.வலது கையில் கமலண்டலமும்,இடது கையில் குடையும் காட்டப்பட்டுள்ளது. மேற் பகுதியில் சூரியனும் பிறை நிலாவும் காட்டப்பட்டுள்ளது. சூரியன் சந்திரன் உள்ளவரை இந்த தானத்தை யாரும் அழிக்க கூடாது என்பது இதன் பொருளாகும்.

பெருமாளின் அவதாரங்களில் ஐந்தாவது அவதாரமாக வாமன அவதாரம் குறிப்பிடப்பட்டுள்ளது. பிரகலாதனின் பேரன் மாபலியின் செருக்கை அடக்க திருமால் குள்ளமான வாமனன் வடிவம் கொண்டு மாவலியிடம் மூன்று அடி நிலம் கேட்டார். ஒரு அடியில் வானத்தையும்,இரண்டாவது அடியில் பூமியையும் அளந்து விட்டு மூன்றாவது அடியை வைக்க இடமின்றி அந்த அடியை மாவலியின் தலையில் வைத்ததாய் புராணங்கள் சொல்லுகின்றன. இதன் அடிப்படையிலே பெருமாள் கோயிலுக்கு தானம் செய்யப்பட்ட நிலத்தின் எல்லைக்கல்லில் வாமனன் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. பெருமாள் கோயிலின் நிலத்தை அபகரிப்பவர்கள் வாமனனால் தண்டிக்கப்படுவர் என்பதையும் இந்த வாமனக்கல் உணர்த்துகிறது.

**பொன்.வெங்கடேசன் - ஆறகழூர் ,**
**சி.பொன்னம்பலம், ஜீவநாராயணன் .**

## 119:10 எம்.குச்சிப்பாளையம்



விழுப்புரம் மாவட்டத்தின் வடகிழக்கில் எம்.குச்சிப்பாளையம் என்ற ஊர் அமைந்துள்ளது. முண்டியம்பாக்கத்தில் இருந்து புதுச்சேரிக்கு திருக்கனூர் வழியே சாலை செல்கிறது. எம்.குச்சிப்பாளையத்தில் சாலையின் தெற்கே சில நூறு மீட்டர் தூரத்தில் வயல் வரப்பின் நடுவே இந்த ஒன்றரை அடி உயரம் உள்ள இந்த சிற்பம் காணப்படுகிறது. சிற்ப வடிவத்தின் படி இதனை தாய் தெய்வ வழிபாட்டின் தொடர்ச்சியாக கொள்ளலாம்.

**ம.பராந்தகன் தமிழ்ச்செல்வம், புதுச்சேரி**

## 119:11 திருவண்ணாமலை மாவட்டம் மதுராம்பட்டு பகுதி சிற்பங்கள்

திருவண்ணாமலை மாவட்டம் வேட்டவலம் அருகில் உள்ள மதுராம்பட்டு கிராமத்தில் துர்க்கை அம்மன் கோவிலில் எருமைத் தலைமீது எண் கரங்களோடு காட்சியளிக்கும் துர்க்கையின் சிற்பம் உள்ளது.

இக்கோயிலின் வெளிப்புறம் அமைந்துள்ள கற்பலகையில் தவ்வை சிற்பம் ஒன்றும் உள்ளது. இவைபிற்கால பல்லவர் காலத்தை சார்ந்ததாக இருக்கலாம்.





**ம.பாரதி ராஜா, க.சீனுவாசன், வேட்டவலம்.**
**இல.தியாகராஜன், அரியலூர்.**

## 119:12 கோனூர் நடுகல்லில் வட்டெழுத்து கல்வெட்டு



சேலம் மாவட்டம், மேட்டூர் வட்டம்,கோனூர் ஊராட்சியில் உள்ள சென்றாயபெருமாள் கோயில் அருகே உள்ள காலி நிலத்தில் உள்ள வட்டெழுத்துடன் கூடிய நடுகல். 9 ஆம் நூற்றாண்டு என கருதலாம். 6 வரிகளில் வட்டெழுத்துடன் நடுகல்லின் மேற்பகுதியில் கல்வெட்டு உள்ளது. கல்வெட்டின் வலது மேற்புறம் உடைந்துள்ளது. கல்வெட்டின் இடது புறம் உடைந்து சிதைந்துள்ளது. கல்வெட்டின் வரிகள் கோடு போட்டு எழுதப்பட்டுள்ளது.

**சி.வீரராகவன், விழுப்புரம.**
**பொன்.வெங்கடேசன, ஆறகழூர்.**

## 119:13 தேவியாக்குறிச்சி நடுகற்கள்

சேலம் மாவட்டம் ஆத்தூர் வட்டம் தேவியாக்குறிச்சி தெற்குமேடு என்ற இடத்தில் ராமசாமி என்பவர் நிலம் அருகே ஏரிவாய்கால் கரையில் இரு நடுகற்கள் உள்ளன.

முதல் நடுகல்லானது 75 செ.மீ.உயரமும்,55 செ.மீ அகலமும், 12 செ.மீ தடிமனும் உடையது. காதுகளில் காதணி, கழுத்தில் சரபளி, சவடி, போன்ற ஆபரணங்களும், மார்பில் சன்னவீரம் எனப்படும் வீரச்சங்கிலியும் காணப்படுன்றன. இருபுறமும் விரிந்து அகண்ட கரங்களில் வில்லும் அம்பும் உள்ளன. அலங்காரமான



நிலையில் வீரக்கல் காட்டப்பட்டுள்ளது.

இரண்டாவது நடுகல் 76 செ.மீ உயரமும், 58 செ.மீ அகலமும், 7 செ.மீ தடிமனும் உடையது. இவ்வீரனும் வில் அம்புடனும் அலங்கார அணிகலன் களுடனும் காணப்படுகிறான். இவ்விரு நடுகற்களும் முறையே 13, 14ஆம் நூற்றாண்டு எனலாம்.

**பொன்.வெங்கடேசன், ஆறகழூர்.**

## 119:14 எதிரி யின் தலையைக் கையில் வைத்திருக்கும் வீரநடுகல்

கோவை மாவட்டம் ஆனைமலை வட்டத்தில் உள்ள சிங்காநல்லூரில் கிபி 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அரிதான நடுகல் ஒன்று கிடைத்துள்ளது. 75 செ.மீ உயரமும், 75 செ.மீட அகலமும் உடைய இந் நடுகல்லில் வீரன் தனது வலது கையில் ஓங்கிய வீரவாளுடன் காட்சியளிக்கிறார். இடது தோளில் கோர்த்துள்ள வில் கையில் சற்றே கீழே இறங்கிய நிலையில் காணப்படுகிறது. மாவீரன் தன்னுடன் போரிட்டுத் தோற்ற வீரரின் தலையைத் தன் இடது கையில் ஏந்திப் பிடித்து மிகவும் கம்பீரமாக நடந்து செல்வது போல் இந்நடுகல் வடிவமைக்கப் பட்டுள்ளது. ஒரு பெண்ணின் உருவமும் வீரனுக்கு இடது பக்கம் வீரனுக்கு நன்றி செலுத்தும் வகையில் அப்பெண்ணின் இரண்டு கைகளும் கும்பிட்ட நிலையில் காட்டப்பட்டுள்ளது. அப்பெண் அருகிலேயே ஒரு சிறு உருவம் வணங்கியபடி உள்ளது.



**சு. ரவிக்குமார், க.பொன்னுச்சாமி, ச.மு.ரமேஷ்குமார், சு.சதாசிவம், சு.வேலுச்சாமி, திருப்பூர்.**

## 119:15 அழகுசமுத்திரம் ஆநிரை நடுகல்

சேலம் மாவட்டம் ஓமலூர் வட்டம் அழகுசமுத்திரம் கிராமத்தில் சீரான்கரடு என்ற இடத்தில் ஆய்வுகள் மேற்கொண்டு அரியவகை ஆநிரை நடுகல் ஒன்று கண்டறியப்பட்டுள்ளது.. இந்த இடத்தில் 100 ஆண்டுகளுக்கு முன்பு வரை மிகப்பெரும் மாட்டுச்சந்தை நடந்ததாக உள்ளூர் மக்கள் தெரிவிக்கின்றனர்.இந்த நடுகல்லானது 125 செ.மீ உயரமும், 40 செ.மீ அகலமும், 24 செ.மீ தடிமனும் உடையதாக உள்ளது. பலகைக்கல்லில் புடைப்புப்புசிற்பமாக உருவங்கள் வெட்டப்பட்டுள்ளது.மூன்று படிநிலைகளில் நடுகல் அமைந்துள்ளது. முதல் நிலையில் நான்கு பசுக்கள் காட்டப்பட்டுள்ளன.தலையை சற்று உயர்த்திய நிலையில்



இடதுபக்கம் இரு பசுக்களும், வலது பக்கம் இரு பசுக்களும் ஒன்றை ஒன்று பார்த்த நிலையில் உள்ளன. இரண்டாம் நிலையில் இரு இடையர்கள் மேய்சல் கழிகளின் மீது சாய்ந்து கொண்டு புல்லாங்குழல் ஊதுகின்றனர். அவர்களின் இடது பக்கம் இசையில் மயங்கிய நிலையில் ஒரு பசு காட்டப்பட்டுள்ளது.

மூன்றாம் நிலையில் இருவர் காட்டப்பட்டுள்ளனர். நேராக நின்ற நிலையில் வீரன் ஒருவன் கோதண்டம் போன்ற உயரமான வில் ஒன்றை பற்றியுள்ளான். வலது கையில் அம்பை பிடித்துள்ளான்.முதுகில் அம்புக்கூடு, கைகளில் தோள்வளையம்,காலில் காப்பு காட்டப்பட்டுள்ளது. ஆநிரையை காத்து போரிட்டபோது இறந்த வீரனாக இவன் இருக்கலாம். இவனின் இடது பக்கம் கொங்காணி அணிந்த நிலையில் ஒருவர் உள்ளார். இவர் இடையர் கூட்டத்தின் தலைவனாக இருக்கலாம். இந்த நடுகல்லின் பக்கவாட்டில் ஒன்றன் கீழ் ஒன்றாக 6 பசுக்கள் காட்டப்பட்டுள்ளன.சேலம் மாவட்டத்தில் இந்த வகை நடுகல் கண்டறியப்படுவது இதுவே முதன் முறையாகும். தமிழகத்தில் இதற்கு முன் ஆனைமலையில் மட்டுமே இது போன்று ஒரு நடுகல் கண்டறியப்பட்டுள்ளது.

**சி .வீரராகவன், விழுப்புரம்.**
**பொன்.வெங்கடேசன், ஆறகழூர்.**

## 119:16 அளுக்குளி தலைப்பலி சிற்பங்கள்



ஈரோடு மாவட்டம் கோபியில் இருந்து நம்பியூர் செல்லும் சாலையில் கோபியில் இருந்து 13 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள அளுக்குளி கிராமத்தில் மூன்று தலைப்பலிச் சிற்பங்கள் உள்ளன. இதில் பெரிய சிற்பம் 120 செ.மீ உயரமும், 60 செ.மீ அகலமும் கொண்டது. இதில் வீரனின் அள்ளி முடிந்த கொண்டை இடது பக்கம் சாய்ந்துள்ளது. வீரன் தன் இடது கையில் உள்ள குறுவாளால் தன்னுடைய கழுத்தைத் தானே அறுத்துக் கொள்ளும் வகையில் இச்சிற்பம் உள்ளது. தன் வலது

கையில் சுரிகை வகையைச் சேர்ந்த ஒரு குறுவாளை வைத்து உள்ளான். மார்பில் வீரத்தின் அடையாளமாகச் சன்னவீரம் அணிந்துள்ளார். சிறிய சிற்பங்கள் 90 செ.மீ உயரமும், 50 செ.மீ அகலமும் உடைய இச்சிற்பங்களில் வீரர்கள் தங்களது இடது கையில் உள்ள குறுவாளைக் கழுத்துப்பகுதியில் குத்தும் வகையில் வைத்துள்ளனர். இரு வீரர்களுமே தங்களது வலது கையை மேலே உயர்த்திய நிலையில் உள்ளனர்.

**சு. ரவிக்குமார், க.பொன்னுச்சாமி, ச.மு.ரமேஷ்குமார், சு.சதாசிவம், சு.வேலுச்சாமி, திருப்பூர்.**

## 119:17 வேடுகாத்தான்பட்டி வீரக்கல்

சேலம் இரும்பாலைக்கு அருகே உள்ள திருமலைகிரி ஊராட்சி வேடுகாத்தான்பட்டி கிராமத்தில் தாமரை ஏரியின் கிழக்கு பகுதியில் சாலையின் அருகே ஒரு வீரக்கல் கண்டறியப்பட்டு ஆய்வு செய்யப்பட்டது. ஒரு பலகைகல்லில் புடைப்பு சிற்பமாக வீரக்கல் செதுக்கப்பட்டுள்ளது. இக்கல்லின் உயரம் 95 செ.மீ, அகலம் 126செ.மீ. இதில் போர் புரியும் நிலையில் தரையில் நின்றபடி இரு வீரர்களும், குதிரையில் அமர்ந்து போர்புரியும் ஒரு வீரனும், தனியாக ஒரு குதிரையும் காட்டப்பட்டுள்ளன.



16ஆம் நூற்றாண்டில் மதுரை நாயக்க மன்னர்களின் ஆட்சியின் கீழ் பாளையக்காரர்களாக இப்பகுதியை கெட்டிமுதலி வம்சத்தை சேர்ந்தவர்கள் ஆண்டுவந்தனர். அப்போது போர் ஏற்படும் காலங்களில் மதுரை நாயக்கர் மன்னர்களுக்கு ஆதரவாக இவர்கள் போரில் ஈடுபட்டனர். கி.பி. 1659 மற்றும் கி.பி. 1667 ஆம் ஆண்டுகளில் மதுரை நாயக்க மன்னருக்கும் மைசூர் உடையார் மன்னருக்கும் போர் நடைபெற்றது. அந்த போரில் கெட்டி முதலி படையினர் மதுரை மன்னருக்கு ஆதரவாய் போரில் கலந்து கொண்டனர். அந்த போரில் இறந்த கெட்டி முதலி படை வீரர்களுக்கு எடுக்கப்பட்ட வீரக்கல்லாக இதை கருதலாம். 13 ஆம் நூற்றாண்டுக்கு பின் நடுகற்களில் கல்வெட்டு பொறிக்கும் வழக்கம் குறைந்து போனதால் இறந்த வீரர்களின் பெயர்களை அறிய முடிவதில்லை. இந்த வீரக்கல்லுக்கு அருகே சுண்ணாம்பு கோட்டை என ஒரு பகுதி இருந்ததாக ஊர் மக்கள் கூறுகிறார்கள். இது ஆயுதங்கள் பாதுகாத்து வைக்கும் இடமாக இருந்திருக்கலாம். இந்த பகுதி இப்போது சுடுகாடாக உள்ளது

**பொன்.வெங்கடேசன், ஆறகழூர்**
**சி.பொன்னம்பலம் , ஜீவநாராயணன்**

## 119:18 அண்ணன் தம்பி வீரக்கல்

திருவண்ணாமலை மாவட்டம் கீழ்பென்னாத்தூர் வட்டம் பண்ணையூர் (பன்னியூர்) கிராமத்தில் புறாக்கல் எனும் இடத்திற்கு பின்புறம் அண்ணன் தம்பி இருவருக்காக பாறையில் செதுக்கப்பட்ட சிற்பமொன்று கண்டறியப்பட்டுள்ளது. இவர்கள் இவ்வூரை எதிரிகளிடமிருந்து பாதுகாக்க நடைபெற்ற போரில் வீர மரணம் அடைந்ததன் நினைவாக அமைக்கப்பட்டிருக்கலாம். இது 3*3 அடியில் அமைந்துள்ளது. தலையில் மகுடம், கழுத்தணி, தோள்வளை மற்றும் கைவளை போன்றவை நேர்த்தியான முறையில் செதுக்கப்பட்டுள்ளது. இருவரும் தங்களுடைய வலக்கரங்களில் ஈட்டியைத் தாங்கியவாறு கம்பீரமாக நிற்கின்றனர். இந்நிலத்தின் உரிமையாளர் இதை வேடியப்பன் என்று வணங்கி வருகிறார்.



**ம.பாரதி ராஜா, வேட்டவலம்.**
**இல.தியாகராஜன், அரியலூர்.**

## 119:19 பொங்குபாளையம் வட்டெழுத்து புலிக்குத்திக் நடுகல்



**இடம்:** திருப்பூர் மாவட்டம் அவினாசி வட்டம் பொங்குபாளையம் கிராமத்தில் உள்ளது.

**காலம்:** பொ.ஆ 9ஆம் நூற்றாண்டு வட்டெழுத்து.

**செய்தி:** 65 செ.மீ அகலமும், 120 செ.மீ உயரமும் உள்ள இந்நடுகல்லில் வீரனின் தலை வலது புறம் சாய்ந்த நிலையில் உள்ளது. வீரன் தன் வலது கையில் உள்ள ஈட்டியால் புலியின் கழுத்துப்பகுதியைக் குத்தும் வகையிலும் இடது கையை தன்னைத் தாக்கும் புலியை தடுக்கும் வகையிலும் வீரக்கல் வடிவமைக்கப் பட்டுள்ளது. புலியின் முன்னங்கால்கள்

இரண்டும் எழுந்த நிலையில் வீரனின் இடுப்புப் பகுதியிலும் பின்னங்கால்கள் இரண்டும் வீரனின் இடது கால் மேல் அழுத்திய நிலையிலும் உள்ளது. புலியின் வால் அதன் இரண்டு கால்களுக்கிடையே மடிந்த நிலையில் உள்ளது. வீரன் காது கழுத்து பகுதியில் அணிகலன்களும் கையில் வீர காப்பும் இடையில் மட்டும் ஆடை அணிந்துள்ளார். இங்வீரநடுகல்லின் இடது மேல் பக்கவாட்டில் ஆறு வரிகளைக் கொண்ட வட்டெழுத்து செய்தி உள்ளது முதல் இரண்டு வரிகள் மிகவும் சிதிலம் அடைந்து உள்ளன

1, - - - - - - - - - -

2, - - - - - - - - - -

3, தேவந்

4, புலிகு

5, த்திபட்டார்

6, கல்

---

நன்றி: 1. பேராசிரியர் ஏ. சுப்பராயலு, முனைவர் ரா. பூங்குன்றன்.

**சு. ரவிக்குமார், க.பொன்னுச்சாமி,**
**திருப்பூர்.**

## 119:20 செஞ்சேரி குமாரபாளையம் புலிக்குத்திக் நடுகல்



**இடம்:** கோவை மாவட்டம் சூலூர்த் வட்டம், செஞ்சேரி குமாரபாளையம் கிராமத்தில் உள்ளது.

**காலம்:** 17 ஆம் நூற்றாண்டு தமிழ் எழுத்து.

**செய்தி:** 110 செ.மீ உயரமும் 75 செ.மீ அகலமும் உள்ள இந்நடுகல்லில் வீரனின் தலை நேராக உள்ளது வீரன் வலது கையில் உள்ள வாளால் புலியின் வயிற்றுப் பகுதியை குத்தும் நிலையிலும் இடது கையை மடக்கி பாயும் புலியை தடுக்கும் நிலையிலும் உள்ளது. புலியின் முன்னங்கால் இரண்டும் எழுந்த நிலையில் வீரனை தாக்கும் வகையிலும் பின்னங்கால் இரண்டும் நிலத்திலும் உள்ள படியும் நடுகல் உள்ளது.

வீரன் கை மற்றும் கால் பகுதிகளில் வீர காப்பும் மார்பு பகுதியில் அணிகலன்களும் இடையில் நல்ல வேலைப்பாட்டுடன் கூடிய ஆடையும் அணிந்துள்ளார். இந்த நடுகல்லை பாதுகாக்க வேண்டும் என்ற நமது வேண்டுகோளை ஏற்று இக்கிராம மக்கள் இதற்கு கோயில் கட்டியுள்ளனர்.

1. புலிக்குத்தி
2. பொடாறப்ப
3. கவுண்டன்

**சு. ரவிக்குமார், க. பொன்னுச்சாமி**

## 119:21 சதிக்கல்லும் தலைப்பலி சிற்பங்களும்

திருப்பூர் மாவட்டம் சர்க்கார் பெரிய பாளையத்தில் கிடைத்துள்ள வீரசதிகல் 75 செ.மீ அகலமும், 90 செ.மீ உயரமும் கொண்டதாகும் நடுகல்லில் வீரன் அருகில் உள்ள பெண் தன்னுடைய வலது கையைத் தூக்கி கைவிரல்களை விரித்த நிலையில் உள்ளார். இடது கையில் கண்ணாடியை வைத்தி - ருக்கிறார். கழுத்தில் இரண்டு பக்கங்களிலும் மாலை காணப்படுகிறது. அருகில் உள்ள இரு வீரர்களின் உருவங்கள் உள்ளவை நவகண்ட சிற்பங்களாக உள்ளன. இவை 14ஆம் நூற்றாண்டாகலாம்.



**சு. ரவிக்குமார், க.பொன்னுச்சாமி, ச.மு.ரமேஷ்குமார், சு.சதாசிவம், சு.வேலுச்சாமி, திருப்பூர்.**

## 119:22 நரசிங்கநல்லூர் சதிக்கல்

திருநெல்வேலி மாவட்டம், திருநெல்வேலி மாநகரம் பேட்டைக்குத் தெற்கே மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ளது நரசிங்கநல்லூர். இவ்வூரில் உள்ள அரசு உயர்நிலைப் பள்ளிக்கு வெளியே தென்மேற்குப் பகுதியில் 15 ஆம் நூற்றாண்டு சதிக்கல் ஒன்று உள்ளது. ஆண் பெண் உருவங்கள் அமர்ந்த நிலையில் உள்ளன. கொடுங்கை அமைப்பு விமான அமைப்பில் இக்கல் உள்ளது.

**ஈ.சங்கரநாராயணன், தூத்துக்குடி.**

## 119:23 கருக்கல்வாடி சதிகல்



சேலம் மாவட்டம் ஓமலூர் வட்டம் கருக்கல்வாடி மாதேஸ் என்பவர் நிலத்தில் காணப்படுகிறது. இதன் உயரம் 110 செ.மீ அகலம் 83 செ.மீ. நாயக்கர் கால கொண்டை, மீசை, அணிகலன்கள் உள்ளன. வலது கையில் உள்ள நீண்ட வாளானது பூமியை நோக்கி உள்ளது, இடது கை கேடயத்தின் மீதுள்ளது. வீரனின் வலது புரம் அவன் மனைவி காட்டப்பட்டுள்ளார். மார்புகச்சை காட்டப்படவில்லை.

இந்தப் பகுதியைப் 16 ஆம் நூற்றாண்டில் கெட்டிமுதலி மன்னர்கள் ஆண்டு வந்தனர். அப்போது நடந்த போரில் இந்த வீரன் இறந்திருக்க கூடும்.

**சி.வீரராகவன்,விழுப்புரம்**
**பொன்.வெங்கடேசன்,ஆறகழூர்**

## 119:24 அயன் திருவாலீசுவரம் சதிக்கல்

திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் அருகில் உள்ளது அயன் திருவாலீசுவரம். இவ்வூரிலுள்ள பொற்றாமரைக்குளத்தின் வடகரையில் ஒரு சதிக்கல் உள்ளது. இதன் காலம் பொ.ஆ.16 ஆம் நூற்றாண்டு ஆகலாம்.

ஆண் பெண் உருவங்கள் அமர்ந்த நிலையில் உள்ளன. கொடுங்கை விமான அமைப்பில் உள்ளது. ஆண் உருவம் வலப்புறமும் பெண் உருவம் ஆணின் இடப்புறமும் காட்டப்பட்டுள்ளன. ஆண் உருவம் இடக்காலை மடித்து வலக்காலைத் தொங்கவிட்டு அமர்ந்த நிலையில், காட்டப்பட்டுள்ளது. வலக்கை தொடையின்மீது அமர்த்தப்பட்டும் இடக்கை வியப்பு முத்திரையுடனும் விளங்குகிறது. பெண் உருவம் வலக்காலை மடித்து, இடக்காலைத் தொங்கவிட்டு, வலக்கை பூச்செண்டு ஏந்தியும் இடக்கை தொடையின்மீது அமர்த்தியும் காட்டப்பட்டுள்ளது.



**ஈ. சங்கரநாராயணன்,**
**தூத்துக்குடி.**

## 119:25 சேரன் மாதேவி சதிக்கற்கள்

**இடம்:** திருநெல்வேலி மாவட்டம், சேரன்மாதேவி அரசு உயர் நிலைப்பள்ளி, அறிவியல் ஆய்வுக்கூடத்தையொட்டிய பள்ளியின் கீழ்ப்பக்கத் தென்வடல் சுற்றுச்சுவரோடு சேர்த்துக் கட்டப்பட்ட நிலையில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது.

**காலம்:** பொ.ஆ.16 ஆம் நூற்றாண்டு

கல்லில் ஆண் பெண் உருவங்கள் அமர்ந்த நிலையில் உள்ளன. கொடுங்கை அமைப்பு உள்ளது. பெண் உருவம் வலக்காலை மடித்து, இடக்காலைத் தொங்கவிட்டு, வலக்கையில் கண்ணாடியும், இடக்கையில் பூச்செண்டும் கொண்டுள்ளது. ஆண் பெண் உருவங்களுக்கு நடுவில் மேல்பகுதியில் மேல் உலகம் செல்லும் காட்சியும் உள்ளது. ஆண் உருவம் வாளினை தரையில் ஊன்றி அமர்ந்துள்ளது.

திருநெல்வேலி மாவட்டம், சேரன்மாதேவி ஸ்கேடு பொறியியல் கல்லூரிக்கு எதிராகக் கிழக்குப்பகுதியில் திருநெல்வேலி பாபநாசம் சாலையின் வடபுறத்தில் உள்ள சிறிய மண்மேட்டில்

இதேபோல், மற்றொரு கல் உள்ளது. இதன் காலம் பொ.ஆ. 17ஆம் நூ.ஆ.





**ஈ.சங்கரநாராயணன், தூத்துக்குடி.**

## 119:26 பிரம்மசாஸ்தா

திருவள்ளூர் மாவட்டத்தில் உள்ள மீஞ்சூர் அருகே திருவெள்ளைவாயில் ஊர் அமைந்துள்ளது. இங்குள்ள சிவன் கோயிலில், முருகனின் மாறுபட்ட உருவமான பிரம்மசாஸ்தா சிற்பம் உள்ளது. இப்பிரம்மசாஸ்தாவின் சிற்ப வடிவம் உயர்ந்த பத்ர பீடத்தின் மீது சமபாதக ஸ்தானகத்தில், நின்ற நிலையில் உள்ளது. தலையில் மகுடம் மேல்நெற்றியில் கன்னிமாலை, வலக்கரத்தில் கெண்டி உள்ளன. இதன் காலம் 10ஆம் நூற்றாண்டாகலாம்.

**த. காமாட்சி, சென்னை.**

## 119:27 ஐயனார் கோவிலில் மன்னர்சிலை



இராமநாதபுரம் மாவட்டம் முதுகுளத்தூர் வட்டம் தேரீருவேலி ஐயனார் கோயிலில் சிவகங்கை சீமை உருவாக காரணமாக இருந்த மன்னர் கன்று மேய்க்கி பெரிய உடையான் தேவருக்கு இராமநாதபுரம் மாவட்டம் தேரீருவேலி கிராமத்து ஐயனார் கோவிலில் சிலை வைத்து வணங்கப்பட்டு வருகிறது. கன்றுமேய்க்கி உடையத்தேவர் இராமநாதபுரத்து மன்னர் கிழவன் சேதுபதியின் உறவினர் ஆவார். இச்சேதுபதியே சேதுநாட்டை, மதுரை நாயக்கர் ஆட்சியில் இருந்து 1702ல் இராமநாதபுரத்தை தலைமை இடமாகக் கொண்டு சுயாட்சியாக கொண்டு வந்தவர். சிவகங்கை அருகில் உள்ள நாலுகோட்டையை தலைமை இடமாகக் கொண்டு ஆட்சிசெய்யுமாறு கன்றுமேய்க்கி பெரிய உடையானை பாளையத் தலைவனாக்கினார் கிழவன் சேதுபதி. அதனைத் தொடர்ந்தே சிவகங்கை சீமை உருவாகியது. இக்கன்று மேய்க்கி பெரிய உடையான் , தேரீருவேலிகிராம் மற்றும் அப்பகுதி கிராம மக்களுக்கு பெரிதும் உதவிக்கரமாகவும் உறுதுணையாகவும் இருந்துள்ளார். மேலும் அவ்வூர் புலியாருடைய ஐயனார் கோவிலில் உள்ள சேதுமுத்துக் காளியின் மீது அளவில்லாபக்தி கொண்டதால் அவரின் அருளையும் பெற்றிருக்கிறார். எனவே அக்கோயிலில் அவருக்கு அக்காளியின் முன்பாக வேசிலை வைத்து பூஜையும் செய்து வணங்கி வருகிறார்கள்.

**உ.விஜயராமு, கீழக்கரை,**

## 119:28 தின்னகுளம் திருப்பதியம் விண்ணப்பிப்பார் கல்வெட்டு



திருச்சிராப்பள்ளி மாவட்டம் இலால்குடி வட்டம் தின்னக்குளம் திருநெற்குன்றநாதர் கோயில் அர்த்தமண்டபத்தில் சோழர் கால 12ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் மிகவும் சிதைந்த கல்வெட்டுள்ளது. அதனில் சிலவரிகள் திருப்பதியம் விண்ணப்பிப்பார் ஆவணம் எழுதியமை குறித்து அமைந்துள்ளன.

1. லெழுதிநேந் இக்கோயில் திரு
2. ப்பதியம் விண்ணப்பஞ்செய்
3. யுந் த பஸ்வி பரமாறமந் தில்லையா
4. ளியாந் அணுக்க நம்பியேந் இவை

**சோ. கண்ணதாசன், தஞ்சாவூர்.**

## 119:29 தை மாதத்தை முதல் மாதமாக வைத்து ஆரம்பிக்கும் காலச்சக்கர கல்வெட்டு

**இடம் :** இராமநாதபுரம் மாவட்டம் கீழக்கரையில் உள்ள பள்ளிவாசல்.

**காலம்:** கி.பி.17 ஆம் நூற்றாண்டு.

முற்காலத்தில் கோள்களின் சுழற்சியை அடிப்படையாகக் கொண்டே காலத்தை கணித்துள்ளார்கள்.அதாவது பூமியின் சுழற்சியால் சூரியன் பூமியின் தென்பகுதியில் இருந்து தை மாதத்தில் ஆரம்பித்து வடபகுதயின் கடைசிக்கு ஆனி மாதத்திலும் பின் வடபகுதியில் இருந்து ஆடியில் ஆரம்பித்து பூமியின் தென் பகுதியின்இறுதிக்கு மார்கழி மாதத்திலும் செல்ல முறையே ஆறு மாதங்கள் ஆகிறது.அவைகள் முறையே உத்தராயணம் என்றும் தட்சனாயணம் என்றும் அழைக்கப்படுகிறது.இதைப்போலவே இங்கே உள்ள காலச் சக்கரக்கல்வெட்டிலும் தை மாதத்தில் ஆரம்பமாகி ஆனியில் முடிவுற்று பின் ஆடியில் ஆரம்பமாகி மார்கழியில் முடிவடைகிறது.

இஸ்லாமியர்களால் தொழுகையை கட்டாய கடைமையாகக் கடைப்பிடிக்கப் படுகிறது .முன் காலத்தில் தொழுகை நேரத்தை முரசு கொட்டி தெரிவிக்கப்பட்டது. நண்பகலுக்குப் பின் வரக்கூடிய தொழுகை நேரத்தை அசர்என்றும் அது முக்கிய தொழுகையாகவும் கருதப்படுகிறது. எனவே அசர் தொழுகையைஎல்லோருக்கும் தெரிவிக்கும் விதமாகவும் நடப்பு மாதம் எந்த மாதம் என்பதை உணர்த்தவும் முரசு அடித்து பின்பு இறுதியாகஅந்தமாதத்திற்கு உரிய எண்ணிக்கையை ( தனித்தனியாக )முரசு அடித்தும்தெரிவிக்க வேண்டும் என்பதையும் இக்கல் வெட்டு தெரிவிக்கின்றது.

**உ.விஜயராமு. கீழக்கரை.**

## 119:30 இதம்பாடல் கல்வெட்டுகள்

இராமநாதபுரம் மாவட்டம், சிக்கல் அருகில் இதம்பாடல் என்ற கிராமம். அங்கே சிதைந்துபோன தர்ம சத்திரமும்,அதன் அருகில் ஒரு அம்மன் கோயிலும் உள்ளன. அவை இரண்டிலும் கல்வெட்டுகள் உள்ளன. சேதுபதி மன்னர்கள் தங்கள் ஆட்சிக்கு உட்பட்ட பகுதிகளில் பலதர்ம சத்திரங்களையும் கோயில்களையும் கட்டி வைத்துள்ளனர். இவர்களைப் போலவே சேதுபதி ராணிகளும் மக்களுக்காக அப்பணிகளை செய்துள்ளார்கள் என்பதை இக்கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

**சத்திரத்தில் உள்ள கல்வெட்டு:**

கலியுகாதி வருடம் 4937 மேல்செல்லா நின்ற துண்முகி வருடம் தை மாதம் 16

தேதியில் (கி.பி 1836 )இதம்பாடல் ராஜ ராஜஸ்ட்ரி முனியாண்டி தேவர் அவர்களுடைய பத்தினி சிவனாயி ஆத்தா அவர்கள் பேருக்காக குமாரர் குமாரத்தி மஹா ராஜ ராஜஸ்ட்ரீ விஜயரகுநாத முத்துச்செல்லாதேவ ராஜா அவர்களும் ராணி முத்துவீராயி நாச்சியார் அவர்களும் இந்த தர்மசத்திரத்தை கட்டி வைத்தார்கள் என்று தெரிவிக்கின்றது.

**அம்மன் கோயிலில் உள்ள கல்வெட்டு :**

வாகன சகாப்தம் 1751. கலியுகாதி 4938. (கி.பி.1837) ஏவிளம்பி பங்குனி மாதம்....தேதி ராஜாதி ராஜா முத்து விஜயரகுநாத சேதுபதி அவர்களின் பட்டத்து ராணியும் மஹாராஜ ராஜஸ்ட்ரீ விஜயரகுநாத சேதுபதியின் தாயாருமாகிய ராணிமுத்து வீராயி நாச்சியாரும் முத்துச்செல்லாத் தேவரும் வனம்மன் கோவிலுக்கு திருப்பணி தர்மமாக செய்ததாக தெரிவிக்கின்றது.மேலும்இந்த ராணி பிறந்த ஊர் இதம்பாடல் என்பதும் ,இந்தஊரின் மீதும்இவரின்பெற்றோர் மீதும்இவருக்கு இருந்த பற்றை இக்கல்வெட்டின் மூலம் அறியமுடிகிறது. விஜயரகுநாத சேதுபதியும் ,முத்துச்செல்லா தேவரும் ராணி முத்துவீராயி நாச்சியாருடன் பிறந்தவர்களாகும்.



**உ.விஜயராமு. கீழக்கரை.**

## 119:31 சமண குகை



வேட்டவலம் அருகிலுள்ள நாயனூர் முருகர் மலையில் சமண குகை ஒன்றுள்ளது. இது சுமார் 3 மீட்டர் நீளமும், 1.5 உயரமும் கொண்ட ஒரு குகையாகும். ஒருவர் மட்டுமே தங்கும்படியாக இந்த குகையானது உள்ளது. இந்த குகையானது பல்லவர் காலத்தை சேர்ந்ததாக இருக்கலாம்.

**ம.பாரதி ராஜா, வேட்டவலம்.**
**இல.தியாகராஜன், அரியலூர்.**

## 119:32 பாடிப்பள்ளம்



விழுப்புரம் மாவட்டத்தின் வடமேற்குப்பகுதியில் பாடிப்பள்ளம் என்ற ஊர் அமைந்துள்ளது. இங்கு தெற்கு வடக்காக சிறிய மலைக்குன்று ஒன்று உள்ளது. குன்றின் கிழக்குப்பகுதியில் கிழக்கு நோக்கி ஒரு குடைவரை அமைப்பதற்கான முயற்சியில் கணக்கீடு செய்து பாறை வெட்டப்பட்டு முழுமை பெறாது காட்சியளிக்கிறது. பாடிப்பள்ளம் ஊரின் கிழக்கு திசையில் மகேந்திர பல்லவரின் முதல் குடைவரையான மண்டகப்பட்டும், வடகிழக்கில் தளவானூரும் மற்ற குடைவரைகளும் இதனை சுற்றி அமைந்திருப்பதால் இதனை மகேந்திர பல்லவரின் காலமான ஏழாம் நூற்றாண்டின் பல்லவர்களின் முயற்சியாகவே கொள்ளலாம்.

**ம.பராந்தகன் தமிழ்ச்செல்வம், புதுச்சேரி.**

## 119:33 மீனாச்சிபுரம் குகை ஓவியமும் திருமால் சிற்பமும்

விருதுநகர் மாவட்டம், இராசபாளையம் வட்டம், புத்தூர் வருவாயகிராமம் மீனாச்சிபுரம் ஊரின் மேற்குப் பகுதியில் உள்ள ஐந்து குன்றுகளில் மூன்றாவதாக உள்ள குன்றில் உள்ள குகைகளில் வெள்ளை நிற ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன





முதல குகையில் கிழக்குப் பார்த்த நிலையில் கீழ்ப்பகுதியில் உள்ள குகையில், வேட்டைக்காட்சிகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. இவ்வோவியங்களில், வலது மேல் பகுதியில் ஒரு கையின் ஓவியம் ஒன்றும், வலக்கையில் ஆயுதத்துடன் ஒரு மனிதனின் ஓவியம் ஒன்றும் வரையப்பட்டுள்ளன. நடுப்பகுதியில் கதிரவன் காட்சி அளிப்பது போன்ற ஓர் ஓவியம் அமைந்துள்ளது. கீழ்ப்பகுதியில் நீளவாக்கில் போர்க்காட்சிகள் தீட்டப்பட்டுள்ளன. அவற்றில் ஒருபுலியைச் சுற்றிநின்று மனிதர்கள் சிலர் தாக்குவது போன்ற காட்சியும், இன்னொரு விலங்கினை மற்றறொரு கூட்டத்தினர் சுற்றி வளைத்துத் தாக்கித் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து அதன்மேல் ஏறிநின்று ஆரவாரம் செய்வது போன்றும் ஓவியம் தீட்டப்பட்டுள்ளது. கையில் ஆயுதங்களுடன் நிற்கும் மனிதர் சிலரும் உள்ளனர்.

இரண்டாவது குகையில் கிழக்குப் பார்த்த நிலையில் குன்றின் மேல்பகுதியில் ஒரு குகை அமைந்துள்ளது. இக்குகையில், வலது பகுதியில் ஒரு மனிதனும், இடது பகுதியில் ஒரு யானையின் உருவமும் தீட்டப்பட்டுள்ளன.

மூன்றாவது குகையில் இதே குன்றில் மேற்குப் பார்த்த நிலையில், வல ஓரத்தில் கருவுற்ற நிலையில் ஒரு விலங்கும், அதனை அடுத்து நடுப்பகுதியில் வேட்டையாடிய விலங்கினைக் கையில் பிடித்த நிலையில் ஒரு மனிதனும் காட்டப்பட்டுள்ளது. இட ஓரத்தில் வட்டமாக வரையப்பட்டுள்ள ஒரு மனிதன் காணப்படுகிறான்,



முதலாவதாக உள்ள குன்றில் திருமால் சிற்பம் ஒன்று வடக்குபார்த்து செதுக்கப்பட்டுள்ளது.

இது பொ.ஆ. ஒன்பதாம் நூற்றாண்டு ஆகலாம்..

தாமரை மீது நின்ற கோலத்தில் கோட்ட அமைப்பிற்குள் திருமால் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. சிதைந்த நிலையில் இப்போது காணப்படுகிறது.

**ஈ. சங்கரநாராயணன்,**
**தூத்துக்குடி**

# புதிய வெளியீடுகள்

**மா.சந்திரமூர்த்தி, அர. வசந்த கல்யாணி, *திருவேள்விக்குடி ஸ்ரீ மணவாளேஸ்வரர் திருக்கோயில்*, பக்கங்கள் 160, விலை ரூ.125, மணிவாசகர் பதிப்பகம், சென்னை,2016**

தொல்லியல் அறிஞர்களான திரு மா.சந்திரமூர்த்தி, அர. வசந்த கல்யாணி இருவரும் இணைந்து கள ஆய்வு கல்வெட்டு வழியாக எழுதிய நூல் திருவேள்விக்குடி ஸ்ரீ மணவாளேஸ்வரர் திருக்கோயில் என்னும் இந்நூல் சோழநாட்டில் காவேரி பாய்கின்ற பகுதியில் வடகரையில் மூவர் முதலிகளால் பாடல் பெற்ற தலங்களில் குறிப்பிடத்தக்க சிறப்புமிக்க தலம் திருவேள்விக்குடி. இவ்வூரில் அமைந்துள்ள ஸ்ரீ மணவாளேஸ்வரர் கோயிலின் வரலாற்றுச் சிறப்புக்களையும், கோயில் கட்டடக்கலை, சிற்பக்கலை ஆகியவற்றையும் தங்களது நீண்ட நாட்களின் தொல்லியல் அனுபவத்தின் அடிப்படையில் ஆய்வு செய்து மிகச் சிறப்பாக வெளியிட்டுள்ளனர் ஆசிரியர்கள் இருவரும். ஏழு இயல்களாகப் பிரிக்கப்பட்டு மிக எளிய நடையில் அனைவரும் புரிந்துகொள்ளும் வகையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது சிறப்புக்குரியது. இக்கோயிலின் கட்டடக்கலை, சிற்பக்கலை, செப்புத் திருமேனிகள் கல்வெட்டுச் செய்திகள் மற்றும் வழக்காறுகளை உள்ளடக்கிய தலைப்புகளில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. சிற்பங்கள் வரிசையில் கோயிலின் அவ்வவ் பகுதிகளில் எழுப்பப்பட்டுள்ள சிற்பங்களை நேர்த்தியாக சிற்பக்கலையியல் முறைப்படி ஆசிரியர்கள் ஆய்வு செய்துள்ளனர். இக்கோயிலில் உள்ள 52 கல்வெட்டுகளும் படிக்கப்பட்டு அவற்றின் மூலம் பெறப்பட்ட வரலாறு, சமூக பொருளாதார சமயக் கூறுகளை ஆசிரியர்கள் திறம்பட எழுதியுள்ளனர். இவ்வூர் சோழர்காலத்தில் சதுர்வேதி மங்கலமாக இருந்து விரிவு பெற்றதை கல்வெட்டின் வழி நிறுவியுள்ளனர் ஆசிரியர்கள் உள்ளூர் வரலாற்றை அறிவதற்கு இந்நூல் ஒரு சிறந்த ஆய்வு நூலாக அமைந்துள்ளது.

**-சு. இராசவேலு, தஞ்சாவூர்.**

**மா.சந்திரமூர்த்தி, தெ. கல்யாணி, க.ஆ. கவிதா, *வரலாற்றில் அணைக்காட்ட புத்தூர் திருக்கோயில்கள்*, பக்கங்கள் 143, + படங்கள் விலை ரூ.130, சேகர் பதிப்பகம், சென்னை,2018,**

மேற்குறித்த மூன்று ஆசிரியர்களால் எழுதப்பட்ட அணைக்காட்டபுத்தூர் திருக்கோயில்கள் பற்றிய நூல் களஆய்வுகள் கல்வெட்டுகள் மூலம் பெறப்பட்ட செய்திகளின் அடிப்படையில் எழுதப்பட்ட நூலாகும். மறைந்த வெள்ளையாம்பட்டு சுந்தரம் அவர்கள் தொடர்ந்து தொல்லியல் நூல்களை பதிப்பித்து தொல்லியல் கல்வெட்டியல் குறித்த நூல்களை வெளியிட்டு ஊக்கப்படுத்துபவர். தாம் இறப்பதற்கு முன் பதிப்புரை அளித்து இந்நூலை வெளியிட்டுள்ளார். அவரது இழப்பு ஈடுசெய்ய இயலாத இழப்பாக இருப்பினும் சேகர் பதிப்பகம் வழியாக இந்நூல் வருவது போற்றுதலுக்குரியது. இந்நூலில் பல வரலாற்றுச் செய்திகளை ஆசிரியர்கள் விரிவாக எழுதியுள்ளனர். இவ்வூரில் நான்கு கல்வெட்டுகள் இருப்பினும் சோழர்காலத்தில் நடைபெற்ற பல சிறப்பான நிகழ்வுகளை குறிப்பிடும் வகையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. அணைக்காட்டாபுத்தூர் புகழ்பெற்ற தக்கோலத்திற்கு அருகில் இருப்பதால் தக்கோலப்போரின் முக்கியத்துவம் மற்றும் ஆதித்த கரிகாலனைக்

கொன்றமை பற்றிய செய்திகள் இராஜராஜன் எதிரிகளைக் கண்டுபிடித்து தண்டனை வழங்கியமை ஆகியவை திறம்பட ஆய்வு செய்யப்பட்டுள்ளன. பிற்காலத்தைச் சார்ந்த கட்டடக்கலை சிற்பக்கலைக் கூறுகளையும் குறைந்த அளவு கல்வெட்டுக்களைக் கொண்டிருப்பினும் வளமாக வரலாற்றை எழுத முடியும் என்பதற்கு இந்நூல் சாட்சியாக அமைகின்றது. ஆசிரியர்களின் பட்ட அறிவும் பட்டறிவும் அங்காங்கே பளிச்சிடுவது படிப்போருக்கு ஊக்கமளிப்பதாக அமைகின்றது.

**-சு.இராசவேலு, தஞ்சாவூர்**

**ஜெயபால் இரத்தினம், *தமிழக வரலாற்றில் பெரம்பலூர்*, பக்கங்கள் 560+12, விச்சிபதிப்பகம், பெரம்பலூர், விலை- ரூ.700**

வரலாறு அனைவருக்கும் பொதுவானது. வரலாற்று நூல்களை எழுதியவர்கள் அடிப்படையில் வரலாற்றில் பட்டங்கள் பெறாதவர்களாக இருந்தாலும் அவர்கள் எழுதியுள்ள வரலாற்று ஆய்வு நூல்கள் உலகப் புகழ் பெற்றவையாக விளங்கி வருகின்றன. அவ்வகையில் வரலாற்றில் பெரம்பலூர் என்னும் நூலை எழுதிய ஆசிரியர் திரு ஜெயபால் இரத்தினம் உள்ளாட்சித் துறையில் பணியாற்றியவராக இருப்பினும் தான் பிறந்த வளர்ந்த மண்ணின் வரலாற்றை எழுத வேண்டும் என்னும் நீண்ட கால முயற்சியில் முகிழ்ந்த நூலாக இந்நூல் அமைகின்றது. பின் தங்கிய மாவட்டமான பெரம்பலூர் மாவட்டம் குறித்து வரலாற்றை ஆய்வு செய்தவர்கள் ஒரு சில அறிஞர்களே அக்குறையைப் போக்கும் வகையில் வரலாற்றை வகைப்படுத்தி வரலாற்றுக்கு முற்பட்ட கால பெரம்பலூர் வரலாறு தொடங்கி இன்றைய கால கட்டம் வரை உள்ள வரலாற்றை மிக நேர்த்தியாக ஆசிரியர் எழுதியுள்ளமை வரவேற்கத் தக்கது. பல வரலாற்று ஆய்வாளர்களைச் சந்தித்து பல சான்றாதாரங்களைத் திரட்டி இந்நூல் எழுதப்பட்டுள்ளது. இம்மாவட்டத்தின் வரலாற்றை அறிவதற்கு உதவும் நூலாக இந்நூல் அமையும் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. இப்பகுதியில் இருக்கின்ற வரலாற்றுக்கு முற்பட்ட தடயங்களை கண்டும் கேட்டும் இந்நூலை இவ்வாசிரியர் படைத்துள்ளார். மிக அழகான ஒளிப்படங்கள் நேர்த்தியான அச்சு ஆகியவற்றால் இந்நூல் திறம்பட வெளியிடப்பட்டுள்ளது. இதனை எழுதியுள்ள ஆசிரியர் பல ஊர்களுக்கு நேரில் சென்று கள ஆய்வில் கண்டவற்றை சேகரித்து உழைத்து எழுதியுள்ளமை இந்நூல் படிப்போருக்கு நன்கு விளங்கும். குறிப்பிட்ட பகுதியின் வரலாற்றை ஆய்வு செய்வோர்களுக்கு முன்னோடி நூலாக இது அமையும்.

**-சு.இராசவேலு, தஞ்சாவூர்**

**கி.ஸ்ரீதரன், *வழிகாட்டும் கல்வெட்டுகள்*, பக்கம்-102, நாம் தமிழர் பதிப்பகம், சென்னை,2018,விலை-ரூ.100**

தமிழகத் தொல்லியல் துறையில் நீண்ட நெடுங்காலம் பணியாற்றி அத்துறையின் துணை இயக்குநராக இருந்து ஓய்வு பெற்ற ஆசிரியரின் அனுபவத்தில் தாம் படித்து ஆய்வு செய்த தமிழக கல்வெட்டுகளின் சிறப்பியல்புகள் சிலவற்றை கட்டுரையாகக் கொண்டு எழுதப்பட்ட நூல் இதுவாகும். இருபத்தாறு கட்டுரைகளைக் கொண்டு இந்நூல் அமைந்துள்ளது. இக்கட்டுரைகள் பல இதழ்களில் ஏற்கனவே ஆசிரியரால் எழுதப்பட்டவை. குறிப்பாக வரலாற்றுச் செய்திகளுக்குச்

சிறப்பிடம் தரும் கல்கி இதழின் அங்கமாக விளங்கும் தீபம் இதழில் வெளிவந்த கட்டுரைகளைச் செப்பனிட்டு மாணவர்களுக்குப் பயன்பெறும் வகையில் நூலாகத் தொகுத்துள்ளமை பாராட்டுக்குரியது. இக்காலத்தில் கோயில்களை சீர்செய்யும் பொழுது பழையன கழித்து புதியவற்றை புகுத்தி வரலாற்றிற்குக் களங்கம் விளைவிக்கின்றனர். அக்காலத்தில் தாம் அளித்த கொடைகளைக் காக்க வேண்டும் என மன்னர்களும் அரசிகளும் மக்களிடம் வேண்டுவதை கட்டுரை ஒன்று பாடல் வரிகளில் குறிப்பிடுவதை ஆசிரியர் அழகுபட கூறியுள்ளார். நீர் மேலாண்மை குறித்தும் தேர்தல் முறை குறித்தும் மாற்றுத்திறனாளிகளுக்கு அக்கால அரசில் எவ்விதம் சிறப்பிடம் அளிக்கப்பட்டது எனக் குறிப்பிடும் திருவாமாத்தூர் கல்வெட்டின் சிறப்பியல்புகள் குறித்தும் ஆசிரியர் இந்நூலில் குறிப்பிடுகின்றார். இன்றைய நவின கால பல சிந்தனைகளும் அரசின் ஆக்கபூர்வமான செயல்பாடுகளும் இடைக்காலத் தமிழகத்தில் உருவாக்கம் பெற்று சிறந்து விளங்கின என்பதற்கான கட்டுரைகள் பல இந்நூலில் இடம்பெற்றுள்ளன. சுற்றுச்சூழல் பாதுகாப்பு, மக்கள் நலத்திட்டமான மருத்துவச்சாலைகள், சேமிப்பு கிடங்குகள், வரதட்சனை, முதியோர் பாதுகாப்பு, ஆலயப் பராமரிப்பு, தரிசு நில மேம்பாடு., கோடை காலத்தில் நீர்ப்பந்தல் அமைத்தல் போன்ற அருமையான செய்திகளைக் கொண்ட இடைக்காலக் கல்வெட்டுகளை ஆய்ந்து கட்டுரைகளாகத் தந்துள்ளமை போற்றுதலுக்குரியது. அனைவரும் படித்து பயன்பெற வேண்டிய நூல் இதுவாகும்.

**-சு.இராசவேலு,தஞ்சாவூர்**

**கி.ஸ்ரீதரன், *தொல்லியல் நோக்கில்*, பக்கம்-192, நாம் தமிழர் பதிப்பகம், சென்னை,2018,விலை ரூ.200.**

தொல்லியல் துறையில் பல ஆண்டுகள் பணியாற்றி அவ்வப்பொழுது பல இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளைத் தொகுத்து நூலாக ஆக்கியுள்ளார். ஆசிரியர், தமிழகத்தின் வரலாற்றுக்கு முற்பட்ட காலம் தொடங்கி நவின கால வரலாற்றுச் சுவடுகள் வரை தொகுத்து சுவைபட இந்நூலை எழுதியுள்ள ஆசிரியர். இருபத்தொன்பது கட்டுரைகளைக் கொண்டு இந்நூல் வடிவமைக்கப்பட்டுள்ளது. குசஸ்தலை எனப்படும் கோற்றலை ஆற்றில் மிளிந்த பழங்கற்கால நாகரிகம் தொடங்கி தமிழகத்தில் நடைபெற்ற பல தொல்லியல் அகழாய்வு இடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட தரவுகளின் அடிப்படையில் அவற்றின் வரலாற்றை தனித்தனி கட்டுரைகளாக ஆசிரியர் இந்நூலில் எழுதியுள்ளார். தொல்லியிலில் மட்கலன்கள் சிறப்பிடம் பெற்றவை. அவற்றை தொல்லியலின் அகரமுதலி என மேலை நாட்டு தொல்லியலார் குறிப்பிடுவர். அகழாய்வுகளில் கிடைத்த மட்கலன்களின் சிறப்புகளையும் வேட்கோவர் குறித்தும் கட்டுரைகளாக இந்நூலில் இடம்பெயறச் செய்துள்ள ஆசிரியர் அகழாய்வுகளில் கிடைக்கின்ற அருமணிகள், அகல்விளக்குகள், உறைகிணறுகள் குறித்தும் பெண்கள் அணிகின்ற அணிமணிகள் குறித்தும் தனித்தனிக் கட்டுரைகளைச் சிறப்பாக எழுதியுள்ளார். இந்நூல் மாணவர்களுக்கும் புதியதாக தொல்லியல் ஆய்வுகள் மேற்கொள்ளும் ஆர்வலர்களும் பயனுள்ளாத அமையும் என்பதில் எள்ளளவும் அய்யப்பாடில்லை.

**-சு. இராசவேலு, தஞ்சாவூர்**



**திருக்கோயிலூர் கீழூர் வீரட்டானேசுவரர் திருக்கோயில், ஆசிரியர் கவிஞர். கூ. பிச்சைப்பிள்ளை, விஜயா பதிப்பகம், உளுந்தூர்ப்பேட்டை, 2016, பக். 144, விலை. ரூ.120.**

இந்நூலின் ஆசிரியர் கவிஞர் கூ. பிச்சைப்பிள்ளை. இவர் இவ்வூரின் அமைவிடத்தையும், ஊரின் கால வரலாற்றையும் சான்றுகளுடன் கூறுகிறார். வீரட்டானேசுவர கோயிலின் அமைப்பு, நடைபெறும் விழாக்கள், தலபுராணம் ஆகியவற்றை சுருக்கமாக இந்நூலில் எழுதியுள்ளார். மேலும் விநாயகர் அகவல், கபிலரகவல், நடுநாட்டு நாயகன், வீரட்டன் அந்தாதி ஆகிய நூல்களை பற்றி சுருங்கக்கூறியுள்ளார். கோயிலில் காணப்படும் பல்லவ, சோழ, இராட்டிரகூட கல்வெட்டுகளைப் பற்றிய அனைத்து தகவல்களையும் பட்டியலிட்டு மிக எளிமையாகக் கூறுகிறார். பின்னிணைப்பில் இவ்வூர் குறித்து வரும் திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளின் தேவாரம், நாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்த தேவாரம், அருணகிரிநாத சுவாமிகள் திருப்புகழ், சுந்தரர் ஷேத்திரக் கோவை, ஔவையார் அருளிய விநாயகர் அகவல் போன்ற பாடல்களை முழுவதுமாகக் கொடுத்துள்ளார். மேலும் நூல் எழுதுவதற்கு உதவிய மேற்கொள் நூல்களையும் பட்டியலிட்டுள்ளார். இறுதி இணைப்பாக கோயிலின் புகைப்படங்களைக் கொடுத்துள்ளார். சுருங்க கூறின் இந்நூல் அனைத்து மக்களும் விரும்பி படிக்கும் வகையில் சமயக் கருத்தை மட்டுமல்லாது தொல்லியல் கருத்துக்களையும் எளிய நடையில் கூறுகிறது.

**- பெ. தாமரை, சென்னை.**



**வரலாற்றில் திருவெண்ணெய் நல்லூர், ஆசிரியர் கவிஞர். கூ. பிச்சைப்பிள்ளை, விஜயா பதிப்பகம், உளுந்தூர்ப்பேட்டை, 2018, பக். 120, விலை. ரூ.100.**

கடலூர் மாவட்டத்தைச் சேர்ந்த இவர் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வுப்பெற்றவர். இவர் இந்த நூலில் கோயிலுக்கு செல்லும் வழியில் துவங்கி கோயிலின் சிறப்பு, வரலாறு, கோயிலின் அமைப்பு மற்றும் நடைபெறும் விழாக்கள் பற்றிய செய்திகளைச் சுருக்கமாக

கூறியுள்ளார். சைவ சமயம் பற்றியும், நால்வரின் வரலாறு பற்றியும் குறிப்புகளைக் கொடுத்துள்ளார். கோயிலில் உள்ள சிற்பங்களின் அமைப்பையும் கோயில் கல்வெட்டுகளையும் விவரித்துள்ளார். திருவெண்ணெய் நல்லூருக்கும் சுதந்திரப் போராட்டத்திற்கும் உள்ள வரலாற்றுத் தொடர்புச் செய்திகளை இந்நூலில் குறிப்பிட்டுள்ளார். திருவெண்ணெய்நல்லூர் புலவர். வடிவேல் முதலியார் இயற்றியருளிய திருவருட்டுறைப் புராணம் பற்றி விரிவாக இந்த நூலில் விவரித்துள்ளார். கல்வெட்டுச் செய்திகளாக சிவன் கோயில் கல்வெட்டுச் செய்திகளையும், திருவெண்ணெய்நல்லூர் வைகுந்த பெருமாள் கோயில் கல்வெட்டு செய்திகளையும் நூலில் குறிப்பிட்டுள்ளார். பின்னிணைப்பாக நூல் எழுதுவதற்கு உதவிய துணைநூல் பட்டியல்களையும் குறிப்பிட்டுள்ளார். மேலும் திருவெண்ணெய்நல்லூரைப் போற்றிய பாடல்களான சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய திருவெண்ணெய்நல்லூர்த் திருப்பதிகம், தேவாரப் பாடல்கள், பெரியப்புராணம், திருப்புகழ், மெய்கண்டார் துதி, திருவருட்பா, திருவெண்ணெய்க் கலம்பகம் போன்ற பாடல்களையும் முழுவதுமாக இடம்பெறச் செய்துள்ளார். பின்னிணைப்பில் முடிவாக இவ்வூர் பற்றிய பொதுவிவரங்களான இவ்வூரின் இட அமைப்பு, மக்கட்தொகை, கல்வி நிறுவனங்கள், தண்ணீர் வசதி போன்றவற்றையும் கூறியுள்ளார். நூலின் இறுதியில் கோயிலின் புகைப்படங்களை இணைத்துள்ளார்.

**- பெ. தாமரை, சென்னை.**




***தேடித் திரிவோம் வா*, ஆசிரியர் வே. ராஜகுரு. இராமநாதபுரம் தொல்லியல் ஆய்வு நிறுவனம், இராமநாதபுரம், 2018, பக்.96, விலை. ரூ.150.**

தேடித் திரிவோம் வா... இன்றைய காலக்கட்டத்திற்கு மிக மிக அவசியமான மதிப்புமிக்க நூல். இந்த நூலினைப் பற்றி கூற வேண்டுமானால் நூலைப்பற்றி முதலில் கூறுவதா, இல்லை இந்த நூலினைத் தொகுத்த ஆசிரியரைப் பற்றி கூறுவதா என்று குழப்பம் ஏற்படுகிறது. எனினும் நாம் ஆசிரியரைப் பற்றியே முதலில் தெரிந்துக்கொள்ளலாம். நூலின் ஆசிரியர் வே. இராஜகுரு. இவர் இராமநாதபுர மாவட்டம் திருபுல்லாணியில் அரசு மேல்நிலைப் பள்ளியில் ஆங்கில மொழிப் பாட ஆசிரியராக உள்ளார். இவர் தனது பள்ளியில் 'தொன்மைப் பாதுகாப்பு மன்றம்' என்னும் அமைப்பு நிறுவி மாணவர்களிடையே வரலாறு பற்றிய ஆர்வத்தைத் தூண்டி வளர்த்து வருகிறார். அத்தோடு மட்டுமல்லாது இந்த நூலினை அவர்களை

கொண்டே தொகுத்தது பாராட்டுக்குரியதாகும். இந்த மன்றத்தில் இவரால் பயிற்றுவிக்கப்பட்ட மாணவர்கள் ஊரின் வரலாறு, பெயர் காரணம், கோயிலின் வரலாறு மற்றும் வழிபாடும் முறை, தொல்லியல் சின்னங்கள், கல்வெட்டு படியெடுக்கும் முறை, நீர்நிலை என்பன பற்றி தகவல் சேகரித்து அழகான புகைப்படங்களுடன் கட்டுரைகளாக கொடுத்துள்ளனர். இதுபோன்ற முயற்சிகளே இன்றைய/இனிவரும் காலங்களில் மாணவர்களிடையே வரலாறு, வரலாற்று சின்னங்கள், கலாச்சார மற்றும் பண்பாடு பற்றிய மதிப்பினை உண்டாக்கும். மேலும் மேலும் இதுபோன்ற நூல்களை அளிக்குமாறு ஆசிரியரையும், அவருடைய மாணவர்களையும் கேட்டுக்கொள்கிறோம்.

**- பெ. தாமரை, சென்னை.**

**ச. செல்வராஜ், *'தொல்லியல் தமிழர் பண்பாட்டின் வெளிச்சம்-மட்கலன்கள்'*, நாம் தமிழர் பதிப்பகம், சென்னை - 05. தொலைப்பேசி எண்கள்: 9790706549/ 9790706548. பக்கம்: 168, விலை ரூ. 160.**




தொல்பொருட்களில் அதிக அளவில் கிடைப்பதும் எந்த ஒரு கள ஆய்வு, அகழாய்வுகளில் பலகாலம் மண்ணில் புதைந்திருந்த போதிலும் அவை அழியாதவை. இன்று மட்கலன்களின் பயன்பாடு பெருமளவில் இல்லாது போயுள்ள நிலையில் அவற்றின் சிறப்பு நாம் அறியாது போனாலும் வரலாற்றுத் தொடக்க காலம் முதல் சமூகப் பொருளாதாரப் பண்பாட்டை அறிந்து கொள்ள நமக்குப் பெரிது உதவியாக உள்ளவை. மட்டகலன்களே ஆகும். மட்கலன்களின் வரலாற்றினை புராணங்கள் சங்க இலக்கியங்கள் கல்வெட்டுகள் அகழாய்வுகள் உதவியுடன் இந்நூல் விரிவாகக் கூறுகிறது. மூலப்பொருட்கள், உருவாக்கும் வேட்கோவர்/குயவர், உருவாக்கும் தொழில்நுட்பம் என்று தொடர்புடைய ஒவ்வொரு தகவலும் திரட்டித்தரப்பட்டுள்ளது. 32 ஆண்டுகள் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையில் அகழ்வாய்வாளராகப் பல அகழாய்வுகளில் பணியாற்றிய பட்டறிவின் காரணமாக மட்கலன்களைக் குறியீடு உள்ளவை, எழுத்துப் பொறித்தவை, அயல்நாட்டைச் சேர்ந்தவை, வடநாட்டைச் சேர்ந்தவை, நிறவேறுபாடுகள் என்று விரிவாக அறிந்து கொள்ளப் பயன்படும் வகையில் இந்நூல் பட விளக்கங்களுடன் அமைந்துள்ளது. நூலாசிரியரின் சேகரிப்பும் உழைப்பும் பட்டறிவும் மாணவர், ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் என எல்லோருக்கும் பயன்படும் வகையில் இந்நூலில் வெளிப்பட்டுள்ளது.

**-சு.இராசகோபால், சென்னை.**




**ச. செல்வராஜ், *'புதையுண்ட தமிழகம்'*, 2018, நாம் தமிழர் பதிப்பகம், சென்னை - 05, தொலைபேசி எண்கள்: 9790706549/9790706548. பக்க எண்: 472. விலை ரூ. 450.**

தனது முனைவர் பட்ட ஆய்வேடு சூழ்நிலைக் காரணங்களால் முனைவர் பட்டம் வாங்கித் தரவில்லை தொல்லியல் மணி என்ற பிரிவில் 45 வாரங்கள் வெளியிட்டதின் காரணமாக விரிவான பட விளக்கங்களுடன் தமிழறிந்தோரிடம் சென்றடைந்த கருத்துக்களும் செய்திகளும் முத்தாய்ப்பாய் இடம் பெற்றுள்ள நூல் இது தமிழத் தொல்லியல், அகழ்வாய்வு பற்றி விரைந்து அறிந்து கொள்ள உதவும் புதிய வரவு இந்நூல். தொல்லியல் வரலாற்றை கற்காலம், பெருங்கற்காலம், வரலாற்றுக் காலம் என்ற பிரிவுகளில் அகழ்ந்தெடுக்கப்பட்ட தொல்பொருட்களின் வழியே விளக்கிக் கூற இந்நூலாசிரியர் தொல்லியல் துறையில் பல்லாண்டு காலம் பல்வேறு அகழாய்வுகளில் ஈடுபட்டதின் பட்டறிவே மூலதனமாகும்.

கற்காலக் கருவிகள் கிடைத்த இடங்கள் பெயர்கள், படங்கள் வகைகள் நம்மை மிக ஆச்சரியப்படுத்துகின்றன. எழுத்துச் சான்றுகள் இல்லாத இக்காலக் கட்டத்தையும் சமூகப்பொருளாதாரப் பண்பாட்டையும் எளிதில் புரிந்துகொள்ள இந்நூல் துணை செய்கின்றது. பெருங்கற்காலம் ஈமச்சின்னங்கள் அடங்கிய காலப்பகுதியாகும். இரும்புக்காலமும் கூட இக்காலப் பெருங்கற்சின்னங்களின் வகைகள் காணப்படும் இடங்கள் அகழாய்வுகள் நிகழ்ந்த இடங்கள் வெளிப்பட்ட தொல்பொருள்கள் பண்பாடு என்று நூலாசிரியர் தரும் செய்திகள் எவருக்கும் மிகவும் பயன்படுபவை. ஆதிச்சநல்லூர், கொடுமணல், பொருந்தல், பூம்புகார் அகழாய்வுகளில் கிடைத்த தொல்பொருட்களின் விவரமும் படங்களும் நல்லதொரு தொகுப்பாகும். நல்ல உழைப்பிலும் 'புதையுண்ட தமிழகம்' என்ற தலைப்புகு ஏற்ப இந்நூல் நல்லதொரு செய்திக் களஞ்சியமாகும்.

**-சு.இராசகோபால், சென்னை.**

கிருஷ்ணகிரி மாவட்ட வரலாற்று ஆய்வு மையம் வெளியீடுகள்: ரிகிறி கல்யாண மண்டப வளாகம் ஓசூர் - 635109. தொடர்புக்கு: 984247101.

**1. *கிருஷ்ணகிரி ஊரும் பேரும்*** - முனைவர் கோ. சீனிவாசன், 2018, விலை ரூ. 200, பக்கம் 266.

**2. *காவேரிப்பட்டணம் பட்டயங்கள்***, புது. பொ. வேங்கடராமன், 2018. விலை ரூ. 10, பக்கம் 24.

**3. *அத்திமுகத்து அழகிய சோளீஸ்வரம்:*** செ. கோவிந்தராஜ், 2018, விலை ரூ. 30, பக்கம் 44.

**4. *மல்லப்பாடி - தொல்கிராமம்***: சுகவன முருகன், எஸ். பரந்தாமன், 2018, விலை ரூ. 10, பக்கங்கள் 20.

**5. கெவிச்சித்திரங்கள்**: சுகவனமுருகன், 2018, விலை ரூ. 300, பக்கம் 132, ஆர்ட் பேப்பர், வண்ணப்படங்கள், கருப்பு வெள்ளைப் படங்கள், 2 பக்க முன்னுரை மட்டும் எழுத்து. அனைத்துப் படங்கள்.

மேல்நாள் சட்டசபை உறுப்பினர் திரு. ரி.கி.மனோகரன் அவர்கள் தலைமையிலும் புரவலர் வழி ஆதரவிலும் செயல்பட்டு வரும் இது வரலாற்று ஆய்வு மையத்தின் தமிழக வரலாற்றிற்கான தொண்டு தூய உள்ளத்தோடு நிகழவது தமிழகத் தொல்லியலாருக்குக் கிடைத்த நற்பேறு ஆகும். சிறு சிறு நூல்களாகவும் விரிவான நூல்களாகவும் கிருஷ்ணகிரி வட்டம் வரலாற்றுச் செய்திகளை தொண்டுள்ளத்தோடும், பெரு மகிழ்வுடனும் இந்த வரலாற்று ஆய்வு மையம் வெளியிடுவது போற்றுதலுக்குரியது. முதலில் சுட்டிய 'ஊரும் பேரும்' நூலில் காட்டப்படும் ஊர்கள் அனைத்திற்கும் ஆர்வலர்கள் சென்று தொல்லியல் செய்திகளை வெளிப்படுத்தினாலே அது உலகளவு சாதனையாக வெளிவரும். அதற்கான ஊக்கத்தை இவ்வரலாற்று ஆய்வு மையம் கிளரி, வழிகாட்டுகிறது என்றால் மிகையில்லை.

**-சு.இராசகோபால், சென்னை.**

# தொல்லியல் கழக 28ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் செயலர் அறிக்கை

தொல்லியல் கழகத்தின் 28 ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் மற்றும் ஆவணம் 29 இதழ் வெளியீட்டு விழா திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று ஆய்வு நடுவம் ஏற்பாட்டில் நமது கழக உறுப்பினரான ச.பாலமுருகன் உள்ளூர் செயலராக இருந்து திருவண்ணாமலை நகரத்தில் ஜூலை மாதம் 21,22 ஆகிய இருநாட்கள் ஆண்டாள் சிங்காரவேலு திருமண மண்டபத்தில் இனிதே நடைபெற்றது. தொடக்க விழா மற்றும் ஆவணம் இதழ் மற்றும் தொல்லியல் கல்வெட்டியல் சார்ந்த நூல்கள் பல இக்கருத்தரங்கின் தொடக்க விழாவில் வெளியிடப்பட்டது.

முதல் நாள் தொடக்கவிழா தமிழ்த்தாய் வாழ்த்துடன் தொடங்க வரவேற்புரையைத் தொல்லியல் கழகத்தின் செயலர் பேரா.சு. இராசவேலு வழங்க கழகத்தின் துணைத் தலைவர் செந்தீ நடராஜன் அவர்கள் தலைமை ஏற்று நடத்தினார். கருத்தரங்க நோக்கவுரையை முதுபெரும் பேராசிரியர் எ.சுப்பராயலு அவர்கள் நிகழ்த்தினார்கள். கருத்தரங்கம் மற்றும் தொல்லியல் ஒளிப்பட, அரும்பொருள் கண்காட்சிகளை இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் மான்புமிகு சேவூர் எஸ். இராமச்சந்திரன் அவர்கள் தொடங்கி வைத்து சிறப்புரை ஆற்றினார். இத்தொடக்கவிழாவில் மாண்புமிகு நீதியரசர் என். கிருபாகரன் அவர்கள் ஆவணம் இதழ் 29 மற்றும் தொல்லியல் கல்வெட்டியல் தொடர்பான நூல்கள் பலவற்றை வெளியிட்டுச் சிறப்புரை ஆற்றினார். திருவண்ணாமலை வரலாற்று ஆய்வு நடுவம் தயாரித்த திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று வரைபடம் அந்நடுவத்தின் வலைத்தளம் மற்றும் குறுஞ்செயலி ஆகியவற்றை மாவட்ட ஆட்சியர் திரு க.சு. கந்தசாமி அவர்கள் வெளியிட்டார். முன்னர் செயலர் திரு. த. பிச்சாண்டி இ.ஆ.ப அவர்கள் திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று சிறப்பு வாய்ந்த இடங்கள் குறித்த நூலினை வெளியிட்டார். உள்ளூர் செயலர் திரு. ச. பாலமுருகன் நன்றி நவிழ தொடக்கவிழா நிகழ்வுகள் இனிதே நடந்து முடிந்தன.

இக்கருத்தரங்க விழாவில் ஒருங்கினைந்த வடஆர்க்காடு மாவட்டத்தைச் சார்ந்த தொல்லியல் மற்றும் வரலாற்றுத்துறையில் சிறப்பாக பணியாற்றிய அறிஞர் பெருமக்களுக்கு விருதுகள் வழங்கி சிறப்பிக்கப்பட்டது. விருதுகள் பெற்றோர் விவரம் கீழ்வருமாறு

நன்னன் விருது - திரு.கு.வெங்கடாசலம்

நவிரம் விருது - முனைவர் ர. பூங்குன்றன

அதியமான் விருது - முனைவர் மா.காந்தி

வி.வெங்கையா விருது - பேரா.சு. இராசவேலு

பேரா.தங்கவேலு விருது - பேரா. இல. தியாகராஜன்

பத்மபூஷன் களம்பூர் சிவராமமூர்த்தி விருது - முனைவர் து. தயாளன்

முனைவர் கி.குமார் விருது - திரு. ப. வெங்கடேசன்

முதல் நாள் பிற்பகல் கருத்தரங்க அமர்வுகள் தொடங்கப்பட்டன. முதல் அமர்வு வரவேற்புரையை திரு. த. ம. பிரகாஷ் தலைவர், திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று ஆய்வு நடுவம் நிகழ்த்த முனைவர் இரா.சேகர் முதல்வர் , கலாநிதி துளசிதாஸ் ஜெயின் கலை மற்றும் அறிவியல் கல்லூரி வேலூர், அவர்கள் தலைமை ஏற்று நடத்தினார்.

இரண்டாம் அமர்வினை பேரா. சு. பிரேம்குமார் முன்னிலை வகிக்க தொல்லியல் ஆய்வாளர் திரு.மா.சந்திரமூர்த்தி அவர்கள் தலைமையேற்று நடத்தினார்.

மாலையில் பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவிய தி.ந. சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவினை மேனாள் சென்னைப்பல்கலைக்கழக பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் துறைத்தலைவர் ப. சன்முகம் அவர்கள் வழங்கிட இவ்வறக்கட்டளைச் சொற்பொழிவினை பேராசிரியர் எ. சுப்பராயலு அவர்கள் தலைமை ஏற்று நடத்தினார்.

அறக்கட்டளைச் சொற்பொழிவுக்குப் பின் முதல் நாள் மூன்றாம் அமர்வினை பேரா, ரா, ஸ்தனிஸ்லாஸ் முன்னிலை வகிக்க கல்வெட்டு ஆய்வாளர் திரு. சி. வீர்ராகவன் தலைமை ஏற்று நடத்தினார்.

22-07-2018 இரண்டாம் நாள் காலை 10 மணியளவில் கோவிலூர் ஆதினம் அறக்கட்டளைச் சொற்பொழிவினை திரு. வில்லியனூர் வெங்கடேசன் அவர்கள் நிகழ்த்தினார்கள். அறக்கட்டளைச் சொற்பொழிவினை திரு.சு. நீதிதாஸ் விஜயராஜ் இணைச்செயலர், திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று நடுவம் முன்னிலை வகிக்க பேராசிரியர் இல. தியாகராஜன் தலைமை ஏற்று நடத்தினார்.

தொடர்ந்து கருத்தரங்கின் நான்காம் அமர்வு நடைபெற்றது. இவ்வமர்வினை க.விநாயகம் முன்னிலை வகிக்க பேராசிரியர். சு. இராசவேலு தலைமை ஏற்று நடத்தினார்.

திருவண்ணாமலை மாவட்ட வரலாறு - தொல்லியல் குறித்த சிறப்பு கலந்துரையரங்கம் ஒன்றும் இக்கருத்தரங்கில் முனைவர் ர, பூங்குன்றன் தலைமையில் நடைபெற்றது.இக்கலந்துரையரங்கத்தில் பேரா. எ.சுப்பராயலு, இல. தியாகராஜன், து.தயாளன், ப. வெங்கடேசன் ஆகியோர் மற்றும் மாவட்டத்தின் வரலாற்று ஆர்வலர்கள் பலர் கலந்து கொண்டு கலந்துரையாடினர். இக்கலந்துரையாடலை மாவட்ட செயற்குழு உறுப்பினர் க. விநாயகம், ரேகன்போக் இந்திய பவுண்டேஷன் திரு.கோ.மதன்மோகன், புகைப்பட கலைஞர் திரு. சு. சேது ஆகியோர் முன்னிலை வகித்தனர்.

இரண்டாம் நாள் இறுதி அமர்வினை முனைவர் சு.இராசகோபால் முன்னிலை வகிக்க பேரா.ப. சன்முகம் அவர்கள் தலைமை ஏற்று நடத்தினார்கள். இவ்வணைத்து அமர்வுகளிலும் புதியதாக கண்டுபிடிக்கப்பட்ட தொல்லியல் கல்வெட்டுகள் குறித்து ஆய்வுக்கட்டுரைகள் கண்டுபிடிப்பாளர்களால் அளிக்கப்பட்டன. இவ்விரண்டு நாள் கருத்தரங்கத்தின் நிறைவு விழாவினை முனைவர் சொ. சாந்தலிங்கம் முன்னிலை வகிக்க பேரா.எ.சுப்பராயலு தலைமை ஏற்று நடத்தினார்கள். வரவேற்புரையை கழகத்தின் செயலர் பேரா.சு. இராசவேலு நிகழ்த்த நன்றியுரையினை திரு. மு.கா. மணியரசன் அவர்கள் வழங்கினார்கள். தொடர்ந்து கழகத்தின் பொதுக்குழு கூடி இனிதே இரண்டு நாள் கருத்தரங்கம் முடிவுற்றது.

இக்கருத்தரங்க நிகழ்வின் ஓர் அங்கமாக முனைவர் சு. இராஜகோபால் தலைமையில் கருத்தரங்கத்திற்கு முன்னதாக நான்கு நாட்கள் கல்வெடுப்பயிற்சி பல்வேறு அறிஞர்களின் வழிகாட்டலில் நடைபெற்றது. தமிழகத்தின் பல பகுதிகளிலிருந்து 100க்கும் மேற்பட்ட ஆர்வலர்கள் கல்வெட்டுப் பயிற்சியில் பங்கு பெற்றனர். இக்கல்வெட்டுப் பயிற்சி முடித்தவர்களுக்கு சான்றிதழ்கள் அளிக்கப்பட்டன. மேலும் கருத்தரங்கின் இரண்டாம் நாள் காலை கருத்தரங்கில் பங்கு பெற்றவர்களுக்கு தானிப்பாடி அருகிலுள்ள மோட்டூர் தாய்த்தெய்வ சின்னத்தைப் பார்வையிட தொல்லியல் சுற்றுலா மேற்கொள்ளப்பட்டது.திருவண்ணாமலை மாவட்டத்தின் தொன்மை வரலாறு குறித்தும் மோட்டூர் தாய்த்தெய்வ சிறப்பினைக் குறித்தும் கழகத்தின் செயலர் பேரா. சு. இராசவேலு களத்தில் நேரிடை விளக்கங்கள் அளித்துப் பேசினார்.

# அஞ்சலி

## ஐராவதம்மகாதேவன்(1930-2018)

எ. சுப்பராயலு



கல்வெட்டியல் அறிஞர் திரு ஐராவதம்மகாதேவன் அவர்கள் மறைவு தமிழுலகுக்கு ஒரு பேரிழப்பாகும். அவர் தமிழ்ப்பிராமி என்று குறிப்பிடப்படும் பழந்தமிழ் எழுத்து முறை பற்றிய ஆராய்ச்சியை மேலெடுத்துச் சென்று, பழந்தமிழ் மொழியின் தொடக்க காலத்தைப் பற்றிப்புரிந்து கொள்ள வழிசெய்தார் என்பதில் மாற்றுக் கருத்து இருக்க முடியாது. அதேபோல் சிந்துவெளி நாகரிகத்தில் வழங்கிய எழுத்துக்களுக்கு ஒரு முறையான தொடரடைவு (Concordance) தொகுத்து வெளியிட்ட வகையிலும் அவருக்குப் பெருமையுண்டு. இரு துறைகளிலும் பல ஆண்டுகள் அயராது உழைத்தார் என்பதை வலியுறுத்த வேண்டும். அவருடைய 88 ஆண்டுக்கால வாழ்க்கையில் பெரும்பகுதியை இவ்வாய்வுப் பணிக்காக அர்ப்பணித்தார்.

உயர்கல்வி முடித்து 24ஆம் வயதில் இந்திய ஆட்சிப்பணியில் (IAS) சேர்ந்தார். அப்பணிக்காலத்தில் தில்லியிலும் சென்னையிலும் மாறிமாறிப் பல நிலைகளில் ஏறக்குறைய 25 ஆண்டுகள் பணியாற்றி விட்டு 50 வயது முடியும் நேரத்தில் விருப்ப ஓய்வு பெற்று ஆராய்ச்சிப் பணிகளில் ஈடுபட்டார். அதன்பின் சில ஆண்டுகள் இந்தியன் எக்ஸ்பிரஸ், தினமணி செய்தித்தாள் அலுவலகங்களில் பணிமேற்கொண்டார். 1987-91இல் தினமணியின் முதன்மைப் பதிப்பாசிரியராக இருந்தபோது தினமணியின் தமிழையும் தரத்தையும் சீர்திருத்தம் செய்தமை இன்றும் பாராட்டப் பெறுகிறது.

அரசுப்பணியில் இருந்தபொழுது முதலில் பழங்காசுகளைத் தேடிச் சேர்த்து அவற்றைப் பற்றிக் கட்டுரைகள் எழுதுவதைப் பொழுதுபோக்காக மேற்கொண்டார். 1960இலிருந்தே கல்வெட்டியலில் நாட்டம் கொண்டு தமிழ்ப்பிராமி எழுத்துக்களை முறையாகப் படிக்கத் தொடங்கினார். 1960களின் முற்பகுதி தமிழ்க் கல்வெட்டியலின் வளர்ச்சிக்குப் பல வகையில் உகந்த கட்டமாக இருந்தது. மேலும் 1960-61 இல் நிறுவப்பட்ட தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை 1965 முதல் கல்வெட்டுக்களைத் தொகுக்கும் பணியையும் மேற்கொண்டது. முதல் இயக்குநராக நியமனம் பெற்ற இரா. நாகசாமி தமிழ்க் கல்வெட்டியல் வளர்ச்சிக்கு நிறையப் பங்களிப்புச் செய்தார். ஐராவதம் மகாதேவன் ஆய்வுக்கு அவர் ஊக்கமளித்தார். கள ஆய்வில் உறுதுணையாக இருந்தார். இதே நேரத்தில் சென்னை எழும்பூர் அருங்காட்சியகத்தில்

தென்னிந்தியத் தொல்லியல் கழகம் நடத்தி வந்தமாதச் சொற்பொழிவுகளில் நீலகண்ட சாஸ்திரி போன்ற பெரிய வரலாற்றாசிரியர்கள் கட்டுரை படித்தனர். இக்கூட்டங்களில் மகாதேவன் கலந்து கொள்வது வழக்கம்.

இந்தச் சூழலில்தான் ஐராவதம்மகாதேவன் தமிழ்ப்பிராமி கல்வெட்டுகளை நேரில் சென்று படிக்கும் முயற்சியில் ஈடுபட்டார். அந்த வகையில், புகழூர் மலைப் பாறையில் பொறிக்கப்பட்டிருந்த கல்வெட்டுக்களை நேரில் படித்தும், விளம்பல்படி (tracing) எடுத்தும் அவற்றை முழுவதுமாகப் படித்து அவை மூன்று சேர அரசர் பெயர் கொண்ட கல்வெட்டுக்கள் என்று 'இந்து' நாளிதழில் 1965 மார்ச் 15இல் வெளியிட்டார். இந்தச் செய்தி பண்டைத் தமிழக வரலாற்றுக்கு ஒரு புதிய ஒளியைத் தந்தது எனலாம். இது மகாதேவனுக்கும் நிறைய உற்சாகத்தைக் கொடுத்தது. 1962 தொடங்கி அவர் களப் பணியில் சேர்த்த எழுபது கல்வெட்டுக்களை விளம்பல் படிகளோடு 1966இல் சென்னை ராஜாஜி மண்டபத்தில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை நடத்திய கல்வெட்டுக் கருத்தரங்கில் படித்து விளக்கினார். தொடர்ந்து 1968இல் சென்னையில் நடந்த உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் இக்கல்வெட்டுக்களைப் பகுப்பாய்வு செய்து அவற்றின் பல வகையான செய்திகளைப் பற்றி ஒரு நீண்ட கட்டுரை கொடுத்தார்.

இதையடுத்து 1970 தொடங்கி சிந்துவெளி நாகரிகத்தில் வழங்கிய எழுத்துக்களைப் படிக்கும் முயற்சியில் அவர் ஈடுபட்டார். அதற்கு முன்னோடியாக, நூற்றுக்கணக்கிலிருந்த அவ்வெழுத்துக்களுக்கு ஒரு அடைவு செய்ய முனைந்தார். அம்முயற்சி 1977இல் வெளியிட்ட ஒரு தொடரடைவாக உருப்பெற்றது. முதன் முதல் இவ்வெழுத்துக்களுக்குச் செய்யப்பட்ட அடைவு இதுவே. இதற்குப் பின்னரே பின்லாந்துநாட்டைச் சேர்ந்த பேராசிரியர் அஸ்கோபர்போலா குழுவினர் இன்னும் ஒரு பெரிய தொடரடைவை முத்திரைகளின் வண்ணப்படங்களோடு வெளியிட்டனர்.

1980களில் பெரும்பாலும் சிந்துவெளி எழுத்துக்களைப் பற்றி அறிவதில் முனைந்தார். சில கட்டுரைகள் எழுதி வந்தார். அகழாய்வுகளில் கிடைத்த மட்கலங்களில் உள்ள பிராமி எழுத்துக்களிலும் நாட்டஞ்செலுத்தினார். 1990க்கு மேல் மீண்டும் தமிழ்ப்பிராமி ஆய்வில் சுறுசுறுப்படைந்தார் என்று சொல்ல வேண்டும். இவ்வேளையில் கொடுமணல் மட்கலப்பொறிப்புக்களைப் படிக்க ஆர்வங்கொண்டார். அரிக்கமேடு மட்கலப் பொறிப்புக்களைப் படித்து அதை விமலாபெக்லெ வெளியிட்ட அகழாய்வு அறிக்கையில் வெளியிட உதவினார். எல்லாவற்றுக்கும் மேலாக 1991-96இல் மீண்டும் களஆய்வு செய்து அதுவரை கண்டறிந்த எல்லா பிராமிக் கல்வெட்டுக்களையும் விரிவாகப் பதிப்பிக்கும் திட்டத்தை மேற்கொண்டார். இக்களஆய்வில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் தேர்ந்த கல்வெட்டியல் ஆய்வாளர் பலர் செய்த உதவிகளுக்கு நன்றி பாராட்டியுள்ளார்.

பத்து ஆண்டுகள் கடும் உழைப்புக்குப் பின் அவர் நோக்கம் நிறைவேறியது. 1966-68களில் வெளியிட்ட செய்திகளை விரிவுபடுத்தியும் கூடுதலான பல கல்வெட்டுக்களைச் சேர்த்தும் அந்த நூலைப் பண்டைய தமிழ்க்கல்வெட்டியல் (Early Tamil Epigraphy) என்ற பெயரில் க்ரியா பதிப்பகம் மற்றும் அமெரிக்க ஹார்வர்டு பல்கலைக்கழகம் இணைந்து 2003இல் வெளியிட்டன. பல ஆண்டுகள் உழைப்பின் முத்தாய்ப்பாக வெளியான இந்நூலில் தமிழ்ப்பிராமி ஆராய்ச்சியின் ஒரு

நூற்றாண்டுக் கால வரலாற்றை விரிவாகச் சொல்லியுள்ளார்.

தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுகளை முதலில் புதிரவிழ்த்து வரலாறு படைத்தவர் தமிழ்க்கல்வெட்டறிஞர் கே.வி. சுப்பிரமணியஅய்யர் (1924). மேலும் இவ்வெழுத்துக்களின் அமைப்பை விளக்கியவர் தி.நா. சுப்பிரமணியன்(1938). இருவருடைய பணிகளையும் மகாதேவன் நன்கு மதிப்பிட்டுள்ளார். (தி.நா. சுப்பிரமணியன் அவர்கள் பணியைப் போற்றும் வகையில் அவர் பெயரில் ஐராவதம் மகாதேவன் தமிழகத் தொல்லியல் கழகத்தில் அறக்கட்டளை நிறுவியுள்ளதை இங்கு நினைவு கூரலாம்.) இதையடுத்துக் கல்வெட்டுக்களின் காலக் கணிப்பு, அவற்றின் மொழியமைப்பு, இலக்கணக் கூறுகள், விரவிவந்துள்ள பிராகிருதச் சொற்களின் தன்மை, கல்வெட்டுக்கள் மூலம் அறியப்படும் அரசமைப்பு, சமூகம், பிற வரலாற்றுச் செய்திகள் ஆகியவற்றையெல்லாம் விளக்கிவிட்டு, ஒவ்வொரு கல்வெட்டுக்கும் அதன் பாடத்தை (ஆங்கில எழுத்திலும் தமிழிலும்) விளம்பல் படங்களோடுஅவர் கொடுத்துள்ளார். இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ள சொற்கள், தொடர்கள் பற்றிய விரிவான அட்டவணைகள் மேலும் ஆராய்ச்சி மேற்கொள்வோருக்கு உதவும். இந்நூலுக்கு நிறைய வரவேற்பு இருந்தது. அதைப்பற்றி வந்த நூல் மதிப்பீடுகளே அதற்குச் சான்று பகரும். பழந்தமிழ் மொழிக்கும் தமிழக வரலாற்றுக்கும் அடிப்படைச் சான்றுகள் தரும் நல்ல சுட்டுநூலாகப் பல ஆண்டுகள் இது போற்றப்படும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது.

இதற்குப்பின் சிந்துவெளி எழுத்துக்கள் பற்றி ஒரு முழுநூல் எழுதும் முயற்சியில் மகாதேவன் ஈடுபட்டார். ஆயினும் தமிழ்ச் செம்மொழி நிறுவனம் கேட்டதற்கிணங்கச் சில ஆண்டுகள் மேற்குறிப்பிட்ட நூலை மறுபதிப்பு செய்யும் பணியில் செலவிட்டார். அந்நிறுவனம் செயல் குன்றி முடங்கி வந்தநிலையில் 2014இல் இந்நூல் வெளியானதால் அவ்வளவாக மக்களைச் சென்றடையவில்லை. இந்தநூல் ஓரளவுக்கு அவருக்கு மனநிறைவைக் கொடுத்தாலும் இன்னொரு வகையில் தன் அரிய வாழ்நாட்காலத்தில் ஐந்து ஆண்டுகள் வீணாகிவிட்டன என்று வருத்தப்பட்டதாகத் தெரிகிறது. சிந்துவெளி எழுத்துக்கள் பற்றிய நூல் முற்றுப்பெறாததற்கு இது ஒரு முக்கிய காரணம். இருப்பினும் அவர் தன் ஆய்வுக் குறிப்புக்களைத் தொடர்ந்து நேர்த்தியாக நோட்டுப் புத்தகங்களில் எழுதி வந்துள்ளார். அவற்றை ரோஜா முத்தையா நூலகத்தில் வைத்து எதிர்கால ஆய்வாளருக்குப் பயன்படும் வகையில் உதவக் கேட்டுள்ளார்.

ஐராவதம் மகாதேவன் தமிழகத் தொல்லியல் கழகத்தில் தொடக்கம் முதல் உறுப்பினராகவும் புரவலராகவும் இருந்து அதன் வளர்ச்சியில் பெரும் அக்கரை கொண்டிருந்தார். அவர்களின் பன்முக ஆய்வுகளை நினைவு கூர்ந்து போற்றும் நிலையில் அதுவெறும் வீரவணக்கமாக அமைந்துவிடக் கூடாது. அவர்விட்டுச் சென்ற பணிகளைத் தொடர வேண்டும். அவர் பணியில் உள்ள நிறைகுறைகளை ஆராய்ந்து அவர் பணியை மேலெடுத்துச் செல்வதே அவருக்குச் செலுத்தும் நன்றிக் கடப்பாடாக அமையும்.

## ஐராவதம் மகாதேவனின் சில முக்கிய ஆய்வுப் படைப்புகள்

**1965 (March 15). 'Chera Inscriptions of Sangam Age'. The Hindu Weekly**

Review.

1966. Corpus of the Tamil-Brahmi Inscriptions. (Reprinted in Seminar on Inscriptions, 1968, ed. R. Nagaswamy, Chennai.)

1968. 'Tamil-Brahmi Inscriptions of the Sangam Age', Second International Conference-Seminar of Tamil Studies (published in 1971).

1977. The Indus Script: Texts, Concordance and Tables. ASI, Delhi.

1986. Agastya Legend and the Indus Civilization. Journal of the Tamil Studies, 30: 24-37.

1989. 'What do we know about the Indus Script? Neti Neti ('not this nor that')'. Proceedings of Indian History Congress: 49th session, Dharwar 1988, pp. 599-628.

1995. 'An Encyclopaedia of the Indus Script': Review of AskoParpola's The Deciphering of the Indus Script,1994. Book Review 19(6): 9-12. தமிழில் கா. ராஜன்: சிந்துவெளி எழுத்துக்களுக்கு ஒரு களஞ்சியம். ஆவணம் 7 (1996), 137-60.

1996. 'Pottery Inscriptions in Brahmi and Tamil-Brahmi', in The Ancient Port of Arikamedu: New Excavations and Researches 1989-92, ed. Vimala Begley, et al. pp. 173-88.

1999. Murukan in the Indus Script'. Journal of the Institute of Asian Studies, 16(2): 21-39.

2003. Early Tamil Epigraphy: From the Earliest Times to the Sixth Century CE. Crea-A, Chennai & Harvard University University.

2014. Early Tamil Epigraphy: From the Earliest Times to the Sixth Century CE., [Þóí¢ì£ñ¢ðî¤ð¢¹] Chennai: Central Institute of Classical Tamil.

# பேராசிரியர். சாந்தகுமார்

29.07.1956 அன்று வடார்க்காடு மாவட்டம், வாலாஜா வட்டம், வன்னிவேடு என்ற சிற்றூரில் எம்.ரெங்கசாமி - ருக்குமணி தம்பதியினருக்கு மூன்றாவது குழந்தையாக பிறந்தார். இவருடைய பெற்றோருக்கு நான்கு பெண் பிள்ளைகளும் மூன்று மகன்களும் உள்ளனர்.

உள்ளூரில் பள்ளிப் படிப்பை முடித்து சென்னை வியாசர்பாடியில் உள்ள டாக்டர் அம்பேத்கார் அரசுக் கலைக் கல்லூரியில் பி.ஏ.வரலாறு படித்தார் பின்னர் சென்னை பல்கலைக் கழகத்தில் உள்ள பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் துறையில் எம்.ஏ., பட்டம் பெற்றார். மனைவியின் பெயர் டெய்சி. தணிகைவேலன் என்னும் மகனும், பத்மினி என்னும் மகளும் உள்ளனர். மகன் சென்னை லயோலோ கல்லூரியில் டிஜிட்டல் ஜெர்னலிசம் துறையில் உதவிப் பேராசிரியராக உள்ளார். மகள் அமெரிக்காவில் கணவருடன் வசித்து வருகிறார்.

பேராசிரியர் அவர்கள் முதலில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையில் அருங்காட்சியகக் காப்பாளராக கொற்கை, குற்றாலம் அருங்காட்சியகங்களில் பணியாற்றியுள்ளார். பின்னர் மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் அதன் துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் கோ.தங்கவேலு அவர்களின் காலத்தில் உதவிப் பேராசிரியராக பணியில் சேர்ந்தார் அத்துறையில் தொடர்ந்து

பணியாற்றி துறைத் தலைவராக உயர்ந்து பணிநிறைவுப் பெற்றார்.

TEMPLES OF AMBASAMUTHIRAM TALUK - என்னும் தலைப்பில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றார். ROMAN COINS IN PANDIYAN KINGDOM என்பது இவருடைய எம்.ஃபில்., பட்ட ஆய்வு தலைப்பாகும். OVERSEAS TRADE OF SANGAM TAMILS, LOTUS IN INDIAN CULTURE, UNTOUCHABILITY IN TAMILNADU - PROBLEMS AND PERSPECTIVE ஆகிய தலைப்புகளில் கட்டுரைகளும் நூல்களும் எழுதியுள்ளார். இருதய நோய் பாதிப்பின் காரணமாக 18.1.2019 அன்று உயிர் நீத்தார். தொல்லியல் கழகம் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கின்றது.

## பேராசிரியர் ந. அதியமான்

தோற்றம்: 1961
மறைவு 28-12-2018



தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் கடல் சார் வரலாறு கடல்சார் தொல்லியல் துறைப் பேராசிரியருமான ந. அதியமான் 28.12.2018 அன்று மதியம் 12 மணி அளவில் உடல்நிலைக்குறைவினால் இயற்கை எய்தினார். அவருக்கு வயது 55. தமிழ் நாட்டில் கடல் ஆய்வில் நிபுணரான அதியமான் பூம்புகார் கடல் அகழாய்வில் கோவா தேசிய கடலாய்வு நிறுவனத்துடன் இணைந்து ஈடுபட்டவர். தொல்லியல் அகழாய்வுகளில் பேராசிரியர்கள் ராஜன், ராஜவேலு ஆகியோருடன் இணைந்து தமிழ் நாட்டில் மயிலாடும்பாறை, தாண்டிக்குடி, மந்திரிப்பட்டினம் ஆகிய இடங்களில் இணைந்து ஈடுபட்டவர். 30 ஆண்டுகள் ஆசிரியராக பணியாற்றிய இவர் 15க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். அதியமான் தொல்லியல் கழகம், தென்னிந்திய நாணயவியல் கழகம். இடப்பெயராய்வுக் கழகம் தமிழ்நாடு வரலாற்றுக் கழகம், தென்னிந்திய வரலாற்றுக் கழகம் ஆகியவற்றின் வாழ்நாள்த்தின் உறுப்பினராகவும் இருந்தார். தொல்லியல் கழகத்தின் பொருளாளராகவும் செயற்குழு உறுப்பினராகவும் இருந்த அவர்க் தொல்லியல் கழகத்தின் வளர்ச்சிக்கு வித்திட்டவர்களில் ஒருவராவார். பேராசிரியர் ந. அதியமான் இழப்பு அவரத் குடும்பத்திருக்கு மட்டுமன்றி தொல்லியல் உலகிற்கும் பேரிழப்பாகும். அன்னாரின் குடும்பத்தாருக்கும் நண்பர்களுக்கும் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

# கட்டுரையாளர்கள்

| | |
|---|---|
| அகிலா, இரா (641) | அரியலூர் |
| அருண்குமார் (740) | கள்ளக்குறிச்சி |
| அர்ச்சுனன்,கோ.(72) | சென்னை |
| ஆறுமுக சீதாராமன்(126) | தஞ்சாவூர் |
| ஆனந்தகுமார்,இரா (563) | கோதண்டராமபுரம் |
| இம்மானுவேல், வே ((942) | உளுந்தூர்பட்டு |
| இரமேசு.ச (898) | சமத்தூர் |
| இராஜகோபால், சு (8) | சென்னை |
| இராஜேந்திரன், கரு (16) | மேலப்பனையூர் |
| உத்திராடம்,கோ.(286) | சென்னை |
| உமர்பாருக்(946) | கம்பம் |
| கண்ணகி கு, (642) | அரியலூர் |
| கண்ணதாசன், சோ (691) | தஞ்சாவூர் |
| கந்தசாமி.போ. (524) | இராஜபாளையம் |
| கலைச்செல்வன்,வை (789) | செல்லியம்பாளையம் |
| காந்தி, ம. (139) | வேலூர் |
| கார்த்திகேயன்,தி (859) | அரியலூர் |
| கிருஷ்ணமூர்த்தி ச. (234) | சென்னை |
| குமரவேல்,க.(956) | அரியலூர் |
| சக்தி பிரகாஷ்(872) | ஈரோடு |
| சங்கர நாராயணன்,ஈ.((588) | தூத்துக்குடி |
| சங்கர்,அ (492) | தஞ்சாவூர் |
| சந்திரபோஸ், (114) | புதுக்கோட்டை |
| சன்முகம்.ப (9) | சென்னை |
| சாய்கவிதா, ப (378) | அரியலூர் |
| சீனிவாசன்,கா.(746) | ஓமலூர் |
| சுந்தரம்,து (556) | உடுமலை |
| சுபாஷினி,இர. ((780) | சென்னை |
| செல்வபாண்டியன், | மகீழ்பாவூர் |
| செவ்வேள், வே (380) | அரியலூர் |
| சேகர்,இரா (527) | வேலூர் |
| தியாகராஜன்,இல(50) | அரியலூர் |
| தில்லை கோவிந்தராஜன், (336) | தஞ்சாவூர் |
| துளசேந்திரன், ஆ (334) | தஞ்சாவூர் |
| நீதிதாஸ் விஜயராஜ் (904) | திருவண்ணாமலை |
| நெடுஞ்செழியன், வே(651) | திருவண்ணாமலை |
| பரந்தாமன்,சீ (720) | கிருஷ்ணகிரி |
| பராந்தகன் தமிழ்ச்செல்வன் (786) | புதுச்சேரி |
| பவானி. மா (256) | தஞ்சாவூர் |
| பழனிச்சாமி (921) | திருவண்ணாமலை |
| பன்னீர்செல்வம், க (168) | வஞ்சியூர் |
| பாரதிராஜா, ((957) | வேட்டவலம் |

| | |
|---|---|
| பாலமுருகன்,ச(709 | வேங்கிக்கால் |
| பாலமுருகன்,ப. (543) | மைசூரு |
| பாவெல்பாரதி (741) | தேனி |
| பிரகாஷ் த.ம (929) | திருவண்ணாமலை |
| பிரசன்னா.கோ. (441) | சென்னை |
| பூங்குன்றன், (25) | வேலூர் |
| பூபாலன். ப,(230) | இராணிப்பேட்டை |
| பெரியார்மன்னன்(892) | வாழைப்பாடி |
| பெருமாள்,அ.க (542) | நாகர்கோவில் |
| பெருமாள்,கோ (839) | பேளூர் |
| பொன்னம்பலம், சி(757) | வாழைப்பாடி |
| பொன்னுசாமி, க (776) | திருப்பூர் |
| மங்கையர்கரசி (57) | விழுப்புரம் |
| மணி, இரா (345) | வேலூர் |
| மணிகண்டன், (772) | மங்களூர் |
| மணியரசன்,மு.க (927) | திருவண்ணாமலை |
| மதன்மோகன் (931) | திருவண்ணாமலை |
| முத்துக்குமார், வீ,(443) | தஞ்சாவூர் |
| யதீஸ்குமார் வி.ப. (198) | திருச்சிராப்பள்ளி |
| ரங்கநாதன் த. (648) | விழுப்புரம் |
| ரமேஷ்,த, (647) | விழுப்புரம் |
| ரமேஷ்குமார் சாமு (598) | அவினாசி |
| ரமேஷ்மாசேதுங், (900) | மதுரை |
| ரவிக்குமார்,சு, (640) | உடுமலை |
| ராமசுந்தரம்(833) | சென்னை |
| ராஜாமுகமது,ஜெ (116) | புதுக்கோட்டை |
| ராஜ்பன்னீர்செல்வம் (744) | திருவண்ணாமலை |
| வசுமதி,அ (618) | அரியலூர் |
| வள்ளி சொக்கலிங்கம் (45) | காரைக்குடி |
| விஜயராமு (794) | கீழக்கரை |
| வீரராகவன்,சி (447) | விழுப்புரம் |
| வெங்கடேசன்,ந (265) | வி?ல்லியனூர் |
| வெங்கடேசன்,ப. (109) | வாலாஜாப்பேட்டை |
| வெங்கடேசன்,பொன் (719) | ஆறகழூர் |
| வேலாயுதராஜா(728) | திருப்பத்தூர் |
| வேலுச்சாமி, வ (873) | சென்னை |
| ஜான்பீட்டர், பீ.(198) | சேலம் |
| ஜீவநாராயணன் (829) | பெத்தனாயக்கன்பாளையம் |
| ஜெகதீசன் (134) | கோயம்புத்தூர் |
| ஜெயக்குமார்,ப (5) | தஞ்சாவூர் |
| ஜெயபாரதி, சு (716) | தஞ்சாவூர் |
| ஜெய்சங்கர். க, (854) | அரும்பாவூர் |

Archaeological Societym Thanjavur – 613010

RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2019

| Receipts | Amount | Payments | Amount |
|---|---|---|---|
| To Opening Balance | | | |
| Cash in hand | 6,475 | Courier & Postage | 9,038 |
| Cash at Bank | | Stationary | 6,882 |
| Indian bank | 5,952 | Xerox | 450 |
| SBI | 5,557 | Printing Charges | 1,12,700 |
| BOI | 14,336 | salaray | 15,000 |
| Book Sales | 17,867 | Audit Fees | 1,500 |
| Membership Fees | 1,58,000 | Honorarium | 10,000 |
| Donation | 20,000 | Freight charges | 10270 |
| Interest | 40,240 | Travelling expenses | 443 |
| Annual membership | 100 | Sundries | 5608 |
| Postal charges | 550 | Bank FD Commission | 177 |
| Fixed deposits | 6,77,000 | Fiixed Deposti | 7,33,000 |
| | | Indian Bank (28) | 14,711 |
| | | BOI (442) | 3,564 |
| | | SBI (159) | 21,665 |
| | | Cash in Hand | 1069 |
| Total | 9,46,077 | Total | 9,46077 |

CA.P.PRAKASH(M.No:242383)
Thanjavur



Archaeological Societym Thanjavur – 613010

INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2019

| Receipts | Amount | Payments | Amount |
|---|---|---|---|
| Courier & Postage | 9,038 | Book Sales | 17,867 |
| Stationary | 6,882 | Membership Fees | 1,58,000 |
| Xerox | 450 | Donation | 20,000 |
| Printing Charges | 1,12,700 | Intrest | 40,240 |
| Salaray | 15,000 | Annual membership | 100 |
| Audit Fees | 1,500 | Postal charges | 550 |
| Honorarium | 10,000 | | |
| Freight charges | 10270 | | |
| Travelling expenses | 443 | | |
| Sundries | 5608 | | |
| Bank FD Commission | 177 | | |
| Exess of income over expenditre | 64,689 | | |
| Total | 2,36,757 | TOTAL | 2,36,750 |

Archaeological Societym Thanjavur – 613010

BALANCE SHEET AS ON 31st MARCH 2019

| Liabilities | Amount | Assets | Amount |
|---|---|---|---|
| Fund A/c | 7,92,709 | Funniture Stand | |
| | | Cupboard | 18,700 |
| | | Fixed Deposit | 7,33,000 |
| | | Indian Bank | 14,711 |
| | | BOI | 3,564 |
| | | SBI | 21,665 |
| | | Cash in Hand | 1,069 |
| TOTAL | 7,92,709 | TOTAL | 7,92,709 |

CA.P.PRAKASH(M.No:242383)
Thanjavur



# ஆவணம்

An International Journal of Archaeological Society

தொல்லியல் கழகம், தஞ்சாவூர்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும் கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது வரலாற்றில் ஈடுபாடுடைய அனைவரின் இல்லங்களிலும் இடம் பெற வேண்டிய இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

ஆவணம் இதழ்கள் -1 முதல் 24 முடிய இருப்பு இல்லை

ஆவணம் 25-29 ரூ. 350/- இதழ் ஒன்றுக்கு

இடைக்காலத் தமிழ்நாட்டில் நாடுகளும் ஊர்களும் (பொ.ஆ.800-1300) ரூ.100/-

தமிழ்நாட்டு எழுத்து வளர்ச்சி ரூ.150/- சிலையும் கலையும்-ரூ.300/-

முருகு -ரூ.300/- ஆவணக் கட்டுரையாளர்கள் முகவரி நூல் -ரூ. 50/-

ஆவணம் பொருளடக்கம் -ரூ.100/- இந்நூல்கள் விற்பனைக்கு உள்ளன.

மேற்குறித்த நூல்களைப் பெற விழைவோர் நூலிற்கான தொகையுடன் அஞ்சல் செலவிற்காக ரூ. 100/ யை வரைவோலை காசோலை அல்லது பணவிடை வழியாக செயலர்/பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

தொல்லியல் கழகத்தில் உறுப்பினராக வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் -ரூ.3000/-

நிறுவன உறுப்பினர் கட்டணம் ரூ. 4000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ. 50/- செயலருக்கு அனுப்பி வைக்க வேண்டும்

வரைவோலை, காசோலை பணவிடைகள் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால் கூடவே வங்கிக் கட்டணம் ரூ.100/- ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும். ஆவணம் இதழை நேரிலும் பெற்றுக் கொள்ளலாம் அல்லது அஞ்சலில் பெற ரூ.100/- பணவிடை அனுப்பவும் மேலும் தொடர்புக்கு:

முகவரி

செயலர்/பொருளாளர்

தொல்லியல் கழகம்

கடல்சார் வரலாறு & கடல்சார் தொல்லியல் துறை

தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் -613 010.

Contact:

Archaeological Society

C/O. Department of Maritime History & Marine Archaeology

Tamil University, Thanjavur -613010

ISSN 09731831

